# நால்வர் நான்மணி மாலை
# உரை ஆய்வு

ந. குப்பன்




7, திரு நகர் இணைப்பு, ஆழ்வார் திருநகர்,
சென்னை - 600 087

# நூற் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | நால்வர் நான்மணிமாலை உரை ஆய்வு (1990-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெற்ற எம்.பில். ஆய்வேடு) |
| | | "THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AIDTO PUBLISH RELIGIOUS BOOKS" |
| | | திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் வாயிலாக சமய நூல்களை வெளியிடும் நிதியுதவித் திட்டத்தின் கீழ் இந்நூல் வெளியிடப் பெறுகிறது. |
| ஆசிரியர் | : | ந. குப்பன் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு, டிசம்பர் 1994 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே |
| தாள் | : | 55 ஜி. எஸ். எம் |
| நூலின் அளவு | : | 21 × 14 செ. மீ. |
| எழுத்து | : | 10 புள்ளிகள் |
| பக்கம் | : | xvi + 168 = 184 |
| படிகள் | : | 1100 |
| அச்சகம் | : | அவ்வை அச்சுக்கூடம்<br>இராயபுரம்<br>சென்னை - 600 013 |
| நூல்கட்டு | : | படிவத் தையல் (Limp Binding) |
| விலை | : | ரூ. 35 |



என்னுள் இருந்து என்னை இயக்கும்

ஓர் உந்து சக்திக்கு இந்நூல்

காணிக்கை.

சிவமயம்

ஸ்ரீ பாலசித்த குருவே நம:



திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருமடம்
மயிலம்-604 304 & பொம்மையபாளையம் - 605 114.
விழுப்புரம் ராமசாமி படையாட்சியார் மாவட்டம்

**ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்**

# ஆசியுரை

தமிழ்மொழி தொன்மையும் இனிமையும் மிக்கது. இம் மொழியினை பக்திமொழி எனப் போற்றினர் ஆன்றோர். தமிழைப் பக்திமொழியாகச் சிறப்பித்து உயர்த்தியவர்கள் இறையியல் கவிஞர்கள் ஆவர். இவர்களுள் கற்பனைக் களஞ்சியம் எனப் புலவர்களால் போற்றப் பெறுபவர் ஸ்ரீசிவப்பிரகாச சுவாமிகள் ஆவார். இவர் நமது ஆதீன இரண்டாம் குருமூர்த்தியாகிய ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளை சிவபரம் பொருளாகக் கண்டு அவர்களிடம் வீரசைவ சமயாசாரத்தின் வழி தீக்கைப் பெற்று சிறந்த சிவானுபூதிச் செல்வராகத் திகழ்ந்தார். ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தம் இறையியல் அனுபவங்களை பிள்ளைத் தமிழ், தாலாட்டு, கலம்பகம் போன்ற நூல்களின் வாயிலாகக் கூறியுள்ளார்.

இறையடியவர்களின் சமுதாய சமய வாழ்வியலைக் கூறும் முறையில் 'பெரிய புராணச் சுருக்கம்' எனப் போற்றத்தக்க நால்வர் நான்மணிமாலை என்னும் இலக்கியத்தின்வழி அடியார்களைப் போற்றியுள்ளார் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள். இந்நூல் எல்லோராலும் பாராட்டபெறும் பான்மையது. சொல் வளமும், பொருட் செறிவும், கற்பனை நயமும், தத்துவ நுண் பொருள்களும் ஒருங்கே வாய்க்கப் பெற்றது. சிறப்பு மிக்க இந் நூலிற்கு எழுதப் பெற்ற உரைகளை ஆய்வுபொருளாகக்

கொண்டு ஆராய்ந்த திரு ந. குப்பன் அவர்களுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் எம்ஃபில் பட்டம் கொடுத்துப் பாராட்டி யிருக்கிறது.

நால்வர் நான்மணி மாலை உரைகள் என்னும் இவ் ஆய்வு நான்கு இயல்களாகப் பகுக்கப் பெற்றுள்ளது. நால்வர் நான் மணிமாலை அறிமுகம் என்னும் முதல் இயலில் நூலாசிரியர் வரலாறு, சிறப்பு, உரைகள் ஆகியன கூறப் பெற்றுள்ளன. உரைகளின் இயல்புகள் என்னும் இரண்டாம் இயலில் நால்வர் நான்மணி மாலை உரைகளின் இயல்புகள் பல்வகையாகப் பகுக்கப் பெற்று ஆய்வு செய்யப் பெற்றுள்ளன. மூன்றாம் இயல் உரைகளின் இலக்கணக் கூறுகளை விவாதிக்கின்றது. தத்துவ நுண் பொருள்கள் நான்காம் இயலில் ஆராயப் பெறுகின்றன.

இவ்ஆய்வு நூல் கற்றுப் போற்றற்கு உரியது. இந்நூலா சிரியர் திரு. ந. குப்பன் நமது ஆதீனத் தமிழ்க்கல்லூரியில் பயின்றவர். கடுமையான உழைப்பும் சமய ஈடுபாடும் கொண்ட இவர், இதுபோன்ற பல சமயநூல்களை ஆராய்ச்சி செய்து புகழ் பெற்று பல்வளங்கள் பெற எங்கள் மயிலம் ஸ்ரீ முருகப் பெரு மான் திருவருளும் ஆதீ ஸ்ரீ பாலசித்தர் குருவருளும் துணை புரிவன ஆகுக என வாழ்த்துகின்றோம்.

சென்னைப் பல்கலைக்கழகம்
தமிழ் மொழித்துறை



டாக்டர் வ. ஜெயதேவன்
பேராசிரியர்

சென்னை-600 005
12—12—1994

# அணிந்துரை

தொண்டை நாட்டில் தொல்புகழ் சான்ற காஞ்சித் திரு நகரில் தோன்றித் துறைமங்கலம் என்னும் ஊரினை உறை விடமாகக் கொண்டு வீரசைவ நெறி நின்று சமயஞ்சார் தமிழ்த் தொண்டு புரிந்த அருள்திரு சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய நூல்களுள் மணிமுடியாக மதிக்கப் பெறும் மாண்பினைப் பெற்றுத் திகழ்வது நால்வர் நான்மணிமாலை ஆகும். சைவ சமய குரவர்கள் எனச் சிறப்பாகப் பேசப்படும் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் பற்றி முறையே வெண்பா, கலித்துறை, விருத்தப்பா, அகவற்பா என்னும் நால்வகை யாப்பில் மாலை என்னும் சிற்றிலக்கிய வகையினதாகச் சிவப்பிரகாசர் இயற்றிய நாற்பது பாமணி களின் மாலையாக, இந்நூல் இதன் பெயருக்குப் பொருத்தமாகப் பொலிகின்றது. அன்றியும் இது 'குட்டிப் பெரியபுராணம்' எனவும், 'பெரியபுராணச் சுருக்கம்' எனவும் நூற்பொருண்மை நோக்கிப் போற்றப்பெறும் பாங்கினதாகும்.

இந்நூலுக்கு ஏழு உரைகள் இதுகாறும் எழுந்துள்ளன. இவற்றுள் விருத்தியுரை என்னும் வகையின்பாற்படும் நான்கு உரைகளை அடிப்படையாகக் கொண்டு என் இனிய மாணவ நண்பர் திரு. ந. குப்பன் அரிதின் முயன்று இவ்வரிய ஆய்வு நூலைத் தமிழ் உலகிற்கு அளித்துள்ளார். இந்நூலின் முதல் இயல் நால்வர் நான்மணிமாலை பற்றிய அறிமுகமாக விளங்கு கிறது. இரண்டாவது இயல் ஆய்வுக்குக் கொள்ளப்பெற்ற நான்கு உரைகளின் பொது இயல்புகளைப் புலப்படுத்துகிறது. மூன்றாவது நான்காவது இயல்கள் முறையே உரைகளில்

அமைந்துள்ள இலக்கணக் கூறுகள் பற்றியும் தத்துவக் கூறுகள் பற்றியும் ஆழ்ந்து ஆராய்கின்றன. இவ்வாய்வு வழிப்பெறப் பட்ட முடிபுகளைத் தொகுத்தளிப்பதோடு இனிமேற்கொள்ள வேண்டிய ஆய்வுகளையும் முடிவுரை சுட்டிக் காட்டுகின்றது. பின்னிணைப்பு ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படும் பான்மையினதாகும்.

விரக்தியின் விளிம்பில் நின்று கொண்டு ஆழ்ந்தும் தோய்ந் தும் ஆய்வு புரிவதில் நாட்டமின்றி எளிய பொருளைத் தெரிவு செய்து கொண்டு நுனிப்புல் மேயும் இன்றைய இளம் ஆய் வாளர்களிடையே திரு. குப்பன் வேறுபட்டு — வான உடுக் களிடையே வட்ட நிலவென விளங்குகிறார் என்பதற்கு இந் நூல் சான்று பகர்கின்றது. ஆதலின், வாழ்த்துதலுக்கும் பாராட்டுதலுக்கும் அவர் உரியவராகிறார்.

ஒரு தனி நூலுக்கு எழுந்த பல்வேறு உரைகளை ஒப்பு நோக்கி நிகழ்த்தப்பெற்ற முன்னோடி ஆய்வு என்னும் சிறப்பு முத்திரை இந்நூலுக்கு உண்டு. தமிழ் கூறு நல்லுலகம் இதனை வரவேற்றுப் போற்றும் என நம்புகின்றேன். திரு. குப்பனின் உழைப்பு, அறிவாற்றல், பண்பாடு ஆகியன என்றும் என் பாராட்டுக்குரியவை. அவரது ஆய்வுப் பணிகள் தொடர வேண்டும்; அவையனைத்தும் இதுபோன்று அழகிய நூல் வடிவம் பெறவேண்டும் என வாழ்த்தி மகிழ்கின்றேன்.

அன்பன்,

*12-11-94.*

# முகவுரை

இரையும் இறையும் முறையே உடலையும் உள்ளத்தையும் வளப்படுத்துவன. இரையைத் தேடுவதில் இயல்பாகக் கவனம் செலுத்தும் மனிதன் இறையைத் தேடுவதில் அவ்வளவாக அக் கறை காட்டுவதில்லை. இதனால் உடல் வளப்பட்டாலும் உள்ளம் வளப்படாமல், பண்படாமல் உள்ளது. உடல் வளம் உணர்ச்சி மேலோங்க உதவும். உள்ளவளம் என்பது அறிவின் அடிப்படையில் இயங்குவதற்குக் காரணமாக அமையும். இத னால்தான் 'இரையைத் தேடுவதோடு இறையைத் தேடு' என் றனர் ஆன்றோர்.

'இறை' பல வடிவங்களில் உள்ளது. எனவே இறையைத் தேடியவர்களும் அவ்வுயர்ந்த பொருளைப் பலவடிவங்களில் காண்பதற்கு முற்பட்டனர். சிலரே கண்டனர். இதற்குச் 'சமயங்கள்' என்னும் சமூக அமைப்பு உதவியாக அமைந் துள்ளது.

சமயங்கள் உயிர்களுக்கு வழிகாட்டுவன; நெறிப்படுத்து வன. உலகில் அமைதி, அன்பு, தியாகம் போன்றவற்றைக் கடைப்பிடிக்கவே எல்லாச் சமயங்களும் வலியுறுத்துகின்றன.

சமய உலகில் இறைவனுக்கு அனைவரும் அடியவர்களே. இறைவனின் பெருமையினை பல நூல்கள் பாடுகின்றன. இறை அடியவர்களின் பெருமையினைச் சில நூல்கள் மட்டும் பேசுகின்றன.

அவ்வகையில் சைவ சமய அடியவர்களின் பெருமையினை எடுத்துரைப்பது பெரியபுராணம் ஆகும். பெரியபுராணம் பல சைவ அடியவர்களின் சிறப்பினைக் கூறுகிறது. சைவ சமய அடியவர்களுள் 'சமய குரவர்கள்' என்றும் 'நால் வர்' என்றும் போற்றப்படுபவர்கள் திருஞான சம்பந்தர், திரு நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோராவர். இவர் களின் சமய நெறிகளைப் புகழ்ந்து பாடும் சிற்றிலக்கியம் 'நால் வர் நான்மணிமாலை' என்பதாகும்.

நால்வர் நான்மணிமாலையை இயற்றியவர் கற்பனைக் களஞ்சியம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் ஆவார். இவர் 17 ஆம் நூற்றாண்டின் சிறந்த புலவர். இவர் வீரசைவ நெறியில் நின்று

சமயத் தொண்டும் தமிழ்த்தொண்டும் புரிந்துள்ளார். பல நூல் களை இயற்றியுள்ள இவர், நால்வர் நான்மணிமாலையில் நால் வரில் ஒவ்வொருவர் குறித்தும் 10 பாடல்கள் வீதம் மொத்தம் 40 பாடல்கள் பாடியுள்ளார்.

இப்பாடல்கள் கருத்தாழம் மிக்கவை. எனவே பிற்காலத் தில் இப்பாடல்களின் கருத்துக்களை வெளிப்படுத்த உரை யாசிரியர்கள் பலர் உரை எழுதியுள்ளனர். நால்வர் நான்மணி மாலைக்கு இதுவரை ஏழு உரைகள் வெளிவந்துள்ளன. ஒவ் வொரு உரையும் ஏனைய உரைகளுடன் ஒன்றுபட்டும் வேறு பட்டும் காணப்படுகின்றன. எனவே உரைகளின் சிறப்பு களையும் உரையாசிரியர்களின் தனித்திறன்களையும் வெளிப் படுத்தும் முயற்சியாக இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

சமய குரவர்கள் என்று போற்றப்படும் நால்வரின் சிறப் பினை உணர்த்தும் நால்வர் நான்மணிமாலையைத் தனியாகப் பயில்வதுடன் உரையாசிரியர்களின் நுணுக்கங்களையும் ஒருங்கே படித்து பயன்பெற இவ்ஆய்வு வழிகாட்டியாக அமைந் தது. எனவே இது நூல் வடிவம் பெறுவது மேலும் பயன் நல்கும் என்ற நோக்கில் இது நூலாக்கம் பெறுகின்றது. அறிஞர் களின் கருத்துரைகள் என் எழுத்துப் பணிக்குச் சிறப்பாக அமையும் ஆதலால், அதனை அன்புடன் வேண்டுகிறேன்.

சமூக, சமய நற்பணிகளைச் சிறப்பாகச் செய்துவரும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினர் இந்நூலுக்கு நிதியுதவி அளித்துள்ளனர். எனவே தேவஸ்தானத்தின் நிர்வாகத்தினருக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சமயத் தொண்டும் தமிழ்த் தொண்டும் ஆற்றுவதில் சிறந்து விளங்கும் மயிலம் பொம்மபுர ஆதீனம் அருள்மிகு குருமகா சந்நி தானங்கள் 19—ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலய சுவாமிகள் இந்த நூலுக்கு ஆசியுரை வழங்கியுள்ளார்கள். சுவாமிகளின் திருவடித்தாமரை மலர்களுக்கு உளமார்ந்த நன்றியினைச் செலுத்துவதில் மனநிறைவடைகிறேன்.

ஆய்வுக் காலத்தில் தளர்ந்த போதும் துவண்ட போதும் ஆக்கமும், ஊக்கமும் ஊட்டி நெறிப்படுத்தியதுடன் இவ்ஆய்வு நூல்வடிவம் பெறத் தூண்டி இதற்கு அணிந்துரையும் வழங்கி உதவிய என் பேராசிரியர் முனைவர் வ. ஜெயதேவன் அவர் களுக்கு என்றென்றும் நன்றிக் கடப்பாடுடையேன்.

தமிழ்ப் படிப்பதற்குக் கருவியாக இருந்து என்னை ஊக்கப் படுத்திய கஞ்சனூர் கே. எஸ். சுப்பு நாராயண ரெட்டியார் மற்றும் குடும்பத்தினருக்கும் என்றென்றும் நன்றி கடப் பாடுடையேன்.

ஆய்வுக்குப் பயன்படும் அரிய நூல்களை அளித்து, கருத் துரைகள் வழங்கியதுடன் நூலகத் தேடலின் பொழுது துணை நின்ற மயிலம் ஸ்ரீ சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் க. விநாயகம் அவர்களுக்கு நன்றி யுடையேன்.

சமயச் சிந்தனைகளை எளிமையாகவும், தெளிவாகவும் விளக்கிக் கூறிவரும் சென்னைப் பல்கலைக்கழக சைவ சித்தாந்த துறையின் முன்னாள் தலைவர் பேராசிரியர் முனைவர் வை. இரத்தினசபாபதி அவர்கள் ஆய்வுக் காலத்தில் கருத்துரைகள் அளித்தார். அவர்களுக்கு என் நன்றி உரியது.

மேலும் ஆய்வுக்காலத்தில் பல்லாற்றானும் உதவிய நண் பர்கள் திரு. பா. கார்த்திகேயன், முனைவர் ப. கொழந்தசாமி ஆகியோருக்கு நன்றியுடையேன்.

இந்த நூல் அணிபெற 'நால்வரின்' அரிய உருவப்படத்தை அளித்துதவிய செல்வி சி.தேவி ஸ்ரீதுர்கா மற்றும் அவர்களது குடும்பத்தினருக்கும் என்றும் நன்றியுடையேன்.

ஆய்வின் போதும் நூலகத் தேடலின் போதும் பெருந் துணை புரிந்த நண்பர்கள் மா. பழநி, ஜெ. மோகனன், சா. சரவணன், மு. மூர்த்தி, சி. மூர்த்தி, சற்குருநாதன், க. முருகன், ஆர். குமார், ஆர். ஆனந்தபாபு ஆகியோருக்கும் என் நன்றி உரியது.

இந்த நூலுக்கு அழகிய முறையில் ஓவியம் வரைந்து உதவிய ஓவியர் திரு. டி. இராதாகிருஷ்ணன் அவர்களுக்கும் நன்றி.

புத்தகங்களை அழகான முறையில் அச்சிடுவது என்னும் உயர்ந்த கொள்கையுடன் இந்நூலையும் சிறப்புற அச்சிட்டுள்ள அவ்வை அச்சுக் கூடத்தினருக்கும் அதன் உரிமையாளர் திரு. வே. சேஷாசலம் அவர்களுக்கும் நன்றியுடையேன்.

அன்புடன்<br>
**ந. குப்பன்**<br>
*17-12-94*



ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்

# பொருளடக்கம்

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | ... | உரையாசிரியர் |
| குறள். | ... | திருக்குறள் |
| சூத். | ... | சூத்திரம் |
| தொல்.இடை. | ... | தொல்காப்பியம் இடையியல் |
| தொல்.உரி. | ... | தொல்காப்பியம் உரியியல் |
| தொல்.கிளவி. | ... | தொல்காப்பியம் கிளவியல் |
| தொல்.சொல். | ... | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல்.வேற்.மயங். | ... | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் |
| நன்.உயிர்.புணர். | ... | நன்னூல் உயிரீற்றுப்புணரியல் |
| நன்.பொது. | ... | நன்னூல் பொதுவியல் |
| நூற். | ... | நூற்றாண்டு |
| ப. | ... | பக்கம் |
| ப.ஆ. | ... | பதிப்பாசிரியர் |
| பா. | ... | பாடல் |
| பு.பெ. | ... | புனைப் பெயர் |
| யாப்.காரி.உறுப். | ... | யாப்பருங்கலக்காரிகை உறுப்பியல். |

# முன்னுரை

தமிழ்மொழி காலந்தோறும் வளர்ச்சியுற்று வருகிறது. இவ்வளர்ச்சிக்கு அந்தந்தக் காலங்களில் தோன்றும் இலக்கிய, இலக்கண, தத்துவ நூல்கள் உறுதுணை புரிந்து வருகின்றன. தமிழ் மொழியிலுள்ள இலக்கிய, இலக்கண, தத்துவ நூல்களின் தன்மைகளை வெளிப்படுத்திச் சிறந்த பணி செய்தவர்கள் உரையாசிரியர்கள். உரையாசிரியர்கள் இன்றேல், அரிய நூல்களைக் காணவும், கற்கவும் முடியாத நிலை ஏற்பட்டிருக்கும். எனவே தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு உரையாசிரியர்களும் பெருந்தொண்டு செய்துள்ளதை அறிய முடிகிறது. அவ்வகையில் அவர்களது உரைச் சிறப்பினை ஆராய்தலும் இன்றியமையாதது. இவ் அடிப்படையில் இந்த ஆய்வு நால்வர் நான்மணிமாலை உரைகள் குறித்து அமைகின்றது. இந்த ஆய்வில் ஒரு நூலுக்கு எழுந்த (நால்வர் நான்மணிமாலை) உரைகளின் இயல்புகள் ஆராயப்படுகின்றன.

## உரை ஆய்வுகள்

உ. வே. சாமிநாதையர் தம் பதிப்புகளில் உரையாசிரியர்களின் உரை இயல்புகளை எடுத்துரைத்துள்ளார். உரையாசிரியர்களைப் பற்றி மு. வை. அரவிந்தன் பொது நிலையில் ‘உரையாசிரியர்கள்’ என்னும் நூலில் அவர்களின் உரைத் திறன்கள் சிலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். எனவே இவை பொது அறிமுகமாக அமைகின்றன.

உரையாசிரியர்கள் பற்றிய தனிநிலை ஆய்வுகள் சில நிகழ்ந்துள்ளன. அம்முறையில் நச்சினார்க்கினியர்,[1] பேராசிரியர்[2], அடியார்க்கு நல்லார்[3], பரிமேலழகர்[4], சோமசுந்தர ~~பாரதியார்~~, இளம்பூரணர்[6], சிவஞான முனிவர்[7] ஆகியோர் பற்றிய ஆய்வுகள் அடங்கும். இவற்றில் அடியார்க்கு நல்லார் பற்றிய ஆய்வைத் தவிர்த்து ஏனையவை பிஎச். டி. பட்ட ஆய்வுகளாகும்.

மேலும், மணக்குடவர் உரை[8], இறையனார் அகப்பொருள் உரை[9], சாமுண்டித் தேவநாயனார் உரை[10] (புறப்பொருள் வெண்பாமாலை) ஆகியன பற்றியும் எம். பில். ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன.

மேற்கண்டவற்றின் வாயிலாக ஒரு நூலுக்கு எழுந்த தனி உரையாசிரியரின் உரைத்திறனை வெளிப்படுத்தும் ஆய்வேடுகள் உருவாகியுள்ளதை அறியமுடிகிறது. ஆனால் ஒரு நூலுக்கு எழுந்த பல உரைகள் ஆய்வுக்கு உட்படுத்தப் பெறவில்லை என்பதும் புலனாகின்றது.

### ஆய்வுச் சான்றுகள்

நால்வர் நான்மணிமாலைக்கு ஏழு உரைகள் எழுந்துள்ளன, இவற்றை,

1. பழைய உரை
2. குறிப்புரை
3. கருத்துரை
4. விருத்தியுரை

என நால் வகைப்படுத்தலாம்.

ஆறுமுக நாவலர் எழுதியுள்ள உரை பழைய உரை என இங்குக் குறிக்கப்படுகிறது. இவ் உரை இப்பொழுது கிடைக்கப் பெறவில்லை. சுவாமிநாத பண்டிதர் எழுதியுள்ள உரை குறிப்புரையில் அடங்குகிறது. கருத்துரையில் மு. நடராஜ தேசிகர் இயற்றிய உரை இடம்பெறுகிறது. இவ் உரைகளில் ஆய்வு செய்வதற்கான களங்கள் இன்மையால் அவை ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பெறவில்லை.
விருத்தியுரையில்,

1. சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள்
2. பு. சி. புன்னைவனநாத முதலியார்
3. சென்னை கொ. இராமலிங்கத்தம்பிரான்
4. வை இரத்தினசபாபதி

ஆகியோர் உரைகள் இடம்பெறுகின்றன. இவ் உரைகள், ஆய்விற்கு முதன்மைச் சான்றுகளாக அமைகின்றன. இலக்கிய, இலக்கண, தத்துவ நூல்கள், இவை பற்றிய ஆய்வு நூல்கள்,

உரையாசிரியர்கள் குறித்து எழுந்துள்ள அறிமுக நூல்கள், கட்டுரைகள் முதலியன துணைச் சான்றுகளாக அமைகின்றன.

### ஆய்வு அணுகுமுறை

பகுப்பு மற்றும் விளக்கவியல் முறையைப் பின்பற்றி இந்த ஆய்வு உரைத் திறன்களை விளக்குகிறது. இந்த ஆய்வில் உரையாசிரியர்களின் ஒற்றுமை, வேற்றுமை, தனித்திறன் ஆகியன ஒப்பீட்டு முறையில் விளக்கப்பட்டுள்ளதால் ஒப்பியல் அணுகு முறையும் இடம் பெற்றுள்ளது.

### ஆய்வு அமைப்பு

"நால்வர் நான்மணிமாலை உரை ஆய்வு" என்னும் தலைப்பினைக் கொண்ட இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரை, நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை:

1. நால்வர் நான்மணிமாலை அறிமுகம்
2. உரைகளின் இயல்புகள்
3. உரைகளில் இலக்கணக் கூறுகள்
4. உரைகளில் தத்துவக் கூறுகள்

என்பன.

முன்னுரையில் உரையாசிரியர்கள் பற்றிய ஆய்வுகள், ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகு முறைகள், ஆய்வு அமைப்பு ஆகியன எடுத்துரைக்கப்பெறுகின்றன.

முதல் இயல் 'நால்வர் நான்மணிமாலை அறிமுகம்' என்பதாகும். இந்த இயலில் நூலின் சிறப்பும், நூலாசிரியரின் வரலாறும் எடுத்துரைக்கப்படுகின்றன. நால்வர் நான்மணிமாலைக்கு எழுந்த உரைகளை அறிவதற்கு உரை வரலாறு, பதிப்பு வரலாறு ஆகியன விளக்கப்பட்டுள்ளன. உரை வரலாற்றில் 1. பழைய உரை, 2. குறிப்புரை, 3. கருத்துரை, 4 விருத்தியுரை என உரைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. பதிப்பு வரலாறு என்னும் பகுதியில் கால முறையில் பதிப்புகள் விளக்கப்பட்டு அவற்றின் இயல்புகள் கூறப்படுகின்றன. நால்வர் நான்மணிமாலைக்கு விருத்தியுரைகள் எழுதிய உரையாசிரியர்களின் வரலாறு விளக்கப்பெறுகின்றது.

'உரைகளின் இயல்புகள்' என்னும் தலைப்பிலான இரண்டாம் இயலில், 1. இலக்கியப் புலமை, 2. சொற் பொருளுரைத்தல், 3 நடை நலம், 4. உவமை, 5. உரைப்புலமை, 6. புராண வரலாறு கூறுதல், 7. பாடவேறுபாடு காட்டல், 8. பிற செய்திகள் என்று பாகுபடுத்தி உரைக்கப்படுகின்றன.

'உரைகளில் இலக்கணக் கூறுகள்' என்னும் மூன்றாம் இயலில், 1. இலக்கண நூல் மேற்கோளாட்சி, 2. மேற்கோளாட்சியின் நோக்கம், 3. வடமொழி அறிவோடு இலக்கணங்கூறல், 4. இலக்கணக் குறிப்புத் தருதல் என்னும் நான்கு நிலைகளில் விளக்கப்படுகின்றன

'உரைகளில் தத்துவக் கூறுகள்' என்னும் தலைப்பிலான நான்காம் இயலில், 1. தத்துவ நூல் மேற்கோளாட்சி, 2. மேற்கோளாட்சியின் நோக்கம், 3. உரையாசிரியர்களின் தத்துவ நோக்கு என்பன ஆராயப்படுகின்றன.

ஒவ்வோர் இயலிலும் விளக்கப்படும் கருத்துகள் அந்த இயலின் இறுதியில் தொகுப்புரையாக அமைந்துள்ளன.

முடிவுரையில் இந்த ஆய்வின் வழிப் பெறப்பட்ட முடிபுகள் தொகுத்து உரைக்கப்பட்டுள்ளன.

ஆய்வில் பயன்படுத்திய சான்று எண்களுக்குரிய விளக்கம் ஒவ்வோர் இயலின் இறுதியிலும் அமைந்துள்ளது. இந்த ஆய்வு உரையாசிரியர்களை ஒப்பீடு செய்வதால் மிகுதியும் நால்வர் நான்மணிமாலை உரை நூல்கள் சான்றுகளாக அமைகின்றன. இந்த உரைநூல்களைச் சான்றுகளாகக் குறிக்கப் பின்வரும் முறை இந்த ஆய்வில் பின்பற்றப்படுகின்றது.

உரையாசிரியர்களுக்கு அவர்தம் உரை எழுந்த கால நிரல் படி, பெயருக்குப் பதிலாக உயிரெழுத்துகள் பயன்படுத்தப் பெறுகின்றன. உதாரணமாக,

சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் — அ

(நால்வர் நான்மணிமாலை, மறுபதிப்பு, சென்னை : சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1967).

பு. சி. புன்னைவனநாதன் — ஆ

(நால்வர் நான்மணிமாலை, சென்னை : சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1960).

சென்னை, கொ. இராமலிங்கத் தம்பிரான் — இ
(நால்வர் நான்மணிமாலை, சென்னை : பழனியப்பா பிரதர்ஸ், 1960).

வை. இரத்தினசபாபதி — ஈ
(நால்வர் நான்மணிமாலை, சிதம்பரம் : மணிவாசகர் பதிப்பகம், 1984).

என்பனவற்றைக் கொள்ளலாம். உரையாசிரியர்க்குப் பதிலாகப் பயன்படுத்தப்பெறும் உயிரெழுத்து, நூல் பற்றிய பிறகுறிப்பு களையும் உள்ளடக்கியதாகும். உயிர் எழுத்தினைத் தொடர்ந்து அமையும் முதல் எண் நால்வர் நான்மணிமாலைப் பாடலையும் அதனைத் தொடர்ந்து வரும் எண் உரையாசிரியர், பாடல் உரையில் எடுத்தாளும் மேற்கோள் பாடல்களின் எண்ணிக் கையையும் குறிக்கும். உதாரணமாக,

அ — 6:2;10:1;11:3

என்னும் குறிப்பினைக் கொள்ளலாம்.

பின்னிணைப்பில் உரை நூல்களின் முகப்புப் பக்கங்கள், உரையாசிரியர்களின் இலக்கிய மேற்கோள்கள், இடம் சுட்டா மேற்கோள்கள், புராண வரலாறுகள், இலக்கண மேற் கோள்கள், தத்துவ மேற்கோள்கள், மற்றும் சிவப்பிரகாசர் துதிப்பாடல்கள் ஆகியன இடம்பெறுகின்றன. மேலும் நால்வர் நான்மணிமாலை மூலமும் இடம்பெறுகிறது.

## குறிப்புகள்

1. K. Arumugam, "A Critical Study of Naccinarkkiniyar", Ph. D. thesis, University of Madras, 1964.
2. மா. நன்னன், "பேராசிரியர் உரைத்திறன்", பிஎச். டி ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1978.
3. ச. வே. சுப்பிரமணியன், அடியார்க்கு நல்லார் உரைத் திறன், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1976.

4. இ. சுந்தரமூர்த்தி, "பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன்", பிஎச். டி. ஆய்வேடு, சென்னைப் பல்கலைக் கழகம், 1977.

5. த. இராசவன்னியன், "சோமசுந்தர பாரதியாரின் தொல்காப்பிய உரைத்திறன்", பிஎச். டி. ஆய்வேடு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1978.

6. ப. உருத்திரமணி, "இளம்பூரணர் உரைத்திறன்", பிஎச்.டி. ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1980

7. க விநாயகம், "சிவஞான முனிவர் உரைத் திறன்", பிஎச். டி. ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1987.

8. 8.1. சிவ. கோபாலசாமி, "திருக்குறள் மணக்குடவர் உரை ஓர் ஆய்வு", எம்.பில். ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1982

   8.2. தி. பொற்கொடி "மணக்குடவர் உரை", எம்.பில் ஆய்வேடு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1977.

9. த. கோதண்டபாணி, "இறையனார் அகப்பொருள் உரை", எம். பில். ஆய்வேடு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1978.

10. ஆ. விசயன், "சாமுண்டி தேவநாயனார் உரைத்திறன்", எம்.பில். ஆய்வேடு, சென்னைப் பல்கலைக் கழகம், 1988.

# 1

# நால்வர் நான்மணிமாலை அறிமுகம்

### நூல் — நூலாசிரியர்

ஒவ்வொரு மொழிக்கும் ஒரு தனிச்சிறப்புண்டு. அவ்வகையில் தமிழ்மொழி மிகுதியும் பக்திப் பனுவல்களைப் பெற்றுள்ளது. எனவே இதனைப் 'பக்திமொழி' அல்லது 'தெய்வ மொழி' எனலாம். 'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்'[1] என்னும் சேக்கிழாரின் வாக்கும் இதனை அரண் செய்யும். அவ்வகையில் நால்வர் நான்மணிமாலையை இயற்றிய சிவப் பிரகாசரும் குறிப்பிடத்தக்கவர்.

### நால்வர் நான்மணிமாலை

பக்தி இலக்கிய வகைகளுள், 'மாலை' என்பதும் ஒன்றாகும். மாலை என்னும் இலக்கிய வகையுள் ஒன்றாகிய நால்வர் நான்மணிமாலை சமய குரவர்களின் புகழ்பாடும் இயல்பினது. இந்நூலில் அமைந்துள்ள நாற்பது பாடல்களுள் 1, 5, 9, 13, 17, 21, 25, 29, 33, 37 ஆகியன திருஞானசம்பந்தரையும், 2, 6, 10, 14, 18, 22, 26, 30, 34, 38 ஆகியன திருநாவுக்கரசரையும், 3, 7, 11, 15, 19, 23, 27, 31, 35, 39 ஆகியன சுந்தரரையும், 4, 8, 12, 16, 20, 24, 28, 32, 36, 40 ஆகியன மாணிக்கவாசகரையும் பாடுகின்றன.

நால்வர் நான்மணிமாலை பக்தி பொருண்மை உடையது. இதனைக் 'குட்டிப் பெரிய புராணம்' என்பர் ஆன்றோர். இரட்டை மணிமாலை என்னும் இலக்கிய வகையின் வளர்ச்சி மும்மணிக்கோவை என்னும் இலக்கியத்தைத் தோற்றுவித்ததைப் போன்று மும்மணிக் கோவையின் வளர்ச்சி நான்மணிமாலை என்னும் இலக்கிய வகையைத் தோற்றுவித்தது என்பர்.[2] இவை சிற்றிலக்கியங்களின் வளர்ச்சியைக்

காட்டுகின்றன. சிற்றிலக்கியங்களில் பெரும்பான்மையானவை பக்தி நெறியை வெளிப்படுத்துகின்றன.[3] இவற்றை விதி இலக்கியம் என்றும் வகைப்படுத்துவர்.[4] பக்தி இலக்கியங்கள் இறைவனைப் பாடுகின்றன. இறைவனைப் பாடுதல் இரண்டு வகை: ஒன்று உலகியல் வட்டத்திலிருந்து பாடுதல்; பிறிதொன்று இறைவட்டத்திலிருந்து பாடுதல். இறைவட்டத்தில் இருந்து பாடும்போதே ஞானப்பாடல், மெய்யுணர்வுப்பாடல் ஆகிறது என்பர்.[5] அவ்வகையில் நால்வர் நான்மணிமாலையில் ஆசிரியர் சிவப்பிரகாசர் இறைவட்டத்திலிருந்து நால்வரின் அருட்செயல்களையும், இறையனுபவத்தையும் எடுத்துரைக்கிறார். இவரது வரலாறு இங்கு ஆய்வுப் பொருளாக அமைகிறது.

### சிவப்பிரகாசர்

சிவப்பிரகாசர் என்னும் பெயரில் சிவப்பிரகாச அடிகள், சென்னைக் கரபாத்திரம் சிவப்பிரகாசர், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் என்று மூவர் இருந்ததாகக் கூறுவர்.[6] எனினும் இப்பெயரில் மேலும் புலவர்கள் பலர் இருந்துள்ளதை அறியமுடிகிறது நால்வர் நான்மணிமாலை என்னும் நூலினை இயற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்.

### பிறப்பு

சிவப்பிரகாசர், தொண்டை மண்டலத்தில் (செங்கல்பட்டு எம்.ஜி.ஆர். மாவட்டம்) சிறப்புற்று விளங்கும் காஞ்சி மாநகரில் குமாரசாமித் தேசிகருக்கு முதல் மகனாய்ப் பிறந்தார். இவரது தாயார் பெயரினை அறிய இயலவில்லை. வேலையர், கருணைப்பிரகாசம் என்னும் தம்பியரும், ஞானாம்பிகை என்னும் தங்கையும் சிவப்பிரகாசரின் உடன் பிறந்தவர்கள். குமாரசாமித் தேசிகர் பாடல்கள் சிலவற்றைப் பாடியுள்ளார், வேலையர் சீகாளத்திப் புராணத்தில் இறுதிப் பன்னிரண்டு சருக்கங்களைப் பாடியுள்ளார். கருணைப் பிரகாசர், தாம் வணங்கும் இறைவன் மீது 'இஷ்டலிங்க அகவல்' என்னும் வழிபாட்டு நூலைப் பாடியுள்ளார். இம்முறையில் சிவப்பிரகாசரின் தந்தையும், சகோதரர்களும் கவிபாடும் ஆற்றல் பெற்றிருந்ததை அறிய முடிகிறது.

### கல்வியும், வளர்ச்சியும்

சிவப்பிரகாசர் இளமையில் தன் தந்தையாரிடம் கல்வி பயின்றார். இக்காலத்தில் இவரது தந்தையார் இறந்துவிட்டார்.

அதனால் தன்னுடைய தாயுடனும், உடன்பிறந்தவர்களுடனும் சில காலம் திருவண்ணாமலையில் தங்கியிருந்தார்.[7] மேலும் தருமபுரம், பொம்மபுரம், மயிலம், திருவெங்கை, துறைமங்கலம், சிதம்பரம், நல்லாற்றூர் போன்ற இடங்களுக்கும் சென்றுத்தங்கியுள்ளார். தன் சகோதரி ஞானாம்பிகையைப் பேரூர் சாந்தலிங்க அடிகளாருக்கு மணம் முடித்து வைத்தார். வேலையரும், கருணைப்பிரகாசரும் இல்லறம் ஏற்றனர். சிவப்பிரகாசர் சமசுகிருதம், தெலுங்கு, கன்னட மொழிகளைக் கற்றுப் பன்மொழிப் புலவரானார். தருக்கம் முதலியவற்றில் தேர்ந்தார். இவை சைவ சித்தாந்த – வீர சைவ நெறிகளை நன்கு அறியவும், நூல்கள் படைக்கவும் துணைபுரிந்தன.

## படைப்பாற்றல்

இயல்பாகவே அறிவு நலம் வாய்க்கப் பெற்றவர் சிவப்பிரகாசர். இவர் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்த வெள்ளியம்பலவாண தேசிகர் என்பவரிடம் ஐந்திலக்கணங்களையும் கற்றுத் தேர்ந்தார்.[8] திருவண்ணாமலையில் தன் தாயாருடன் தங்கியிருந்த காலத்தில் சோணசைலமாலை என்னும் தோத்திர நூலைப் பாடியதாக அறிய முடிகிறது. இந்நூல் இவர் செய்த முதல் நூல் ஆகும். இவர்தம் ஞானாசிரியராக விளங்கிய ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் மீது 1. சிவஞான பாலய சுவாமிகள் தாலாட்டு, 2. நெஞ்சு விடு தூது, 3. கலம்பகம், 4. பிள்ளைத் தமிழ், 5. திருப்பள்ளியெழுச்சி ஆகிய நூல்களைப் பாடியுள்ளார். இந்நூல்கள் அவரது குருவின் பெருமையினை எடுத்துரைக்கின்றன.

திருவெங்கை நகரத்தில் இருந்த பொழுது பாடியவை: 1. திருவெங்கைக் கோவை, 2. திருவெங்கைக் கலம்பகம், 3. திருவெங்கையுலா, 4. திருவெங்கையலங்காரம் — இந்நூல் கிடைக்கவில்லை என்பர்.[9] இந்நூல்கள் நான்கும் அந்நகரத்து பழமலை நாதரைப் பாடுவன.

சிதம்பரத்தில், 1. சிவப்பிரகாச விகாசம், 2. தருக்க பரிபாடை, 3. சதமணிமாலை, 4. நால்வர் நான்மணிமாலை ஆகிய நூல்களை இயற்றினார்.

தலங்களை வழிபட்டுச் செல்லும் முறையில் கூவம் என்னும் தலத்தில் திருக்கூவப் புராணம் என்னும் நூலினைப் பாடி அரங்கேற்றினார். பின்னர், பழமலையந்தாதி, பிட்சாடன நவமணி

மாலை, கொச்சகக் கலிப்பா, பெரிய நாயகியம்மை நெடுங்கழி நெடிலாசிரிய விருத்தம், பெரிய நாயகியம்மை கட்டளைக் கலித்துறை என்னும் நூல்களை இயற்றினார்.

சிவப்பிரகாசர் பாண்டிச்சேரியை அடுத்துள்ள பொம்ம புரத் திருமடத்தில் தங்கியிருந்த பொழுது கடற்கரை மணற்பரப் பில் நன்னெறி வெண்பாக்களை எழுதினார். இவற்றைத் தம் இளவல் கருணைப் பிரகாசரை எழுதி வரும்படிக் கூறினார்.

கிறித்தவம் தமிழகத்தில் பரவியபோது அதனை எதிர்த்து 'ஏசுமத நிராகரணம்' என்னும் நூலினை சிவப்பிரகாசர் இயற்றியதாக அறியமுடிகிறது. எனினும் இந்நூல் கிடைக்க வில்லை.

நல்லாற்றூர் திருமடத்தில், சிவநாம மகிமை, அபிடேக மாலை, நெடுங்கழிநெடில், குறுங்கழிநெடில், நிரஞ்சனமாலை, கைத்தலமாலை, கண்ணப்பச் சருக்கம், நக்கீரச் சருக்கம் என்பனவற்றை அவர் இயற்றினார்.

சிவப்பிரகாசர் தனது பிறமொழிப் புலமையால் வேதாந்த சூடாமணி (கன்னடம்), சித்தாந்த சிகாமணி (வடமொழி), பிரபுலிங்க லீலை (கன்னடம்) என்னும் நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தார்.

மேற்கண்ட சான்றுகளால் சிவப்பிரகாசர் கவிபாடும் ஆற்றல், உரைநடை ஆக்கத் திறன், மொழி பெயர்ப்புப் புலமை முதலாய பல்திறப் படைப்பாற்றல் மிக்கவர் என்பது புலனாகிறது.

வழிபாடு

சமய உலகில் வழிபாடுகள் சிறப்பிடம் பெறுகின்றன. இந்த வழிபாடுகள் மக்களை ஒன்று சேர்க்கின்றன.[10] சிவப் பிரகாசரும் வழிபாட்டினைக் கடைப்பிடித்தார். இவரது வழி பாட்டினை, 1. குருவழிபாடு, 2. தலவழிபாடு என்னும் இரண்டின் வழி அறியமுடிகிறது.

குரு வழிபாடு : குருவின் வாயிலாக இறைவனை அடைதல் என்பது சைவ சமய வழிமுறை.[11] குருவினைச் சமய குரு, ஞான குரு என்று இருவகைப்படுத்துவர். சிவப்பிரகாசருக்குச் சமய குருவாக விளங்கியவர் திருவண்ணாமலை தெற்கு வீதி

மடத்திலிருந்த சாளிகந்த குரு தேவர்.[12] ஞான குரு பொம்ம புரத்து (மயிலம்) சிவஞான பாலய சுவாமிகள். இதனை,

என்ன தவவுதவி யீதென் றுணர்கிலேன்
மன்னு சிவ ஞானமுனி வந்துற்றான் — தன்னைநிகர்
மாசங் கெடுக்கும் மலர்த்தடஞ்சூழ் கச்சியிலெம்
பாசங் கெடுக்கும் படி.

(சிவஞான பாலய சுவாமிகள் கலம்பகம், 20)

என்பதால் அறியலாம்.

சிவப்பிரகாசர் ஞான குருவைப் போற்றிப் பாடுவதற்குத் தனி இலக்கிய வகைகளைப் பயன்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. தன் ஞான குருவைப் போற்றும் முறையில் செய்த இலக்கியங்கள் முன்னர்க் (படைப்பாற்றல்) குறிக்கப் பெற்றுள்ளன.

தலவழிபாடு : திருத்தலங்களில் வீற்றிருக்கும் இறைவனை வழிபட்டுத் தலப்பெருமையை எடுத்துரைப்பது தலவழிபாட்டு முறையாகும். சிவப்பிரகாசர் திருவண்ணாமலை, திருச்செந்தூர், சிதம்பரம், கூவம், பழமலை (விருத்தாசலம்), திருவெங்கை, துறைமங்கலம் முதலிய தலங்களிலுள்ள இறைவனை வழி பட்டுள்ளார் இத்தலப் பெயர்களோடு இவர் பெயரையும் இணைத்துத் 'துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்' என்றும் 'நல்லாற்றூர் சிவப்பிரகாச சுவாமிகள்' என்றும் அழைக்கப்படு கிறார். மிகுதியான நாள்கள் இவர் உறைந்த தலங்களோடு இணைத்து இவர் பெயர் அழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

## ஆதரித்தவர்

சிவப்பிரகாசரை ஆதரித்தவர் அண்ணாமலை ரெட்டியார். அவர் வீர சைவ மரபினர். சமயப் பற்றையும் அடியாரின் நலனையும் பேணியவர். சிவப்பிரகாசரின் புலமை, ஆழ்ந்த கடவுள் பத்தி, தூய துறவுள்ளம் போன்ற பண்புகள் அண்ணாமலை ரெட்டியாரைக் கவர்ந்தன. இவர் திருவெங் கனூரிலும், துறைமங்கலத்திலும் சிவப்பிரகாசருக்குத் திரு மடங்கள் கட்டித் தந்தார்.[13] இவரது ஆதரவு சிவப்பிரகாசரின் இலக்கியங்கள் பல எழத்துணையாக அமைந்தது.

## சமயத் தொண்டு

சிவப்பிரகாசர் வீர சைவ நெறியில் பிறந்தவர். வீர சைவ நெறியைப் பரப்ப இவர் இலக்கியங்கள் உறுதுணை புரிவன. இவரது நூல்களின் வழி சமயத் தத்துவங்கள் விளக்கமுறுகின்றன. சிவப்பிரகாசர் காலத்தில் ஆங்கிலேயர் சமயமாகிய கிறித்தவம் தமிழகத்தில் பரவியது.[14] "அகராதி செய்த வீரமா முனிவரென்பவர் எதிர்ப்பட்டு ஏசுமதமாகிய தங்கொள்கையை நாட்டுதற் பொருட்டுத்தருக்கஞ் செய்ய; உடனே, அக்கொள்கையை மறுத்து, ஏசுமத நிராகரணமெனப் பெயரிய ஒரு நூலை அருளிச் செய்தார்" என்பர்.[15] இவற்றின் வழியும் இவரது சமயத் தொண்டினை அறிய முடிகிறது.

## காலம்

சிவப்பிரகாசர் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்.[16] பதினேழாம் நூற்றாண்டில் குமரகுருபரர், சிவப்பிரகாசர் என்னும் இருவரும் படைப்பாற்றலில் சிறந்து விளங்கினர்.[17] இதனை, பதினேழாம் நூற்றாண்டைச் சிறப்பித்த தமிழ்ப் புலவர்களில் குமரகுருபரரை அடுத்து விளங்கியவர் சிவப்பிரகாசர் என்பதனாலும் அறியலாம்.[18] மேலும் அறிஞர்கள் சிலர் இவரது காலம் பதினேழாம் நூற்றாண்டு என்று கொள்கின்றனர்.[19] இம்முறையில் இவர் பதினேழாம் நூற்றாண்டைச் சார்ந்தவர் எனக் கொள்ள இடமுண்டு.

## இறைவனோடு இணைதல்

பலவகை இலக்கியங்கள், சமயத் தொண்டு ஆகியவற்றைச் செம்மையாகச் செய்த சிவப்பிரகாசர் தமது முப்பத்திரண்டாம் வயதில், பௌர்ணமித் திதியில் நல்லாற்றூர் மடத்தில் இறைவனோடு இணைந்தார்.[20] இவரது இழப்பைத் தாங்காத வேலையர்,

> அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
> சொல்லு மிருவரிடைத் தோன்றியயான் — முல்லை
> அரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
> கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்

என்ற வெண்பாவைப் பாடித் தம்முடைய ஆற்றாமையை வெளிப்படுத்தினார்.

மேற்கண்ட முறையில் சிவப்பிரகாசரின் வரலாறு தமிழ் இலக்கிய வரலாற்றிலும், சமயப் பணியிலும் சிறப்புறறு விளங்கு வதை அறிய முடிகிறது.

## உரைகள்—உரையாசிரியர்கள்

உரைகள்

"நால்வர் நான்மணிமாலை" என்னும் நூலுக்கு ஏழு உரைகள் எழுந்துள்ளன. இந்த உரைகளின் இயல்புகளை அறிய உரை வரலாறும், பதிப்பு வரலாறும் துணை புரியும். எனவே வரலாற்று முறையில் அவைகள் குறிக்கப்பெறுகின்றன.

உரை வரலாறு

நால்வர் நான்மணிமாலைக்கு எழுந்த உரைகளை 1. பழைய உரை, 2 குறிப்புரை, 3. கருத்துரை, 4. விருத்தியுரை என நான்காகப் பகுக்கலாம்.

பழைய உரை : ஆறுமுக நாவலர் உரை, வித்தியாநுபாலன யந்திர சாலையின் மூலம் 1873 ஆம் ஆண்டு வெளிவந் துள்ளதை அறிய முடிகிறது.[21] எனினும் இந்த உரைநூல் கிடைக்கப் பெறவில்லை.

ஆறுமுக விலாச அச்சுக்கூடத்தின் வழி வெளிவந்த ஈசானியமடம் இராமலிங்க சுவாமிகள் உரை கிடைக்கவில்லை. இருப்பினும் இந்த உரையைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இரண்டாம் பதிப்பாக வெளியிட்டுள்ளது. இது விருத்தியுரை என்பதில் அடங்குகிறது.

குறிப்புரை : சுவாமிநாத பண்டிதர் எழுதியுள்ள உரை, பாடல்களுக்குக் குறிப்புரையாக அமைந்துள்ளது. இந்தக் குறிப் புரை நூற்பொருளைப் புரிந்து கொள்வதற்கு ஓரளவு துணை புரியும் ஆதலால் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெறவில்லை.

கருத்துரை : மு. நடராஜ தேசிகர் எழுதிய உரை கருத் துரையாக அமைந்துள்ளதால் மூல நூலினைச் சுருக்கமாக அறிய முடிகிறது. எனவே இவ்வுரை நூலும் ஆய்விற்கு உட் படுத்தப் பெறவில்லை.

விருத்தியுரை : தற்பொழுது கிடைக்கும் உரைகளில் நான்கு விருத்தி உரைகள் இடம் பெறுகின்றன. அவை:

1. சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் உரை, 2. பு. சி. புன்னைவனநாத முதலியார் உரை, 3. சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான் உரை, 4. வை. இரத்தின சபாபதி உரை என்பனவாகும்.

இவ்விருத்தியுரைகள் மட்டும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளின் உரை விருத்தியுரையில் சிறப்பிடம் பெறுகிறது. இந்த உரை முழுவதும் அமைந்துள்ள மேற்கோள்கள் இலக்கிய, இலக்கண, தத்துவப் புலமையை வெளிப்படுத்துகின்றன.

பு.சி. புன்னைவனநாத முதலியார் உரை ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளின் உரையை அடியொற்றிச் செல்கிறது. இதில் சுருக்கம், எளிமை முதலியவற்றைக் காணமுடிகிறது

சென்னை கொ. இராமலிங்கத்தம்பிரான் உரையானது எளிமை, தெளிவு முதலிய பண்புகளைப் பெற்றுள்ளது.

வை. இரத்தினசபாபதியின் உரை நூல் சைவசித்தாந்த, தத்துவக் கருத்துகளை உலகியல் அறிவோடு எடுத்துரைக்கிறது.

மேற்கண்ட முறையில் நால்வர் நான்மணிமாலையின் உரை வரலாறு பழைய உரை, குறிப்புரை, கருத்துரை, விருத்தியுரை என்னும் அடிப்படையில் பாகுபாடு செய்து குறிக்கப் பெற்றுள்ளது.

(பார்க்க : பின்னிணைப்பு. 1)

### பதிப்பு வரலாறு

நால்வர் நான்மணிமாலை மூலமும் உரையும் சேர்ந்த நிலையில் எட்டுப் பதிப்புகள் வெளிவந்துள்ளன. இந்த பதிப்புகள் எட்டும் பதிப்பு வரலாற்றில் இடம்பெறுகின்றன.

### கால முறையில் பதிப்புகள்

நால்வர் நான்மணிமாலை உரைகளுள் காலத்தால் முற்பட்டது ஆறுமுக நாவலர் எழுதிய உரை. இது ஆறுமுக நாவலர் அச்சுக் கூடத்தின் வழி 1873-ஆம் ஆண்டு வெளி

வந்தது என்று உரை வரலாற்றில் கூறப்பட்டது. இந்தப் பதிப்பு தற்பொழுது கிடைக்கப் பெறவில்லை.

ஆறுமுக நாவலர் பதிப்பை அடுத்து ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளின் உரையுடன் கூடிய பதிப்பு ஆறுமுக விலாச அச்சுக் கூடத்தின் வழி 1896-இல் வெளி வந்தது. இதன் முதல் பதிப்பு கிடைக்கப் பெறவில்லை.

சிவப்பிரகாசர் பிரபந்தத் திரட்டு சுவாமிநாத பண்டிதர் எழுதிய குறிப்புரையுடன் சைவ வித்தியா நுபாலனயந்திர சாலையின் வழி 1916 இல் வெளிவந்துள்ளது. இது கிடைக்கக் கூடிய முதல் பதிப்பு என்று கொள்ளலாம்.

தருமபுர ஆதீனப் புலவர் மு. நடராஜ தேசிகர் எழுதிய உரை தருமபுர ஆதீனத்தின் வெளியீடாக 1955-இல் வெளி வந்தது. இது மடத்தின் வழி வெளி வந்த முதல் பதிப்பு நூல்.

பு.சி. புன்னைவனநாத முதலியார் உரை திருநெல்வேலிச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வாயிலாக 1960 இல் வெளிவந்தது. இந்தப் பதிப்பில் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளின் உரையானது எளிமையாகப் பொருளை விளக்கு வதற்குத் துணைசெய்யும் என்றும் பு சி. புன்னைவனநாத முதலியாரின் முகவுரை கூறுகிறது.[12]

சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் உரையைத் திருநெல்வேலிச் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் 1965-இல் மறுபதிப்புச் செய்துள்ளது. இந்தப் பதிப்பு ஆறுமுக விலாச அச்சுக் கூடத்தின் வழி வெளி வந்ததன் மறுபதிப்பாக அமைகிறது இவ்வுரை நூலை இரண்டாம் பதிப்பாக 1967-இல் மீண்டும் கழகத்தினர் வெளியிட்டுள்ளனர்.

சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான் உரை பழனியப்பா பிரதர்ஸ் வாயிலாக 1966-ஆம் ஆண்டு வெளி வந்துள்ளது.

வை. இரத்தினசபாபதி உரை சிதம்பரம் மணிவாசகர் பதிப்பகம் வாயிலாக 1984-ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

இதுகாறும் வெளிவந்துள்ள எட்டுப்பதிப்புகளும் மேலே கால முறைப்படி வகைப்படுத்தப்பட்டன. இவற்றுள் இரண்டு உரைப்பதிப்புகள் (ஆறுமுக நாவலர் உரை, இராமலிங்க

சுவாமிகள் உரை ஆறுமுக விலாச அச்சுக் கூடத்தின் வழி வெளியிடப்பட்டது) கிடைக்கப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பதிப்புகளின் இயல்புகள்

முதலில் வெளிவந்த ஆறுமுக நாவலர் பதிப்பும் (1873), ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் முதல் பதிப்பும் [ஆறுமுக விலாச அச்சுக்கூடம் (1896)] கிடைக்கப் பெறாததால் அவற்றின் இயல்புகளை அறியமுடியவில்லை.

சுவாமிநாத பண்டிதர் குறிப்புரையுடன் வெளியிடப்பட்டுள்ள பதிப்பு, செய்யுள்களைப் பொருள் உணர்ந்து கொள்வதற்கு மட்டும் பயன்படுமாறு அமைந்துள்ளது.

அரிய நூல்களைக் குறைந்த விலையில் வெளியிடும் தருமபுர ஆதீனம் வெளியிட்ட மு. நடராஜ தேசிகர் உரை, பதவுரை, கருத்துரை என்னும் அளவில் அமைந்துள்ளது. இது மூல நூலை அறிந்து கொள்வதற்கு உறுதுணைபுரியும்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்ட பு சி. புன்னைவனநாத முதலியார் உரையுடன் கூடிய பதிப்பு எளிமையான உரையுடன் கூடியது. இதில் செய்யுள்கள் சந்தி பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்ட ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் உரையுடன் கூடிய பதிப்பு, செறிந்த மேற்கோள்களுடன், இலக்கிய, இலக்கண, தத்துவக் கருத்துகளை எடுத்துரைக்கும் தெளிவான உரையாக விளங்குகிறது. இந்தப் பதிப்பு, கிடைக்கப் பெறாத ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளின் உரையை வெளிக்கொணர்ந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான் இயற்றிய உரை பழனியப்பா பிரதர்ஸ் வாயிலாக வெளிவந்த பதிப்பு. இந்தப் பதிப்பில் பதவுரை, விளக்கவுரை ஆகியன அமைந்துள்ளன. இவ்உரை விளக்கத்தில் புராண வரலாறுகள் முதலியன சுட்டிக் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

வை. இரத்தினசபாபதி உரைப் பதிப்பில் ஆராய்ச்சி முன்னுரை அமைந்துள்ளது. இவ்வுரையாசிரியர் மூல நூலினை ஆய்வு நோக்கில் அணுகி ஆராய்ந்துள்ளது மற்றைய பதிப்பில்

இடம் பெறாத ஒன்று. இப்பதிப்பில் முன்னுரை, தெளிவுரை, விளக்கவுரை, புராண வரலாறுகள் இடம் பெற்றுள்ளன.

மேற்கண்ட முறைகளில் நால்வர் நான்மணிமாலை உரைப் பதிப்புகள் காலமுறையில் விளக்கப்பெற்றன.

## உரையாசிரியர்கள்

நால்வர் நான்மணிமாலை உரையாசிரியர் 1. ஆறுமுக நாவலர், 2. ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள், 3. சுவாமி நாத பண்டிதர், 4. மு. நடராஜ தேசிகர், 5. பு.சி. புன்னைவன நாத முதலியார், 6. சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான், 7. வை. இரத்தினசபாபதி ஆகியோர் ஆவர். இவர்களுள் விருத்தி யுரை எழுதிய உரையாசிரியர்களின் வரலாறு இங்கு எடுத் துரைக்கப்படுகிறது ஏனைய உரைகள் ஆய்வுக்கு உட் படுத்தப் பெறவில்லை என்பதால் அவ்வுரையாசிரியர்களின் வரலாறு இங்கு இடம் பெறவில்லை.

### உரையாசிரியர்கள் வரலாறு

நால்வர் நான்மணிமாலை விருத்தியுரையாசிரியர்கள் 1. ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள், 2. பு.சி. புன்னைவன நாத முதலியார், 3 சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான், 4. வை. இரத்தினசபாபதி ஆகியோர் ஆவர். இவர்கள் வரலாறு வருமாறு:

### சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் [23]

நால்வர் நான்மணிமாலை உரையாசிரியர்களுள் புகழ் மிக்கவர் சிதம்பரம் ஈசானிய மடம் தவத்திரு இராமலிங்க சுவாமிகள் ஆவார்.

**பிறப்பும் வளர்ப்பும் :** ஈசானிய மடம் இராமலிங்க சுவாமி களின் பிறந்த இடம், தாய், தந்தை, மரபு முதலியன அறிய முடியவில்லை.

**கல்வியில் தேர்ச்சி :** ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் காஞ்சிபுரத்து நல்லக் கம்ப முதலியாரவர்களிடம் வேதாந்த, சித்தாந்த நூல்களைக் கற்றார். புராண, இலக்கண, இலக்கிய நூல்களையும் முறைப்படிப் பயின்று தேர்ச்சி பெற்றார். இதனால் இவரது புலமைத்திறம் சிறப்புற்று விளங்குகிறது.

**துறவு மேற்கொள்ளல் :** ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் மயிலம் பொம்மபுர ஆதீனத்து 14-ஆம் பட்டம் சிவஞான பாலய சுவாமிகள் குரு மூர்த்தியை வணங்கி அவர்களிடம் தீட்சை பெற்றுத் துறவு மேற்கொண்டார். இந்தக் குரு மூர்த்தியின் கட்டளைப்படியே சிதம்பரம் ஈசானிய மடத்திற்குச் சென்று தமிழ்ப் பணியும், சமயத் தொண்டினையும் செய்து வந்தார்.

**தமிழ்ப் பணியும் சமயப் பணியும் :** ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் தமிழ் இலக்கிய, இலக்கணங்களை நன்கு கற்பித்தார். இவரிடம் தமிழ் கற்றவர்கள் சிறந்த தமிழ் அறிஞர்களாகப் பின்னாளில் விளங்கினர். அவர்களுள் சென்னை க.வ. திருவேங்கட நாயுடு, சிதம்பரம் வெ. தில்லைநாயக முதலியார், சோ. குமார வீரையர், சிதம்பரம் மௌன சுவாமிகள் மடாலயத்தில் 6-ஆம் பட்டத்திற்கு வந்த செல்லப்ப சுவாமிகள், ஈசானிய மடாலயத்து அடியவர்களுள் ஒருவராகிய அருணாசல சுவாமிகள், இலக்கண முத்துக் குமாரத் தம்பிரான் சுவாமிகள், பு.வே. சுப்பராய முதலியார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். மேலும் இவர் அரிய நூல்கள் பலவற்றிற்கு உரையெழுதியுள்ளார். ஏட்டுப் பிரதிகளை அச்சேற்றியுள்ளார்.

பல இடங்களுக்குச் சென்று சைவ சித்தாந்த தத்துவங்களை எளிமைப்படுத்திச் சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார்.

மேற்கண்டவற்றின் வழி இவரது தமிழ்ப் பணியையும், சமயப் பணியையும் அறிய முடிகிறது.

**நூலாசிரியர் :** ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் 'முருகேசர் முதுநெறி வெண்பா' என்னும் நூலினை இயற்றியுள்ளார். இந்நூல் இவரது நூல் இயற்றும் திறமைக்குச் சான்றாக அமைந்துள்ளது.

**பதிப்பாசிரியர் :** அச்சுருப் பெறாத சில இலக்கியங்களை முதன் முதலாகப் பதிப்பித்தவர் இவர். குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, திருக்கூவப் புராணம், சீகாளத்திப் புராணம், வாயு சங்கிதை, வீர சிங்காதன புராணம் முதலிய நூல்கள் இவரது பதிப்புகளாக வெளிவந்தன. இப்பதிப்புகள் இவரது பதிப்புத் திறனின் செம்மையை வெளிப்படுத்துகின்றன.

உரையாசிரியர் : நூல்களைப் படைத்து, பதிப்பித்த ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் சில நூல்களின் கருத்தை விளக்க உரை எழுதியுள்ளார். பழமலை அந்தாதி, செந்தில் நிரோட்டகயமக அந்தாதி, பெரியபுராணத்தில் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் 235-ஆம் செய்யுள் முதல் வெள்ளானைச் சருக்கம் முடியவுள்ள பகுதி ஆகியவற்றுக்குச் சீரிய முறையில் உரையெழுதியுள்ளதால் இவரைச் சிறந்த உரையாசிரியராகத் தமிழ் உலகம் அறிய முடிந்தது.

மறைவு : ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் நூலாசிரிய ராகவும், பதிப்பாசிரியராகவும், உரையாசிரியராகவும், போத காசிரியராகவும் விளங்கித் தமிழ்ப்பணி புரிந்துள்ளார். இவர் பராபவ ஆண்டு வைகாசி 17-ஆம் நாள் (30 – 5—1906) புதன் கிழமை காலை 10 மணிக்கு மறைந்தார்.

மேற்கண்ட நிலைகளில் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் உரையாசிரியராக விளங்கியதுடன் அவரது வாழ்க்கை தமிழ்ப்பணி, சமயத் தொண்டு என்ற அளவில் சிறப்புற்றிருந்தமையை அறிய முடிகிறது.

## பு.சி. புன்னைவனநாத முதலியார்[24]

பிறப்பு : புன்னைவனநாதன் பாண்டி வளநாட்டில் உள்ள சீவில்லி புத்தூரில் 1889-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் இருபத்தைந்தாம் நாள் பிறந்தார். இவரது பெற்றோர்: சிதம்பரநாத முதலியார்; மீனாட்சியம்மாள்.

கல்வி : புன்னைவனநாத முதலியார் ஐந்தாம் வயதில் முறைப்படிக் கல்வியைத் தொடங்கினார். முதன் முதலில் சேற்றூர் ரா. அருணாசலக் கவிராயர் மருமகன் சிவக் கொழுந்துப் பிள்ளையிடம் தமிழ் பயின்றார். பின்பு தூத்துக் குடியிலும், சீவில்லிபுத்தூரிலும் கிறித்தவ உயர்நிலைப் பள்ளி களில் ஆங்கிலம் பயின்று தேர்ச்சியுற்றார். நெல்லை சர்ச்மிஷன் கல்லூரியில் பயின்ற பொழுது பீட்டர் கேட்டர் என்னும் விவிலிய நூலைக் கற்றுத் தேர்ச்சி பெற்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் நடத்திய மெட்ரிக் ஆங்கிலத் தேர்வில் இரண்டாம் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். தாகூர்ச் சட்டக் கல்லூரி விரிவுரையாளராகப் பின்னாளில் விளங்கிய கா. சுப்பிரமணிய பிள்ளையுடன் 1905-ஆம் ஆண்டில் பயின்றுள்ளார்.

இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி, உருது, மலையாளம். இந்தி ஆகிய பலமொழிகளையும் பயின்றிருந்தார். 1932-ஆம் ஆண்டில் வித்துவான் பட்டம் பெற்றார். தமிழ் அறிஞர் வ.உ. சிதம்பரம் பிள்ளையின் நட்பு கிடைத்ததால் தமிழைச் செம்மையாகக் கற்றார். மதுரைச் சேதுபதி செந்தமிழ்க் கலா சாலையில் பாண்டித்துரைத் தேவர் அவர்களுடைய கட்டளைப் படி உண்டியும் உறையுளும் பெற்று கல்வியை முடித்தார். கல்வியில் தேர்ச்சியுற்ற இவர், தமிழ்ப் பணியில் ஈடுபட்டார்.

தமிழ்ப் பணி : புன்னைவனநாத முதலியார் இராமநாத புரத்தையடுத்த அழகன்குளம் ரஷ்தியா செந்தமிழ்ப்பாட சாலையில் 1908-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் முதல், ஐந்தாண்டுகள் தலைமையாசிரியராகப் பணியாற்றினார். இவர் 1913-ஆம் ஆண்டு மு. கதிரேசஞ் செட்டியார் அவர் களின் விருப்பின்படி செட்டி நாட்டில் உள்ள பள்ளத்தூரில் சன்மார்க்க சங்க ஆசிரியராகவும், விரிவுரையாளராகவும் இருந்தார். 1914-ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் 1923 - அக்டோபர் வரை மதுரை சௌராட்டிர உயர்தரப் பள்ளியில் முதல் தமிழாசிரியராகப் பணியாற்றினார். 1923 அக்டோபர் முதல் 1930 சூன் வரை திருநெல்வேலியில் சர்ச் மிஷன் கல்லூரி யில் தலைமைத் தமிழாசிரியராகப் பணி புரிந்தார். 1930 சூன் முதல் 1944 ஏப்பிரல் வரை பாளையங்கோட்டை அர்ச் சவேரியர் முதல்தரக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகவும் பேராசி ரியராகவும் பணிபுரிந்து ஓய்வு பெற்றார்.

ஓய்வு பெற்றாலும் அனுபவத்தினால் 1944 டிசம்பரில் திருச்சி அர்ச் சூசையப்பர் கல்லூரியில் தனித்தமிழ்ப் பேராசிரிய ராக அமர்த்தப் பெற்றார். 1946-ஆம் ஆண்டு முதல் சில ஆண்டுகள் தருமபுரி ஆதீனக் கீழ்த்திசைக் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராகவும் துணைத் தலைவராகவும் இருந்தார். மாயூரத்தில் திருநெறித் தொண்டர் கழகம் அமைத்துச் சொற்பொழிவுகளை நடத்தி வந்தார். இவரிடம் கல்வி கற்ற மாணவர்கள் பலர் சிறந்த அறிஞர்களாக விளங்குகிறார்கள்.

மேற்கண்டவற்றின் வழி இவரது தமிழ்ப்பணியினை அறிய முடிகிறது.

குடும்பம் : இவர் 1913-ஆம் ஆண்டு வடுகச்சிமதில் அரங்கம்மாள் என்பவரைத் திருமணம் செய்து கொண்டார்;

அரங்கம்மாள் 1925-இல் இயற்கை எய்தினார். 1926 ஆம் ஆண்டு வாகைக்குளம் மீனாட்சி என்பவரை மணந்தார். இவரும் இறந்துவிட பாப்பான்குளம் பிரமுவைத் திருமணம் செய்துகொண்டார். இவருக்கு இரண்டு மகன்களும் இரண்டு மகள்களும் இருந்தனர். ஒரு மகன் பன்னிரண்டாம் வயதில் இறந்து விட்டான். இவர்தம் வாழ்க்கையில் மூன்று மனைவிகளும் மூன்று பிள்ளைகளும் பெற்றிருந்தார்.

வெளியீடுகள் : பள்ளிகள், கல்லூரிகள் முதலியவற்றில் ஆசிரியராக பணியாற்றிய காலத்தில் நூல்கள் எழுதுதல், வெளியிடுதல், உரைகள் எழுதுதல், இதழ்கள் நடத்துதல் முதலிய பணிகளை மேற்கொண்டிருந்தார்.

திருவனந்தபுரம் 'தமிழன்' இதழாசிரியராக 1913-ஆம் ஆண்டு இருந்தார். அரசினருடைய விருப்பத்தின்படி 'பாண்டிய நேசன்' என்னும் வார இதழாசிரியராக 1914 முதல் 1924 வரை இருந்துள்ளார். இவையன்றி 'வித்யா போதினி', 'தமிழ் மண்டிலம்' ஆகியவற்றிற்கும் ஆசிரியராக இருந்துள்ளார். இந்நாளில் பள்ளி இறுதி வகுப்புத் தமிழ்ப் பாடத்திற்கு உரையெழுதினார்.

செய்யுட் கோவை என்னும் பெயரில் பாடல்களைத் தொகுத்து இரண்டு பகுதிகளாக வெளியிட்டார். அற்புதக் கணையாழி, நீதிசாரத் திரட்டு, யாக்ஞவல்கியம், கங்காபாய் சுயம்வரம், மகாராணி மங்கம்மாள் என்னும் நூல்களை எழுதி வெளியிட்டார். தொல்காப்பியமூலம் மனப்பாடஞ் செய்வதற்கு ஏற்ற முறையில் தனி நூலாக அந்நாளில் வெளியாகவில்லை. இவர் மூலத்தைத் தனிப்புத்தகமாக நல்ல முறையில் முதன் முதலாக வெளியிட்டார். இவ்வெளியீடு மகாமகோபாத்யாய சாமிநாதையர், நாராயண ஐயங்கார் முதலிய அறிஞர்களுடைய பெருமதிப்பிற்குரியதாயிற்று. தொல்காப்பிய மூலத்தை மனப்பாடஞ் செய்ய விரும்பியவர்கள் இதனைப் படிக்கலாயினர். இதனால் இவருக்குத் தொல்காப்பிய முதலியார் என்னும் காரணப் பெயரும் உண்டாயிற்று.

மேற்கண்டவற்றின் வாயிலாக இவரை ஓர் இதழாசிரியராகவும், பதிப்பாசிரியராகவும், வெளியீட்டாளராகவும் உரையாசிரியராகவும் அறிய முடிகிறது.

மறைவு : இவர்தம்முடைய 79-ஆம் வயதில் 1968-ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார்.

**சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான்**

இந்த உரையாசிரியரின் வாழ்க்கை வரலாற்றினை அறிய முடியவில்லை எனினும் இராமலிங்கத் தம்பிரான் என்னும் பெயரில் ஒருவர் இருந்ததாகவும் "இராமலிங்கத் தம்பிரான்; இவரைப் புலிக்குட்டி என்னும் பட்டத்துடன் அழைப்பதுண்டு. ஆசுகவிச் சுப்பிரமணிய தேசிகர் காலத்திலே (19–ஆம் நூற். இறுதி) இருந்தவர்"[25] எனவும் கலைக்களஞ்சியம் கூறுவதன் வாயிலாக அறிய முடிகிறது.

**வை. இரத்தினசபாபதி[26]**

*பிறப்பு :* வை. இரத்தினசபாபதி தென்னார்க்காடு வள்ள லார் மாவட்டம் கடலூரில் உள்ள திருப்பாதிரிப் புலியூரை யடுத்த வண்டிப்பாளையத்தில் (அப்பரடிகள் கரையேறிய இடம்) 1929–இல் ச. வைத்தியலிங்கம், அமுதம்மாள் என்பவர் களுக்கு மகனாய்ப் பிறந்தார்.

*கல்வியும் பட்டமும் :* வை. இரத்தினசபாபதி திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகளின் மாணாக்கர் ஆவார். இவர் 1949 முதல் 1953 வரை மயிலம் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியில் பயின்று வித்துவான் ஆனார். அண்ணா மலைப் பல்கலைக் கழகத்தில் பி.ஓ.எல்., எம்.ஏ. (தத்துவம்) போன்ற பட்டங்களைப் பெற்றவர். பின்னர் வீரசைவம் பற்றி ஆய்வு செய்து (டாக்டர்) முனைவர் பட்டத்தை 1972-ல் பெற்றார். மேலும் இவருக்கு ஞானமணி, ஞானத்தமிழாகரர், சிந்தாந்தக் கலைஞர், சைவ சித்தாந்த ஞான பானு, அருட் கவியரசு என்னும் சிறப்புப் பட்டங்களை முறையே மயிலம் பொம்மபுர ஆதீனம், குன்றக்குடி ஆதீனம், தருமபுர ஆதீனம் மதுரை ஆதீனம் ஆகிய ஆதீனங்களும் டி.எம். நாராயண சாமிப்பிள்ளை ஆகியோரும் அளித்துப் பாராட்டியுள்ளனர். இதனால் இவரது சமயப் பணியையும், தமிழ்ப் பணியையும் அறிய முடிகிறது. பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் திருமடத்தில் தற்பொழுது அருளாட்சி புரிந்து வரும் சுவாமிகள் இவருடன் பயின்றவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

*கல்விப்பணி :* ஞானியார் சுவாமிகளின் தொடக்கப் பள்ளியில் ஆசிரியராகப் பணியினைத் தொடங்கினார். பின்பு உயர்நிலைப்பள்ளி ஆசிரியராகப் பணிபுரிந்தார். அண்ணா மலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆசிரியராகப் பணி யாற்றினார். பூம்புகார்ப் பேரவைக் கல்லூரியில் முதுகலைப் பேராசிரியராக இருந்துள்ளார். பின்னர் அண்ணாமலைப்

பல்கலைக் கழகத் தத்துவத்துறை விரிவுரையாளராகப் பணி யாற்றியுள்ளார்; சென்னைப் பல்கலைக்கழக டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனத் தில் இணைப்பேராசிரியராக இருந்துள்ளார். சென்னைப் பல்கலைக் கழகச் சைவ சித்தாந்தத் துறையின் தலைவராகவும், பேராசிரியராகவும் பொறுப்பேற்றுக் கல்விப் பணியினைச் செய்து வந்தார். இவரது மேற்பார்வையில் பலர் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர். சிலர் ஆய்வு செய்து வருகின்றனர். திருப்பத்தூர்த் தமிழ்ச் சங்கம், தமிழகப் புலவர்குழு ஆகிய வற்றில் உறுப்பினராக இருந்து வருகிறார் இவர்

*சமயப்பணி :* சைவ சித்தாந்த, வீரசைவ நெறிகளைச் சொற்பொழிவுகளாக நிகழ்த்திச் சமய உண்மைகளை எளிமை யாகப் பரப்புவது இவரது தனிச் சிறப்பு. இவர் திருக்கோயில் நிர்வாக அதிகாரிகள், சமயப் பரப்புநர் ஆகியோர்களுக்குக் கோடைக்காலச் சாத்திர வகுப்புகளைப் பல ஆண்டுகள் நடத்தியுள்ளார். இவர் உறையூர் சமரச சன்மார்க்க சங்கத்தின் வாயிலாக 1954 முதல் இன்று வரை தொடர்ந்து மார்கழி மாதத்தில் சொற்பொழிவு செய்து வருகிறார். சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளில் சொற்பொழிவு ஆற்றியுள்ளார்.

*நூலாசிரியர் :* வை. இரத்தினசபாபதி வீரசைவம், திரு முறைத் தெளிவே சிவஞான போதம், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், சிதம்பரம் இராமலிங்கரின் சித்தி வளாகம், சிவஞான முனிவர் நோக்கில் சைவ சித்தாந்தம் என்னும் ஆய்வு நூல்களைப் படைத்துள்ளார். மேலும் ஆங்கிலத்தில் Perspectives in Veerasaivism என்னும் நூலையும் எழுதியுள்ளார்.

*பதிப்பாசிரியர் :* இவர் பொதுப்பதிப்பாசிரியராக இருந்து 'மெய்கண்ட சாத்திரங்கள்' என்னும் நூலினைச் சென்னைப் பல்கலைக் கழகச் சைவ சித்தாந்தத் துறையின் வாயிலாக வெளியிட்டுள்ளார். தேவி தோத்திரங்கள், அருட்முறைப் பாடல்களின் தொகுப்பு, சேக்கிழார் செந்நெறி — (தெய்வீகப் பேரவை) போன்றவற்றின் வழி இவரைப் பதிப்பாசிரியராக அறிய முடிகிறது.

*உரையாசிரியர் :* இவர் நால்வர் நான்மணிமாலை, திருப் பூவண நாதர் உலா ஆகிய நூல்களுக்கு உரையெழுதியுள்ளார். அருணகிரிநாதரின் வகுப்பு நூல்களுக்கு உரையெழுதியுள்ளதை

அறிய முடிகிறது. மேலும் அபிராமி அந்தாதிக்கு உரை வகுத்துள்ளார். இவர் திருமுறைகளுக்கு விரிவாக உரையெழுதும் திட்டத்தில் சிலவற்றிற்கு உரையெழுதி வருகிறார்.

மொழி பெயர்ப்பாசிரியர் : பசவேசரின் பொன்மொழிகள் என்ற நூலினை சோமசுந்தர ஐயரும் இவரும் சேர்ந்து மொழி பெயர்த்துள்ளனர்.

ஈடுபாடு : இவர் வீர சைவம், வள்ளலார் தத்துவம் போன்ற துறைகளில் ஈடுபாடும் ஆர்வமும் உடையவர்.

இல்லறம் : வை. இரத்தினசபாபதி 1968–ஆம் ஆண்டு புலவர் வசந்தகுமாரி அவர்களைத் திருமணம் செய்து கொண்டார். இவர்களுக்கு மூன்று ஆண் மக்கள் இருக்கின்றனர்.

மேற்கண்ட முறைகளில் இவரது வாழ்க்கை வரலாறு விளங்குகிறது.

தொகுப்புரை

இவ்வியலில் கூறப்பட்ட கருத்துக்கள் தொகுத்துச் சுட்டப் படுகின்றன.

1. மாலை என்னும் இலக்கிய வகைகளுள் ஒன்று நால்வர் நான்மணிமாலை. இது சிற்றிலக்கியம். அடியாரைப் போற்றுவதன் மூலம் பக்தி நெறியை, இறையனுபவத்தை வெளிப் படுத்துகிறது.

2. சிவப்பிரகாசர் என்னும் பெயர் பெற்ற புலவர்கள் பலர் இருந்தமையை அறிய முடிகிறது. இவர்களுள் துறைமங்கலம் சிவப்பிரகாசர் நால்வர் நான்மணிமாலை ஆசிரியராகத் திகழ்கிறார்.

3. சிவப்பிரகாசரின் வரலாறு பிறப்பு, கல்வியும் வளர்ச்சியும், படைப்பாற்றல், வழிபாடு, ஆதரித்தவர், சமயத்தொண்டு, காலம், இறைவனோடு இணைதல் முதலியவற்றின் வழி வெளிப் படுகிறது.

4. இவரது காலத்தினை 17–ஆம் நூற்றாண்டு என அறிய முடிகிறது.

5. நால்வர் நான்மணிமாலைக்கு எழுந்த உரைகள் ஏழு எனத் தெரிய வருகிறது.

6. உரைகள் உரை வரலாறும், பதிப்பு வரலாறும் என்னும் முறையில் ஆய்வு நோக்கில் விளக்கப்பட்டன.

7. உரை வரலாற்றில் உரைகள் நான்காக வகைப்படுத்தப் பட்டன. அவை. 1. பழைய உரை, 2. குறிப்புரை, 3. கருத்துரை, 4. விருத்தியுரைகள் என்பன.

8. பழைய உரை, குறிப்புரை, கருத்துரை ஆகியவற் றைத் தவிர்த்து எஞ்சிய விருத்தியுரைகள் மட்டும் ஆய்விற்கு உட்படுத்தப் பெற்றன.

9. பதிப்பு வரலாற்றின் வழி, எட்டுப் பதிப்புகள் வெளி வந்துள்ளதை அறிய முடிகிறது.

10. பதிப்புகள் கால முறையில் வரிசைப்படுத்தி விளக்கப் பட்டன.

11. பதிப்புகளின் இயல்புகள் குறிப்பாகச் சுட்டிக்காட்டப் பட்டன.

12. விருத்தியுரை எழுதிய உரையாசிரியர்களின் வரலாறுகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. அவற்றில் இடம் பெறுபவர்கள் 1. ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள், 2. பு. சி. புன்னைவனநாத முதலியார், 3. சென்னை. கொ. இராமலிங்கத் தம்பிரான், 4. வை. இரத்தினசபாபதி ஆகியோர்.

13. இவர்களுள் சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான் வரலாற்றினை விரிவாக அறிய முடியவில்லை. இருப்பினும் கலைக்களஞ்சியத்தின் வழி மிகச் சுருக்கமாக அறிய முடிகிறது.

## குறிப்புகள்

1. சேக்கிழார், பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணம் (திரு.வி. கலியாண சுந்தர முதலியார் (ப.ஆ.), சென்னை: முருகவேள் புத்தக சாலை, 1934), மூர்த்தி நாயனார் புராணம், பா. 3.

2. ந. வீ. செயராமன், *சிற்றிலக்கியத் திறனாய்வு* (சென்னை: இலக்கியப் பதிப்பகம், 1980), ப. 107.

3. ந. வீ. செயராமன், மேற்படி நூல், ப. 108.

4. முத்துச் சண்முகன், தமிழ் இலக்கியக் கோட்பாடுகள் (புதிய பதிப்பு, மதுரை: ஸ்ரீநாரணம் மாள் பதிப்பகம், 1984), ப. 372.

5. ப. அருணாசலம், பக்தி இலக்கியம் (இரண்டாம் பதிப்பு, சென்னை: பாரிபுத்தகப் பண்ணை, 1983), ப. 90.

6. 1. கலைக்களஞ்சியம் தொகுதி நான்கு, (சென்னை: தமிழ் வளர்ச்சிக் கழகம், 1956), பக். 708.

6. 2. M. Govindasamy, *A Survey of the sources for the History of Tamil Literature* (*Annamalai Nagar : Annamalai University*, 1977), p. 275; 280.

7. Siva Prakasar lost his father when he was a student. He therefore, took his mother and brothers to Thiruvannamalai and settled there for some time.

M. S. Puranalingam Pillai, *Tamil Literature* (Munnir Pallam: The Bibliotheca, 1929), p. 301.

8. கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு இரண்டாம் பாகம் (ஆறாம் பதிப்பு, சென்னை: ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், 1970), ப. 387.

9. சுவாமிநாத பண்டிதர், சிவப்பிரகாசர் பிரபந்த திரட்டு (சென்னை: சைவ வித்தியாநு பாலன யந்திர சாலை, 1916), ப. 11.

10. மு. அருணாசலம், சைவ சமயம், (சென்னை : பாரி நிலையம், 1969), ப. 64.

11. மெய்கண்டார், சிவஞான போதம், சூத். 8:2 அதிகரணம்.

12. அடிகளாசிரியர், "சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு", சிவப்பிரகாச விகாசம், (தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையம், 1977), ப. 11.

13. மா. சு. சாந்தா, சிவப்பிரகாசரின் இலக்கிய நூல்கள் ஒரு திறனாய்வு (சென்னை: வித்யா பதிப்பகம், 1983), ப. 3.

14. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் (திருந்திய பதிப்பு, சென்னை: தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், 1981), ப. 394

15. சுவாமிநாத பண்டிதர், சிவப்பிரகாசர் பிரபந்த திரட்டு, ப. 18.

16. கலைக்களஞ்சியம் — தொகுதி நான்கு, ப. 708.

17. க. சி. கமலையா, "மதுரைக்கலம்பகம்", நமது பண்பாடு (சென்னை: தமிழ்ப் புத்தகாலயம், 1973), ப. 66.

18. தமிழண்ணல் (பு. பெ.), புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு (ஐந்தாம் பதிப்பு, மதுரை அன்பு செல்வி பதிப்பகம், 1985), ப. 291.

19. 1. கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு — இரண்டாம் பாகம், ப. 387.

19. 2. மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு (ஆறாம் பதிப்பு, புது தில்லி: சாகித்திய அக்காதெமி, 1986), ப. 213.

19. 3. M. Arunachalam, *An Introduction to the History of Tamil Literature*, (Tiruchitrambalam: Gandhi Vidyalayam, 1974), p. 22.

19. 4. மது. ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் — முதல் தொகுதி (சென்னை: ஐந்திணைப் பதிப்பகம், 1987, ப. 363.

20. சுவாமிநாத பண்டிதர், சிவப்பிரகாசர் பிரபந்த திரட்டு, ப. 19.

21. மா. சு. சாந்தா, சிவப்பிரகாசரின் இலக்கிய நூல்கள் ஒரு திறனாய்வு, இணைப்பு. 14, உரைநூல் உரையாசிரியர் நூலடைவு. ப. 260.

22. ஆ — முகவுரை.

23. அ — உரையாசிரியர் வரலாறு.

24. சு. அ. இராமசாமி, தமிழ்ப் புலவர் வரிசை பகுதி 10, (சென்னை: சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1973), ப. 119-128.

25. கலைக்களஞ்சியம் — தொகுதி இரண்டு (சென்னை: தமிழ் வளர்ச்சிக் கழகம், 1955), ப. 68.

26. வை. இரத்தினசபாபதி, பேட்டி முறை, 26—10—90. மாலை 2-50 மணி முதல் 3-40 வரை.

# 2

# உரைகளின் இயல்புகள்

இந்த ஆய்வில் முதல் இயல் நால்வர் நான்மணிமாலை பற்றிய அறிமுகமாக அமைந்தது. இரண்டாம் இயல் உரைகளின் இயல்புகள் குறித்து விளக்குகிறது. இவ்வுரைகளின் இயல்பு களை 1. இலக்கியப் புலமை, 2. சொற்பொருளுரைத்தல், 3. நடை நலம், 4. உவமை, 5. உரைப்புலமை, 6. புராண வரலாறு கூறுதல், 7. பாடவேறுபாடு காட்டல், 8. பிற செய்திகள் என்னும் நிலை களில் பாகுபாடு செய்யலாம்.

இலக்கணக் கூறுகள், தத்துவக்கூறுகள் முதலியன தனி இயல்களில் விளக்கப்படவுள்ளன. எனினும் உரை இயல்பு களை விளக்குமிடத்து இலக்கண, தத்துவக் கூறுகள் இடம் பெறுவதைத் தவிர்க்க முடியாது என்பதை அறிஞர்கள் உணர்வர்.

### இலக்கியப் புலமை

உரையாசிரியர்கள் தங்கள் இலக்கியப் புலமையை இலக்கிய மேற்கோளாட்சி வாயிலாக வெளிப்படுத்துகின்றனர். இதனை மேற்கோளாட்சி, மேற்கோளாட்சி நோக்கம் என்று வகைப் படுத்தலாம். நால்வர் நான்மணி மாலை உரையாசிரியர்கள் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள், பு.சி. புன்னைவனநாத முதலியார், சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் என்பது முன்னர்ச் சுட்டப்பட்டது (பக். 13-14). இவர்களின் பெயர்கள் இனி ஆய்வேட்டில் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் என்று சுட்டப் படுகின்றன. வை. இரத்தினசபாபதியின் பெயர் முழுமையாக இவ் ஆய்வில் பயன்படுத்தப்படுகிறது.

**மேற்கோளாட்சி**

இலக்கியங்களிலிருந்து உரையாசிரியர்கள் எடுத்தாண்ட மேற்கோளாட்சிகள் இதில் இடம்பெறுகின்றன. இவற்றைச் 1. சங்க இலக்கியம், 2. காப்பியம், 3. நீதி இலக்கியம், 4. பக்தி இலக்கியம், 5. பிற இலக்கியங்கள், 6. இடம் சுட்டா மேற்கோள்கள் என்று ஆறு வகையாகப் பகுக்கலாம்.

**சங்க இலக்கிய மேற்கோளாட்சி**

எட்டுத் தொகையில் அகநானூறு, பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை ஆகிய இரண்டு நூல்களிலிருந்து மேற்கோள்களை வை. இரத்தினசபாபதி எடுத்தாளுகிறார். இந்த இரண்டு மேற்கோள்களும் இரண்டு பாடல்களில் அமைந்துள்ளன.[1]

ஏனைய உரையாசிரியர்கள் சங்க இலக்கியங்களைப் பயன் படுத்தவில்லை

**காப்பியம்**

தம்பிரான் சிந்தாமணியைக் கையாண்டுள்ளார். இதனை ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.[2]

***நீதி இலக்கியம் — திருக்குறள்***

நீதி இலக்கியத்தில் திருக்குறளை மட்டும் அனைத்து உரையாசிரியர்களும் பயன்படுத்தியுள்ளனர். எனினும் எண்ணிக்கையில் வேறுபட்டுள்ளனர்.

சுவாமிகள் தம் உரையில் பதினைந்து குறள்களை எடுத்தாண்டுள்ளார். நூல் — காப்பில் இரண்டு குறள்களையும் பாடல் இருபத்தாறில் இரண்டு குறள்களையும் அமைத்து எஞ்சிய குறள்களை ஒவ்வொரு பாடலுக்குச் சான்றாக அமைத்துள்ளார்.[3]

புன்னைவனநாதன் நான்கு குறள்களை எடுத்தாண்டுள்ளார். இவர் இருபத்தாறாம் பாடலில் இரண்டு குறள்களைக் கையாண்டு எஞ்சிய குறள்களை இரண்டு பாடல்களில் அமைத்துள்ளார்.[4]

தம்பிரான் தம் உரையில் ஒன்பது குறள்களை கையாண்டுள்ளார் இந்த ஒன்பது குறள்களும் ஒன்பது பாடல்களில் இடம்பெற்றுள்ளன.[5]

வை இரத்தினசபாபதி பதினெட்டு குறள்களைத் தம் உரையில் பயன்படுத்தியுள்ளார். ஏழாம் பாடலில் இரண்டு குறள்களையும், பதினாறாம் பாடலில் இரண்டு குறள்களையும், முப்பதாம் பாடலில் மூன்று குறள்களையும், முப்பத்தேழாம் பாடலில் நான்கு குறள்களையும் எடுத்தாண்டுஎஞ்சிய ஏழு குறள்களை ஒவ்வொரு பாடலில் பயன்படுத்தியுள்ளார்.[6]

திருக்குறளை எடுத்தாள்வதில் நான்கு உரையாசிரியர்களும் ஒன்றுபட்டுள்ளனர். இதில் வை. இரத்தினசபாபதி மற்றைய உரையாசிரியர்களைவிட மிகுதியான குறள்களைக் கையாண்டுள்ளதை அறிய முடிகிறது.

பக்தி இலக்கியங்கள்

நால்வர் நான்மணிமாலை என்னும் இந்நூல் பக்தி இலக்கியத்துடன் தொடர்புடைய சிற்றிலக்கியம் என்று முன்னர்க் கூறப்பட்டது (ப. 7). எனவே பக்தி இலக்கியத்தை விளக்கப் புகும் உரையாசிரியர்கள் திருமுறைகள், புராணங்கள், சிற்றிலக்கியங்கள் முதலியவற்றை எடுத்தாண்டுள்ளனர்.

திருமுறைகள் : உலகில் உள்ள சமயங்கள் இறைவனை அடைய நல்வழிப்படுத்துவன. அவற்றுள் சைவ சமயமும் ஒன்று. இச்சமயத்தின் அடிப்படை வழிபாட்டு நூல்களாக அமைவன திருமுறைகள். திருமுறைகளில் தேவாரம், திருவாசகம், திருகோவையார், திருமந்திரம், பெரிய புராணம் ஆகியன உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன.

தேவாரம் : தேவாரம் பாடிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் சுந்தரர் ஆகிய மூவரின் தேவாரங்கள் ஏழு திருமுறைகளாக அமைந்துள்ளன. இம்மூவரின் தேவாரங்களையும் உரையாசிரியர்கள் எடுத்தாண்டுள்ளனர்.

திருஞானசம்பந்தர் தேவாரம் : பன்னிரு திருமுறைகளில் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தருடையது. இம்மூன்று திருமுறைகளையும் உரையாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

முதல் திருமுறை : சுவாமிகள் முதல் திருமுறையிலிருந்து மூன்று பாடல்களை நான்கு இடங்களில் கையாண்டுள்ளார்.[7]

புன்னைவனநாதன் ஒரு பாடலை எடுத்தாண்டுள்ளார்.[8]

தம்பிரான் இரண்டு பாடல்களை இரண்டு இடங்களில் கையாண்டுள்ளார்.[9] வை. இரத்தினசபாபதி இத்திருமுறையைப் பயன்படுத்தவில்லை.

இரண்டாம் திருமுறை : சுவாமிகள் இரண்டாம் திருமுறையிலிருந்து இரண்டு பாடல்களைக் கையாண்டுள்ளார்.[10]

புன்னைவனநாதன் ஒரு பாடலை எடுத்தாண்டுள்ளார்.[11]

தம்பிரான் மூன்று பாடல்களை நான்கு இடங்களில் கையாண்டுள்ளார்[12] வை. இரத்தினசபாபதி இத்திருமுறையைக் கையாளவில்லை.

மூன்றாந் திருமுறை : தம்பிரான் மூன்றாந் திருமுறையிலிருந்து மூன்று பாடல்களை எடுத்தாண்டுள்ளார்.[13] வை. இரத்தினசபாபதி ஒரு பாடலைக் கையாண்டுள்ளார்.[14] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

திருநாவுக்கரசர் தேவாரம் : நான்கு, ஐந்து, ஆறு திருமுறைகள் திருநாவுக்கரசருடையது. இதனை உரையாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

நான்காம் திருமுறை : நாலாந் திருமுறையிலிருந்து சுவாமிகள் நான்கு பாடல்களை எடுத்தாண்டுள்ளார்.[15]

தம்பிரான் ஆறு பாடல்களைக் கையாண்டுள்ளார்.[16] வை. இரத்தினசபாபதி நான்கு பாடல்களை எடுத்தாண்டுள்ளார்.[17] புன்னைவனநாதன் இத்திருமுறையினை எடுத்தாளவில்லை.

ஐந்தாம் திருமுறை : சுவாமிகள் இத்திருமுறையிலிருந்து இரண்டு பாடல்களைக் கையாண்டுள்ளார்.[18] புன்னைவனநாதன் ஒரு பாடலைக் கையாண்டுள்ளார்.[19] தம்பிரான் ஒரு பாடலை எடுத்தாண்டுள்ளார்.[20] வை. இரத்தினசபாபதி ஒரு பாடலைப் பயன்படுத்தியுள்ளார்.[21]

ஆறாம் திருமுறை : சுவாமிகள்,[22] வை. இரத்தினசபாபதி[23] ஆகியோர் இத்திருமுறையிலிருந்து ஒரு பாடலை எடுத்தாண்டுள்ளனர். ஏனைய உரையாசிரியர்கள் இதனை எடுத்தாளவில்லை.

**சுந்தரர் தேவாரம் :** சுந்தரரின் தேவாரம் ஏழாம் திருமுறையாக அமைந்துள்ளது. இத்திருமுறையிலிருந்து சுவாமிகள் மூன்று பாடல்களைக் கையாண்டுள்ளார்.[24] தம்பிரான் நான்கு பாடல்களை எடுத்தாண்டுள்ளார்.[25] வை. இரத்தினசபாபதி இரண்டு பாடல்களைக் கையாண்டுள்ளார்.[26] புன்னைவனநாதன் இத்திருமுறையைப் பயன்படுத்தவில்லை.

மேற்கண்ட சான்றுகளின் வழி தேவாரத்தை அனைத்து உரையாசியர்களும் பயன்படுத்தியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

**திருவாசகம் :** எட்டாம் திருமுறையில் மாணிக்கவாசகரின் திருவாசகமும், திருக்கோவையாரும் இடம் பெற்றுள்ளன. திருவாசகத்தை நான்கு உரையாசிரியர்களும் கையாண்டுள்ளனர்.

சுவாமிகள் பதினான்குப் பாடல்களை எடுத்தாண்டுள்ளார். இரண்டு பாடல்களை முப்பத்தாறாம் பாடலிலும், நான்கு பாடல்களை இருபதாம் பாடலிலும், நான்கு பாடல்களை இருபத்தெட்டாம் பாடலிலும் கையாண்டு எஞ்சிய நான்கினை நான்கு பாடல்களின் உரையில் அமைத்துள்ளார்.[27]

புன்னைவனநாதன் ஒரு பாடலை கையாண்டுள்ளார்.[28]

தம்பிரான் ஏழு பாடல்களை எடுத்தாண்டுள்ளார். இவர் மூன்று பாடல்களை இருபதாம் பாடலிலும், நான்கு பாடல்களை இருபத்து எட்டாம் பாடலிலும் அமைத்துள்ளார்.[29]

வை. இரத்தினசபாபதி மூன்று பாடல்களைப் பயன்படுத்தியுள்ளார். இரண்டு பாடல்களை முப்பத்து ஆறாம் பாடலிலும், ஒரு பாடலை முப்பத்து இரண்டாம் பாடலிலும் சான்றாக அமைத்துள்ளார்.[30]

சுவாமிகள் தம் உரையில் பிற உரையாசிரியர்களினும் மிகுதியாகத் திருவாசகத்தை எடுத்தாண்டுள்ளதால் இவர் திருவாசகத்தின் மீது கொண்டுள்ள பற்றும், நூற்பயிற்சியும் விளங்குகின்றன.

**திருக்கோவையார் :** சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகிய மூவரும் திருக்கோவையாரைப் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள் இரண்டு பாடல்களை மேற்கோளாக ஒரே பாடலில் அமைத்துள்ளார்.[31]

புன்னைவனநாதன், சுவாமிகள் எடுத்தாண்ட அதே இரண்டு பாடல்களை எடுத்தாண்டு உரை வரைந்துள்ளதால் உரையெழுதுவதில் மேற்கோளை ஆளும் முறையில் சுவாமிகளை அடியொற்றிச் சென்றுள்ளார் என்பது தெளிவு.[32]

தம்பிரான் ஐந்து பாடல்களைப் பயன்படுத்தியுள்ளார். நாற்பதாம் பாடலில் மூன்றுப் பாடல்களையும், எஞ்சிய இரண்டு பாடல்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பாடல்களில் அமைத்துள்ளார்.[33]

திருக்கோவையாரை வை. இரத்தினசபாபதி பயன்படுத்தவில்லை. தம்பிரான் திருக்கோவையாரிலிருந்து மிகுதியான பாடல்களைப் பயன்படுத்தித் திருக்கோவையாரின் சிறப்பைத் தம் உரையின் வழி வெளிப்படுத்துவதை அறியமுடிகிறது.

ஒன்பதாம் திருமுறை : சேந்தனார் இயற்றிய திருப்பல்லாண்டு ஒன்பதாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. இத்திருமுறையிலிருந்து ஒரு பாடலை வை. இரத்தினசபாபதி எடுத்தாண்டுள்ளார்.[34] ஏனைய உரையாசிரியர்கள் கையாளவில்லை.

பத்தாம் திருமுறை : பத்தாம் திருமுறையில் திருமூலரின் திருமந்திரம் இடம் பெற்றுள்ளது. இந்நூலினை நான்கு உரையாசிரியர்களும் கையாண்டுள்ளனர்.

சுவாமிகள் ஒன்பது இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.[35] புன்னைவனநாதன் மூன்று இடங்களில் கையாண்டுள்ளார்.[36] ஐந்து பாடல்களை எடுத்தாண்ட தம்பிரான் முப்பத்து ஒன்பதாம் பாடலில் இரண்டு பாடலையும், எஞ்சிய மூன்று பாடல்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பாடலில் அமைத்துள்ளார்.[37] வை. இரத்தினசபாபதி மூன்று இடங்களில் கையாண்டுள்ளார்.[38]

சுவாமிகள் திருமந்திரத்தை மிகுதியாகப் பயன்படுத்துவதன் வாயிலாக இவரது திருமந்திர நூற்பயிற்சியை அறிய முடிகிறது.

பதினொன்றாம் திருமுறை : பதினொன்றாம் திருமுறைகளிலிருந்து உரையாசிரியர்கள் மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளனர். அவை ஒவ்வொன்றாக இங்கு இடம் பெறுகின்றன.

திருவிடை மருதூர் மும்மணிக்கோவை : திருவெண் காட்டடிகள் இயற்றிய இந்நூலினை நான்கு உரையாசிரியர் களும் கையாண்டுள்ளனர்.

இந்நூலிலிருந்து சுவாமிகள் மூன்று பாடல்களை எடுத் தாண்டுள்ளார். பாடல் நாற்பதில் இரண்டுப் பாடல்களை அமைத்து எஞ்சிய ஒரு பாடலை ஒரு பாடலின் உரையில் சான்றாக அமைத்துள்ளார்.[39]

புன்னைவனநாதன் ஓர் இடத்திலும், தம்பிரான் ஓர் இடத்தி லும், வை. இரத்தினசபாபதி ஓர் இடத்திலும் பயன்படுத்தி யுள்ளனர். இவர்கள் அனைவரும் இந்நூலினை நாற்பதாம் பாடலில் மட்டும் பயன்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.[40]

திருஞானசம்பந்தர் திருவந்தாதி : சுவாமிகள், புன்னை வனநாதன், தம்பிரான் ஆகியோர் இந்நூலினைப் பயன்படுத்தி யுள்ளனர்.

இந்நூலிலிருந்து சுவாமிகள் ஐந்து பாடல்களைப் பயன் படுத்தியுள்ளார். முப்பத்து மூன்றாம் பாடலில் இரண்டு பாடல் களை எடுத்தாண்டு எஞ்சிய மூன்று பாடல்களைத் தனிதனிப் பாடல்களில் அமைத்துள்ளார்.[41]

புன்னைவனநாதன் இரண்டு இடங்களில் பயன்படுத்தி யுள்ளார்.[42] தம்பிரான் இரண்டு பாடல்களை ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[43]

வை. இரத்தினசபாபதி இந்நூலினை எடுத்தாளவில்லை.

திருத்தொண்டர் திருவந்தாதி : நம்பியாண்டார் நம்பி இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகிய மூவரும் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள் மூன்று இடங்களிலும், புன்னைவனநாதன் ஓர் இடத்திலும், தம்பிரான் ஓர் இடத்திலும் பயன்படுத்தியுள்ளனர்.[44] இந்த நூலினை வை. இரத்தினசபாபதி பயன்படுத்தவில்லை.

திருநாவுக்கரசர் திருவேகாதசமாலை : நம்பியாண்டார் நம்பி இயற்றிய இதனைச் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகிய மூவரும் பயன்படுத்த வை. இரத்தினசபாபதி பயன்படுத்தவில்லை.

சுவாமிகள் எட்டுப்பாடல்களைப் பயன்படுத்தியுள்ளார். இருபத்து ஆறாம் பாடலில் இரண்டு பாடலையும், ஏனைய ஆறு பாடல்களை தனித்தனி பாடலுக்கும் சான்றாக அமைத்துள்ளார்.[45]

புன்னைவனநாதன் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார். தம்பிரான் இரண்டு இடங்களில் கையாண்டுள்ளார்.[46]

சுவாமிகள் மிகுதியான பாடல்களைக் கையாண்டு ஏனைய உரையாசிரியர்களைவிட மேற்கோள்களால் உரையைச் சிறப்புற அமைத்துள்ளார்.

*திருஞானசம்பந்தர் திருக்கலம்பகம்* : நம்பியாண்டார் நம்பி இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள் மூன்று இடங்களிலும் புன்னைவனநாதன் ஓர் இடத்திலும் எடுத்தாண்டுள்ளனர்.[47] ஏனைய உரையாசிரியர்கள் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் கையாளவில்லை.

*திருஞானசம்பந்தர் திருமும்மணிக்கோவை* : நம்பியாண்டார் நம்பி இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள், புன்னைவனநாதன் இருவரும் பயன்படுத்தியுள்ளனர். சுவாமிகள் மூன்று பாடல்களை எடுத்தாண்டுள்ளார். பாடல் பதின்மூன்றில் இரண்டு பாடல்களையும், எஞ்சிய ஒரு பாடலை ஒரு பாடலுக்குச் சான்றாக அமைத்துள்ளார். புன்னைவன நாதன் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[48]

உரையாசிரியர்கள் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் பயன்படுத்தவில்லை.

*திருஞானசம்பந்தர் திருவுலாமாலை* : நம்பியாண்டார் நம்பி இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள், புன்னைவனநாதன் ஆகியோர் பயன்படுத்தியுள்ளனர். சுவாமிகள் மூன்று பாடல்களை எடுத்தாண்டுள்ளார். பாடல் இருபத்து ஐந்தில் இரண்டு பாடல்களையும் எஞ்சிய ஒரு பாடலை ஒரு பாடலின் உரைக்குச் சான்றாக அமைத்துள்ளார். புன்னைவனநாதன் இரண்டு இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.[49] மற்றைய உரையாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

**கோயிற்றிருப் பண்ணியர் விருத்தம்** : நம்பியாண்டார் நம்பி இயற்றிய இதனைச் சுவாமிகள், தம்பிரான் ஆகியோர்

ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளனர்.[50] ஏனைய உரையாசிரியர்கள் இந்நூலினை எடுத்தாளவில்லை.

கோயினான் மணிமாலை: திருவெண்காட்டடிகள் இயற்றிய இதனைச் சுவாமிகள் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[51] ஏனைய உரையாசிரியர்கள் பயன்படுத்தாமல் சென்றுள்ளனர்.

திருஞானசம்பந்தர் திருச்சண்பை விருத்தம்: நம்பியாண்டார் நம்பி இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[52] ஏனைய உரையாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

நம்பியாளுடைப் பிள்ளையார் திருவந்தாதி: நம்பியாண்டார் நம்பி இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள் ஓர் இடத்தில்பயன்படுத்தியுள்ளார்.[53] ஏனைய உரையாசிரியர்கள் கையாளவில்லை.

திருத்தொண்டர் தொகை: நம்பியாண்டார் நம்பி இயற்றிய இந்நூலினைத் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் இரண்டு இடங்களில் கையாண்டுள்ளனர்.[54] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

பெரியபுராணம்: சேக்கிழார் இயற்றிய பெரியபுராணம் பன்னிரெண்டாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. இந்த நூலிலிருந்து மேற்கோள்களை நான்கு உரையாசிரியர்களும் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள் தம் உரையில் எழுபத்து இரண்டு பாடல்களைக் கையாண்டுள்ளார். நூல்-காப்பு. பாடல்கள் ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பதினொன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது, இருபத்தொன்று, முப்பத்தொன்று ஆகியவற்றில் இரண்டு பாடல்களை அமைத்துள்ளார். பாடல்கள் இருபது, இருபத்து மூன்று, முப்பத்தொன்பது ஆகியவற்றில் மூன்று பாடல்களையும், பாடல்கள் இரண்டு, பத்து, இருபத்து நான்கு ஆகியவற்றில் நான்கு பாடல்களையும், பாடல் நாற்பதில் ஒன்பது பாடல்களையும் எடுத்தாண்டுள்ளார். எஞ்சிய எட்டுப் பாடல்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பாடலுக்குச் சான்றாக அமைத்துள்ளார்.[55]

புன்னைவனநாதன் ஒன்பது பாடல்களைப் பயன்படுத்தி யுள்ளார், பாடல்கள் பதினேழு, பத்தொன்பது, முப்பத்து ஒன்பது ஆகியவற்றில் முறையே இரண்டு பாடல்களைக் கையாண்டு எஞ்சிய மூன்று பாடல்களை மூன்று பாடலுக்கு உரை வரையப் பயன்படுத்தியுள்ளார்.[56]

தம்பிரான் முப்பத்து நான்கு பாடல்களை எடுத்தாண் டுள்ளார். பாடல்கள் இருபத்து ஏழு, முப்பத்தொன்று, முப்பத்து நான்கு ஆகியவற்றில் இரண்டு பாடல்களையும், பாடல் மூன்றில் மூன்று பாடல்களையும், பாடல் முப்பத்தொன்பதில் நான்கு பாடல்களையும், பாடல் முப்பத்து ஐந்தில் ஆறு பாடல் களையும், பாடல் நாற்பதில் எட்டுப் பாடல்களையும் எடுத்தாண்டு எஞ்சிய ஆறு பாடல்களை ஆறு பாடலுக்குச் சான்றாக அமைத்துள்ளார்.[57]

வை. இரத்தினசபாபதி ஆறு பாடல்களை எடுத்தாண் டுள்ளார்.[58]

மேற்கண்டவற்றின் வாயிலாகப் பெரிய புராணத்தை நான்கு உரையாசிரியர்களும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இவர்களுள் சுவாமிகள் மட்டும் பெரும் பான்மையான பாடல்களை எடுத்தாளுவதன் வாயிலாக இவரது பெரிய புராண நூற்பயிற்சியை அறிய முடிகிறது. மேலும் பெரிய புராணம் அடியவர்களின் பெருமையினை எடுத்துரைக் கும் நூல். அதுபோலவே நால்வர் நான்மணிமாலையும் அடியவர்களின் பெருமையினை எடுத்துரைப்பதால் இந் நூலினை விளக்க மிகுதியும் பெரிய புராண மேற்கோள்களைப் பயன்படுத்திச் சிறப்புடன் உரை வரைந்துள்ளார் சுவாமிகள் என்பது குறிப்பிடத்தக்கது.

இனி, பக்தி இலக்கியத்தில் புராண மேற்கோள்களை எடுத்தாண்ட உரையாசிரியர்களின் தனித்திறன் விளக்கப்படும்.

*புராணங்கள்*

புராணங்களிலிருந்து பெரும்பாலும் புராண வரலாறுகளை நிறுவ உரையாசிரியர்கள் மேற்கோள்களைக் கையாண் டுள்ளனர்.

**கந்தபுராணம் :** இந்தப் புராணத்தை நான்கு உரையாசிரி யர்களும் பயன்படுத்தியுள்ளனர். சுவாமிகள் இந்நூலிலிருந்து

இருபத்தொன்பது பாடல்களை எடுத்தாண்டுள்ளார். பாடல்கள் பதினெட்டு, இருபத்து இரண்டு, முப்பத்து ஆறு ஆகியவற்றில் இரண்டு பாடல்களையும், பாடல்கள் ஒன்பது, இருபத்து நான்கு, முப்பத்து ஒன்று ஆகியவற்றில் நான்கு பாடல்களையும் பாடல் பன்னிரண்டில் ஐந்து பாடல்களையும் எடுத்தாண்டு எஞ்சிய ஆறு பாடல்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பாடலுக்கு விளக்கமளிக்கக் கையாண்டுள்ளார்.[59]

கந்தபுராணத்திலிருந்து புன்னைவனநாதன் ஐந்து பாடல்களைக் கையாண்டுள்ளார். பாடல்கள் பதினேழு, பத்தொன்பது, முப்பத்து ஒன்பது ஆகியவற்றில் இரண்டு பாடல்களையும் எஞ்சிய மூன்று பாடல்களை ஒவ்வொரு பாடலுக்கும் சான்றாக அமைத்துள்ளார்.[60]

இப்புராணத்திலிருந்து தம்பிரான் பதினான்கு பாடல்களைச் சான்றாக எடுத்தாண்டுள்ளார். பாடல் முப்பத்தாறில் இரண்டு பாடல்களையும் பாடல்கள் இருபத்து இரண்டு, முப்பத்து ஒன்று ஆகியவற்றில் மூன்று பாடல்களையும், பாடல் இருபத்து நான்கில் நான்கு பாடல்களையும் பயன்படுத்தி எஞ்சிய இரண்டு பாடல்களை இரண்டு பாடல் உரையில் பயன்படுத்தியுள்ளார்.[61]

கந்தபுராணத்திலிருந்து வை. இரத்தினசபாபதி ஒரு பாடலை பயன்படுத்தியுள்ளார்.[62]

மேற்கண்டவற்றின் வாயிலாக நான்கு உரையாசிரியர்களும் கந்தபுராணத்தைப் பயன்படுத்தியுள்ளனர் எனினும், மிகுதியும் பயன்படுத்திச் சுவாமிகள் உரை எழுதியுள்ளார் என்பதை அறிய முடிகிறது.

**காஞ்சிப்புராணம் :** இப்புராணத்தைச் சுவாமிகள், புன்னைவனநாதன் தம்பிரான் ஆகியோர் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள் ஆறு பாடல்களைச் சான்றாக அமைத்துள்ளார். பாடல் முப்பத்து ஏழில் மூன்று பாடல்களை எடுத்தாண்டு எஞ்சிய மூன்று பாடல்களைத் தனித்தனிப் பாடல்களின் உரையில் கையாண்டுள்ளார்.[63]

காஞ்சிப் புராணத்திலிருந்து புன்னைவனநாதன் மூன்று பாடல்களைக் எடுத்தாண்டுள்ளார். தம்பிரான் தம் உரையில் ஒரு பாடலைக் கையாண்டுள்ளார்.[64] சுவாமிகள் காஞ்சிப்

புராணத்தை மிகுதியும் கையாண்டு தன்னுடைய புராண இலக்கிய அறிவை வெளிப்படுத்தியுள்ளார். வை. இரத்தின சபாபதி இப்புராணத்தைக் கையாளவில்லை.

**கோயிற் புராணம் :** இந்நூலினைச் சுவாமிகள் இரண்டு இடங்களிலும், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகியோர் ஓர் இடத்திலும் பயன்படுத்தியுள்ளனர்.[65] உரையாசிரியர் வை. இரத்தினசபாபதி இந்நூல் மேற்கோளைப் பயன்படுத்த வில்லை.

**திருவிளையாடல் புராணம் :** இப்புராணத்தைச் சுவாமிகள், புன்னைவனநாதன் தம்பிரான் ஆகியோர் பயன்படுத்தி யுள்ளனர்.

சுவாமிகள் இருபத்து மூன்று பாடல்களைக் கையாண் டுள்ளார். பாடல்கள் இருபத்தொன்று, இருபத்தைந்து, நாற்பது ஆகியவற்றில் இரண்டு பாடல்களையும், பாடல்கள் எட்டு, இருபத்து ஒன்பது ஆகியவற்றில் மூன்று பாடல்களையும் பயன் படுத்தி எஞ்சிய பதினொரு பாடல்களைத் தனித்தனிப் பாடலுக்குச் சான்றாக அமைத்துள்ளார்.[66]

புன்னைவனநாதன் மூன்று இடங்களில் பயன்படுத்தி யுள்ளார். தம்பிரான் தம் உரையில் ஏழு பாடல்களை எடுத் தாண்டுள்ளார். பாடல் நாற்பதில் இரண்டு பாடல்களையும், ஏனைய ஐந்து பாடல்களைத் தனித்தனி பாடலுக்குச் சான் றாகக் கையாண்டுள்ளார்.[67] வை. இரத்தினசபாபதி இப் புராணத்தைப் பயன்படுத்தவில்லை.

திருவிளையாடல் புராணத்தைச் சுவாமிகள் மிகுதியாக ஆள்வதினின்றும் அவரது புராண நூற்பயிற்சியை அறிய முடிகிறது.

**இலிங்க புராணம் :** இந்நூலினைச் சுவாமிகள், தம்பிரான் ஆகியோர் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளனர். சுவாமிகள் பயன்படுத்தியிருக்கும் அதே இடத்தில் அதே பாடலைத் தம்பிரானும் எடுத்தாண்டுள்ளதால் மேற்கோள்களைக் கையாளுவதில் தம்பிரான், சுவாமிகளைப் பின்பற்றியுள்ளார் என்பதை அறியமுடிகிறது.[68] ஏனைய உரையாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

*சீகாழித்தல புராணம் :* இந்நூலிலிருந்து தம்பிரான் நான்கு பாடல்களைப் பயன்படுத்தியுள்ளார் இதனை வை. இரத்தினசபாபதி ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார். இவர்களுள் வை. இரத்தினசபாபதி, பாடலை எடுத்துக் காட்டாமல் சீகாழித்தல புராணத்தால் உணர்க என நூலினை மட்டும் சுட்டிக் காட்டிச் செல்வது குறிக்கத்தக்கது.[69] ஏனைய உரையாசிரியர்களான சுவாமிகள், புன்னைவனநாதன் ஆகியோர் இப்புராணத்தைக் கையாளவில்லை.

*திருத்தணிகைப் புராணம் :* இந்நூலினைச் சுவாமிகள் ஓர் இடத்திலும், தம்பிரான் மூன்று இடங்களிலும் பயன்படுத்தியுள்ளனர்.[70] ஏனைய உரையாசிரியர்கள் புன்னைவனநாதன், வை. இரத்தினசபாபதி ஆகியோர் பயன்படுத்தாமல் சென்றுள்ளனர்.

**பேரூர்ப் புராணம் :** இந்நூலினைச் சுவாமிகள், தம்பிரான் ஆகியோர் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளனர்.[71] ஏனைய உரையாசிரியர்கள் புன்னைவனநாதன், வை. இரத்தினசபாபதி ஆகியோர் கையாளவில்லை.

**சேதுபுராணம், *திருகூவப்புராணம், திருவாவடுதுறை* புராணம் :** சேதுபுராணம், திருக்கூவப்புராணம் திருவாவடுதுறைப் புராணம் ஆகியவற்றை சுவாமிகள் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளார்.[72] ஏனைய உரையாசிரியர்கள் கையாளவில்லை.

### பக்தி இலக்கிய சிற்றிலக்கியங்கள்

நால்வர் நான்மணிமாலை பக்தி இலக்கிய சிற்றிலக்கியமாகத் திகழ்கிறது. இதனை விளக்கப்புகுந்த உரையாசிரியர்கள், உரைகளில் மேற்கோள்களாகப் பக்தி இலக்கியச் சிற்றிலக்கியங்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

*சிவானந்த மாலை :* இந்நூலினைச் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகியோர் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளனர்.[73] வை. இரத்தினசபாபதி கையாளவில்லை.

*இஷ்டலிங்க அபிஷேக மாலை :* இந்நூலினைச் சுவாமிகள், தம்பிரான் ஆகியோர் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளனர்.[74] ஏனைய உரையாசிரியர்கள் கையாளவில்லை.

**சதமணிக்கோவை :** இந்நூலினைச் சுவாமிகள், தம்பிரான் ஆகியோர் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளனர்.[75] புன்னைவனநாதன், வை. இரத்தினசபாபதி ஆகியோர் பயன்படுத்தவில்லை

*சிதம்பர மும்மணிக்கோவை :* இதனைச் சுவாமிகள் இரண்டு இடங்களிலும், புன்னைவனநாதன் ஓர் இடத்திலும் எடுத்தாண்டுள்ளனர்.[76] ஏனைய உரையாசிரியர்கள் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் கையாளவில்லை.

*திருவள்ளுவமாலை :* இந்நூலினைச் சுவாமிகள், தம்பிரான் இருவரும் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளனர்.[77] புன்னைவனநாதன், வை. இரத்தினசபாபதி ஆகியோர் கையாள வில்லை.

*நால்வர் நான்மணிமாலை :* இந்நூலினை விளக்கப் புகுந்த உரையாசிரியர்கள் இந்நூலில் உள்ள பாடல்களை மேற் கோளாக அமைத்து மாட்டெறிந்து விளக்கமளித்துள்ளனர்.

தம்பிரான் இரண்டு இடங்களிலும், வை. இரத்தினசபாபதி ஓர் இடத்திலும் எடுத்தாண்டுள்ளனர்.[78] ஏனைய உரையாசிரியர் களான சுவாமிகள், புன்னைவனநாதன் ஆகியோர் பயன் படுத்தவில்லை.

*கோயில் மூத்த திருப்பதிகம் :* இந்நூலினை வை. இரத்தின சபாபதி ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[79] ஏனைய உரை யாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

*சதமணிமாலை :* இந்நூலினைச் சுவாமிகள் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[80] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாள வில்லை.

*சிதம்பரச் செய்யுட் கோவை :* இதனைச் சுவாமிகள் ஓர் இடத்தில் கையாண்டுள்ளார்.[81] மற்றைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

*சிவஞான பாலய தேசிகர் பிள்ளைத்தமிழ் :* இந்நூலினை வை. இரத்தினசபாபதி ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[82] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

*தனித்திருக்குறுந்தொகை :* இதனைப் புன்னைவனநாதன் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளார்.[83] ஏனைய உரையாசிரி யர்கள் கையாளவில்லை.

*திருவாரூர் நான்மணிமாலை :* இதனைச் சுவாமிகள் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[84] பிற உரையாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

**திருவெங்கைக் கலம்பகம்:** திருவெங்கைக் கலம்பகத்தைத் தம்பிரான் ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளார்.[85] பிற உரையாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

### பிற இலக்கியங்கள்

திருநள்ளாற்றுத் திருப்பதிகத்தைச் சுவாமிகள், புன்னைவன நாதன், தம்பிரான் ஆகியோர் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளனர்.[86] வை. இரத்தினசபாபதி பயன்படுத்தவில்லை.

திருத்தாண்டகத்தை வை. இரத்தினசபாபதி ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[87] எஞ்சிய உரையாசிரியர்கள் பயன் படுத்தவில்லை. தேவாரத்திருவிருத்தத்தைத் தம்பிரான் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[88] (காண்க. பின்னிணைப்பு: 2)

### இடம்சுட்டா மேற்கோள்கள்

உரையாசிரியர்கள் மேற்கோள்களைப் பயன்படுத்தும் போது தாம் எடுத்தாண்ட நூல்கள், நூலாசிரியர்கள் பெயரைக் குறிப்பிடாமல் செல்வதும் உண்டு. இதனால் அவர்கள் எடுத் தாண்ட மேற்கோள்கள் எந்த இலக்கியத்தில் பயின்றுள்ளன என்பதை அறிய முடியாச் சூழலில் அவை இடம் சுட்டா மேற் கோள்களாக அமைந்து விடுகின்றன. இருப்பினும் ஆய்வாளர் அரிதின் முயன்று அவற்றுள் பல மேற்கோள்களின் மூல நூலினை அறிய முடிந்தது; சில மேற்கோள்கள் அரிதின் முயன்றும் அறியப் பெற இயலவில்லை. அவை இதில் அடங்கு கின்றன. சுவாமிகள் நான்கு பாடல்களையும், புன்னைவன நாதன் ஒரு பாடலையும், தம்பிரான் நான்கு பாடல்களையும், வை. இரத்தினசபாபதி மூன்றுப் பாடல்களையும் இடம் சுட்டா மேற்கோள்களாக எடுத்தாண்டுள்ளனர்.[89]

(காண்க பின்னிணைப்பு: 3)

### மேற்கோளாட்சியின் நோக்கம்

உரையாசிரியர்கள் மேற்கோள்களை 1. நூல் சிறப்புக் கூறல், 2. பெயர் விளக்கமளித்தல் 3. இலக்கண விளக்கம், 4. சொற்பொருள் விளக்கம், 5. தத்துவ விளக்கம், 6. புராணக் கதைக் கூறல் ஆகியவற்றுக்காகப் பயன்படுத்தியுள்ளனர்.

**நூல் சிறப்புக் கூறல்:** நான்கு உரையாசிரியர்களும் சமய குரவர்கள் நால்வருடைய நூல்களைப் புகழ்ந்து கூறுவதற்குப் பிற இலக்கிய மேற்கோள்களைச் சான்றாக அமைத்துள்ளனர்.

சுவாமிகள்,

> கற்க கசடறக் கற்பவை என்றபடி உண்மை நூலாராய்ச்சியின் உவப்புடையராய் முதனூலிரண்டனுள் வேதமானது, பத்தி செய்து அரனருட் பெறும் பத்தருக் கன்றி முத்தி யெய்தலரிது என மொழியும் பொது நூலும், சிவாகமம், அப்பொதுநூற் சத்தியப் பொருட்டெளிவெலாம் சத்தி நிபாதர்க்கு உய்த் துணர்த்திய சிறப்பு நூலுமாகலின், அவ்வாகம வுணர்ச்சியுடையோரே அளவுபடாச் சிவனியல்புட் சிறிதறிந்தோராவரெனத் துணிந்து, ஏனை நூலாராய்ச் சினும் அவ்வாராய்ச்சியின் மிக்குத் தேர்ந்தவரென்பது தோன்ற, நல்லிசைப் புலவரென்றாரெனினும் அமையும்.[90]

என்று நூற் சிறப்பை விளக்கத் திருக்குறள் மேற்கோளை எடுத்தாண்டுள்ளதை அறிய முடிகிறது.

புன்னைவனநாதன், நூலின் சிறப்பை விளக்கச் சுவாமிகள் எடுத்தாண்ட திருக்குறளைத் தாமும் எடுத்தாண்டுள்ளார். இதனை,

> கற்க கசடறக் கற்பவை என்றபடி உண்மை நூலாராய்ச்சியின் உவப்புடையராய் முதனூல் இரண்டனுள் மறையானது அன்பு செய்து அரன் அருள் பெறும் அன்பருக்கன்றி வீடடைதல் அரிது என மொழியும் பொது நூலும், சிவாகமம் அப்பொது நூல் மெய்ப்பொருட்டெளிவு எலாம் அருள் வீழ்ச்சி யுற்றார்க்கு உய்த்துணர்த்திய சிறப்பு நூலும் ஆகலின், அவ்வாகம உணர்ச்சி உடையோரே அளவுபடாச் சிவன் இயல்புட் சிறிது அறிந்தோர் ஆவர் எனத் துணிந்து, ஏனை நூலாராய்ச்சியினும் அவ்வாராய்ச்சி யின் மிக்குத் தேர்ந்தவர் என்பது தோன்ற, நல்லிசைப் புலவர், என்றார் எனினும் அமையும்.[91]

என்னும் உரை விளக்கத்தின் வாயிலாக அறிய முடிகின்றது.

சுவாமிகள் உரையையும், புன்னைவனநாதன் உரையையும் கூர்ந்து நோக்கினால் புன்னைவனநாதன், சுவாமிகள் உரையைச் சந்திப் பிரித்து எழுதியும், வடசொற்களைத் தமிழ்ப் படுத்தியும் எடுத்தாண்டுள்ளதை அறியமுடிகிறது. இதுபோன்ற இடங்கள் புன்னைவனநாதன் உரையில் மிகுதியும் காணக் கிடக்கின்றன.

தம்பிரான் திருக்கோவையாரிலிருந்து மேற்கோளைப் பயன் படுத்தித் திருக்கோவையாரின் சிறப்பினை உணர்த்துகிறார்.[92]

வை. இரத்தினசபாபதி, நம்பியாரூரரின் பாடலைச் சிறப்பிக்க

> வாக்கிற் கருணகிரி வாதவூரர் கனிவில்
> தாக்கிற் றிருஞான சம்பந்தர் — நோக்கிற்கு
> நக்கீர தேவர் லயத்திற்குச் சுந்தரனாற்
> சொற்குறுதிக் கப்பரெனச் சொல்[93]

என்று சான்றோர் பாடல் ஒன்றை எடுத்துக்காட்டி விளக்க மளித்துள்ளார்.

மேற்கண்ட மேற்கோள்களின் வாயிலாக நூலின் சிறப் பினை உணர்த்த நான்கு உரையாசிரியர்களும் மேற்கோள் களைக் கையாண்டுள்ளதை அறிய முடிகிறது.

**பெயர் விளக்கமளித்தல் :** பெயர்கள் இடுகுறித்தன்மை யாகவும், காரணத்தன்மையாகவும் அமையும்.[94] அவ்வகையில் பெயர்களை விளக்க புகும் உரையாசிரியர்கள் அவற்றிற்கு மேற்கோள்களைக் காட்டி அரண் செய்துள்ளதைத் தம்பிரான் உரையில் காணமுடிகிறது.

> பெருந்துறை ஒரு திருப்பதி. வெட்டுந்தோறும் புனல் பெருகி எங்கும் பரவலால் அப்பெயர் பெற்றது. இதனை, ஒழிதரான் வெட்டுந்தோறு முறுபுனல் பெருகி யெங்கும், வழிதரப் பரவலாலே பெருந்துறை யெனும் பேர் வாய்ந்த, தழிவிலந் நாரங் கண்டோ ரியாவரு மதிச யித்தார், பிழிமலர் வேப்பந் தாரான் பேருவப் புடையனானான் எனவரும் திருப்பெருந்துறைப் புராணச் செய்யுளானறிக. பிறவிக் கடலைக் கடக்குந் துறையாதலால் 'பெருந்துறை' எனக் கோடலும் ஒன்று.

என்று கூறுவதின் வாயிலாகப் பெருந்துறை என்னும் பெயரைக் காரணப் பெயராக அமைத்துக் காட்டியுள்ளதை அறிய முடிகிறது.[95]

**இலக்கண விளக்கம் :** இலக்கண விளக்கத்திற்கு நான்கு உரையாசிரியர்களும் மேற்கோள்களைப் பயன்படுத்தி யுள்ளனர். இலக்கியப் பாடம் நடத்தப்புகும் ஆசிரியர் இலக்கி யங்களில் உள்ள இலக்கணக் கூறுகளை இலக்கியப் பாடம் நடத்தும் போதே விளக்கமளித்தலும் உண்டு. இலக்

கணத்தைத் தனி வகுப்புகளில் நடத்தாது இலக்கிய வகுப்பு களில் நடத்துதலை நடைமுறை இலக்கணம் கற்பித்தல் என்பர்.[96] இந்த முறையில் உரையாசிரியர்கள் இலக்கண விளக்கத்திற்கு மேற்கோள்களைக் கையாண்டுள்ளனர்.

சுவாமிகள் "பாய்தலென்னும் இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின் மேலேற்றப்பட்டது 'ஊருணி நீர் நிறைந்தற்று' (குறள்) என்புழிப்போல" என்று இடத்தில் நிகழும் தொழிலை இடத்தின் மேல் ஏற்றிக் கூறியதற்குச் சான்று அமைத்துக் காட்டியுள்ளார்.[97]

புன்னைவனநாதன், "வழிபடுதல் என்பது சொல் எச்சம். 'பெற்றாற் பெறின் பெறுவர் பெண்டிர் பெருஞ் சிறப்புப், புத்தேளிர் வாழும் உலகு' என்னுந் திருக்குறளிற் போல" என்பதால் இவரது இலக்கண விளக்கத்தை அறிய முடிகிறது.[98]

தம்பிரான், "முலை என்பது அதன் பாலையுணர்த்தின மையின் முதலாகு பெயர். பாடலின் சுரத்தல் என்னும் இடத்து நிகழ் பொருளாகிய தொழில் முலையாகிய இடத்தின் மேலேற்றப்பட்டது...... இதனை, 'திருமுலைப் பாலினோடு' என்னும் திருவிளையாடற் புராணச் செய்யுளானுணர்க" என்று கூறி இலக்கண விளக்கமளித்துள்ளார்.[99]

சங்க இலக்கியத்தில் அகநானூற்றுப் பாடல் ஒன்றை வை. இரத்தினசபாபதி "சுட்டு உயர்வு நோக்கியது. 'இவன் மகனே தோழி, என்று அகநானூற்றுப் பாடல் அடியில் 'இவன்' 'போன்று" என்று கூறி இலக்கண விளக்கத்திற்கு மேற்கோளைப் பயன்படுத்தியுள்ளார்.[100]

மேற்கண்ட சான்றுகளின் வாயிலாக உரையாசிரியர்கள் நால்வரும் இலக்கண விளக்கத்திற்கு மேற்கோள்களைக் கையாண்டுள்ளதை அறிய முடிகிறது.

சொற்பொருள் விளக்கம் : சொற்கள் உணர்த்தும் பொருள் களை உரையாசிரியர்கள் விளக்குமிடத்துச் சான்று காட்டி நிறுவுவதால் பொருள்கள் விளக்கமுறுவதும் நூலாசிரியரின் சொல்திறனை ஊக்குவிப்பதுமாக அமைகிறது.

சுவாமிகள், "அன்பின் முதிர்வே அருளென்பதை அருளென்னு மன்பின் குழவி' என்பதானானும்," என்று அன்புக்கும் அருளுக்கும் பொருள் வேறுபடுத்துவதை அறிய முடிகிறது.[101]

புன்னைவனநாதன், "நடைவாய் பிணம் என்றது, 'உரம் ஒருவற்குள்ள வெறுக்கை அஃதில்லார், மரமக்களாதலே வேறு' என்றாங்கு இழித்தற்கண் வந்தது" என்று கூறியுள்ளார்.[102]

தம்பிரான், அலத்தல் — துயருறல் என்பதனை

கலந்து நின்னடியா ரோடன்றுவாளா களித்தி ருந்தேன்
புலர்ந்து போன காலங்கள் புகுந்து நின்ற
திடர்பின்னாள்
உலர்ந்து போனே னுடையானே யுலவா வின்பச்
சுடர்காண்பான்
அலந்து போனே னருள்செய்யா யார்வங் கூர
வடியேற்கே
(திருவாசகம் 485)

என்னும் பாடலின் வழிச்சொற்பொருள் விளக்கம் அளித்துள்ளதை அறியமுடிகிறது.[103]

வை. இரத்தினசபாபதி, "மிடி என்பது இல்லாமை. செல்வம் இருந்தும் பண்புடைமை இல்லாத இடம் மிடியமைந்த இடமே. சிறந்த இல்லாளாகக் கற்புக்கரசியாக இருக்கும் பெண்மணி இருந்து இல்லறம் நடத்தும் இல்லங்களாகப் பார்த்துக் கடவுள் நடந்தார். சிறந்த இல்லாள் அமைந்த இடம் மிடியிலாமனை.

'இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக்கடை'

என்பது திருக்குறள்" என்று கூறிச் சொற்பொருள் விளக்கமளித்துள்ளார்.[104]

**தத்துவ விளக்கம்:** தத்துவக் கருத்துக்களை விளக்க உரையாசிரியர்கள் இலக்கிய நூல்களைப் பயன்படுத்தியுள்ளனர். நான்கு உரையாசிரியர்களும் இம்முறையைக் கையாண்டுள்ளனர்.

சுவாமிகள், "மூவகைத் துன்பம் இலவாதலை, 'வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க், கியாண்டு மிடும்பையில' (குறள்) என்பதனானும் அறிக" என்று கூறித் தத்துவக் கருத்தை விளக்கியுள்ளார்.[105]

புன்னைவனநாதன், "பரமயோகியாயினமையை,

நாலு கரணங்களும் ஒன்றா நல்ல அறிவு மேற்கொண்டு
காலும் பிரமநாடி வழிக் கடுத்துச் செலுத்தக் கபாலந
ஏலவேமுன் பயின்றநெறி எடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாதம் அடையார் கயிலை முன்
அடைந்தார்''

என்று சான்று காட்டித் தத்துவக் கருத்தை எடுத்துக் கூறி யுள்ளார்.[106]

தம்பிரான், ''திருவைந்தெழுத்துப் பரசிவரூபமாய் விளங்குதலை,

சிவனரு ளாய சிவன்றிரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே

எனவரும் திருமந்திரச் செய்யுளாலுணர்க'' என்று கூறித் தத்துவக் கருத்தை எடுத்துக் காட்டியுள்ளார்.[107]

வை. இரத்தினசபாபதி, ''இறைவன் திருவடியானது ஞானத்தையும், இன்பத்தையும் அளிக்க வல்லது. 'திருவடி ஞானம் திருப்பெருகு சிவஞானம்' என்பது சேக்கிழார் வாக்கு. இறைவன் திருவடி, இன்பம் அளிக்கும் என்பதை

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

என்ற திருநாவுக்கரசர் தேவாரத்தால் உணர்க'' என்று கூறித் தத்துவ விளக்கமளித்துள்ளார்.[108]

மேற்கண்டவற்றின் வாயிலாகத் தத்துவ விளக்கத்திற்கு உரையாசிரியர்கள் மேற்கோள்களைக் கையாண்டுள்ளதை அறியமுடிகிறது.

புராணக் கதைக் கூறல் : உரையாசிரியர்கள் இலக்கியங்களில் பயின்று வரும் புராணக் கூறுகளை விளக்கப் புராணக் கதைகள் அமைந்த பாடல்களைச் சான்றாக அமைத்துள்ளனர்.

சுவாமிகள், ''பாஞ்சசன்னியம் பஞ்சசனனுரு வெலும் பாதலை,

சங்க நேருருப் பஞ்ச சனப்பெயர்
வெங்க னானையு மாயிடை வீட்டியே
துங்க வோசை வலம்புரித் தோற்றமா
மங்க வன்ற னெலும்பை யணிந்தனன்
(காஞ்சிப் புராணம். மச்சீசப் படலம். 9)

என்று கூறிப் புராணக் கதையை விளக்கியுள்ளார்.[109]

புன்னைவனநாதன், திருமால் பரிதி பெற்றமையை
அவன் சலந்தரனை வீட்டும் ஆழியை வாங்கப் பன்னாட்
சிவன் கழல் வழிபட்டோர் நாள் செங்கணே மலராச்சாத்த
உவந்தனன் விடைமேல் தோன்றி அப்படை உதவப் பெற்று
நிவந்தனன் அதனால் வையம் நேமியான் என்ப மாதோ

என்ற கந்த புராணச் செய்யுளால் புராணக் கதையை விளக்கிக் காட்டியுள்ளதை அறியமுடிகிறது.[110]

தம்பிரான், "பிட்சாடண மூர்த்தியாய் ஏறூர்ந்து பலிக்கு எழுந்தருளினார் என்பது புராணக் கூற்று. இதனை, 'பெற்ற மேறிப் பலிக்கு வரும் பெருமான்' எனவரும் பெரிய புராணத்தில் மூர்க்க நாயனார் புராணச் செய்யுளானுணர்க" என்று கூறிப் புராண மரபினை விளக்கிச் சென்றுள்ளதை அறியமுடிகிறது.[111]

வை. இரத்தினசபாபதி, "அருகர்கள் எண்ணாயிரவர். அவர்கள் தம் சமய உண்மையை ஓர் ஏட்டில் எழுதி வைகை யாற்றில் இட்டனர். அதுபோட்ட இடம் தெரியாமல் தண்ணீராற் புதைக்கப் பெற்றது. ஞான சம்பந்தப் பெருமான்,

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

என்ற திருத்தேவாரத்தை எழுதி, ஏட்டை வைகையில் இட்டனர். அவ்வேடு தண்ணீரை எதிர்த்து ஏறிச் சென்றது" என்று கூறிப் புராண கதையை எடுத்துரைத்துள்ளார்.[112]

மேற்கண்ட சான்றுகளின் வழி உரையாசிரியர்கள் புராணக் கதையை விளக்க மேற்கோள்களைக் கையாண்டுள்ளனர் என்பது தெளிவு.

மேற்கோளாட்சியின் நோக்கங்கள் மேற்கண்டவற்றின் வாயிலாகத் தெளிவடைகின்றன.

சொற்பொருளுரைத்தல்

சொல்லினுடைய பொருளை உரைப்பது சொற்பொருளுரைத்தல் எனப்படும். உரையாசிரியர்கள் சொற்பொருள் விளக்குவதின் வாயிலாக அவர்களது நூற்புலமை, பல்துறையறிவு, வாழ்க்கையனுபவம் போன்றவை வெளிப்படுகின்றன என்பார் தமிழண்ணல்.[113] அந்நிலையில் நால்வர் நான்மணிமாலை உரையாசிரியர்களின் சொற்பொருள் விளக்குந் திறனை 1. அகராதிப் பொருள் கூறல், 2. இடம் நோக்கிய பொருள் கூறல், 3. கலைச் சொல் விளக்கம் அளித்தல், 4. உவமை காட்டிப் பொருள் கூறல், 5. தொகை கூறிப் பொருளுரைத்தல், 6. காரணங்கூறிப் பொருள் கூறல், 7. சான்று காட்டிப் பொருள் கூறல், 8. இலக்கணம் கூறிப் பொருள் கூறல், 9. பிரித்துப் பொருள் கூறல், 10. திசைச் சொல் கூறல் எனப் பத்து வகைப் படுத்தலாம்.

அகராதிப் பொருள் கூறல் : அகராதியில் அமைவது போன்று சொற்களுக்குப் பொருளுரைத்தல் இதன்பாற்படும்.

சுவாமிகள், "வாச்சியம் வாசகத்தான் உணர்த்தப்படுவது," "அரன்—ஆன்மாக்களுடைய பாசத்தையரிப்பவன்," "வண்மை — வளத்தின் தன்மை" போன்ற சொற்களுக்கு அகராதியில் காணப்படுவது போன்று பொருள் விளக்கம் செய்தலை உரையில் காணமுடிகிறது.[114]

புன்னைவனநாதன், சுவாமிகள் மேற்பயன்படுத்திய அதே சொற்களுக்கு அதே பொருள் உரைப்பதுடன் அதே இடத்திலும் கையாண்டுள்ளதால் சுவாமிகளின் உரையைத் தழுவிச் சென்றுள்ளதை அறியமுடிகிறது.[115]

தம்பிரான், "எருத்தம் — பிடரி," "நுதலல் — கருதுதல்" போன்றச் சொற்களுக்கு அகராதிப் பொருளைக் கூறியுள்ளார்.[116]

வை. இரத்தினசபாபதி, "காப்பு — காத்தல்," "திருநீறு — விபூதி," "மிடறு — கண்டம்" என்று சொற்பொருள் உரைத்துள்ளார்.[117]

மேற்கண்ட சான்றுகளின் வழி உரையாசிரியர்கள் விளக்கும் அகராதிப் பொருள்களை உணரமுடிகிறது.

**இடம் நோக்கிய பொருள் கூறல் :** சொற்கள் உணர்த்தும் இயல்பான பொருளை விடுத்து, அச்சொல் அமைந்திருக்கும் இடத்தின் அடிப்படையில் பொருளை வரையறுப்பது இடம் நோக்கிய பொருளாகும்.[118]

சுவாமிகள் தம் உரையில், 'உளத்தருள் — உளத்தோடு கூடிய அருள், ஈண்டு உளமென்பது (அவ்வமமை யழிப்பிக் கும்) உளக்குறிப்பின் மேற்று'' என்று கூறுவதன் வாயிலாகச் சுவாமிகள் இடம் நோக்கிப் பொருள் கூறுவதனை உணர முடிகிறது.[119]

புன்னைவனநாதன், சுவாமிகள் எடுத்தாண்ட மேற்குறிப் பிட்ட சொல்லை அதே இடப் பொருளிலும், இடத்திலும் பயன் படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.[120]

தம்பிரான், "ஆன் — ஈண்டுக் காளையை உணர்த்திற்று'' என்பதன் வாயிலாக இடம் நோக்கிப் பொருள் கொள்வதை அவர் உரைவழி அறியமுடிகிறது.[121]

வை. இரத்தினசபாபதி, "மன்னன் — மன்னுதலை நிலை பெறுதலைச் செய்பவன். இறைவனுடைய பெருமையை — பரத்துவத்தை இவ்வுலகில் நிலை நிறுத்திக் காத்தவன் ஆதலின் ஞானச்சம்பந்தப் பெருமானை மன்னன் என்றார்'' என்று கூறி இடம் நோக்கியப் பொருளைத் தெளிவுபடுத்தியுள்ளார்.[122]

மேற்கண்ட சான்றுகளின் வழி உரையாசிரியர்கள் இடம் நோக்கிய பொருளைத் தம் உரையில் பயன்படுத்தியுள்ளனர் என்பது புலப்படுகிறது.

**கலைச்சொல் விளக்கம் அளித்தல் :** கலைச் சொற்கள் என்பன கோட்பாடுகளின் சிறு சிறு வடிவங்கள்.[123] இவை தனிப்பட்ட துறையின் செய்திகளை விளக்குவதற்கும், விவாதிப் பதற்கும் பயன்படுகின்றன. பொதுமக்களுக்கு எளிதில் விளங் காது அந்தந்தத் துறையில் ஓரளவு ஈடுபாடும், பயிற்சியும் உடையவர்களே இந்தச் சொற்களைப் புரிந்து கொள்ள முடியும்.[124] அவ்வகையில் உரையாசிரியர்கள் தங்கள் புலமையை வெளிப்படுத்த கலைச் சொற்களைக் கையாண் டுள்ளனர்.

சுவாமிகள்,

> மடமையாவது: பிறருணர்த்துவதை யுட்கொள்வ தன்றித் தாமுணர்ந்ததை வெளிவிடாமை, துறத்

தலாவது : தானல்லாதவுடம்பை யானென்னும் அகப் பற்றையும் தன்னோடியை பில்லாத பொருளை என தென்னும் புறப்பற்றையும் ஆசிரியரருளியவாற்றானும் அரிய யோகப் பயிற்சியானும் யான் என தன்மை தெளிந்து விடுதல்.

என்று கலைச் சொல்லுக்கு விளக்கமளித்துள்ளதை அறிய முடிகிறது.[125]

புன்னைவனநாதன், "சொற் செய்தல் — சொற்களான் உணரப்படாத அக்கடவுளை அவற்றான் உணரப்படுப வராக்கல், "சுட்டுதலாவது – பொது இயல்பான் அன்றிச் சிறப்பு இயல்பாற் குறிப்பித்தல்" போன்ற இடங்களில் கலைச் சொல் விளக்கமளித்துள்ளதை அறியமுடிகிறது.[126]

தம்பிரான், "தாண்டகமாவது, ஒவ்வோரடியும் இருபத்தா றெழுத்தின் மிக்குவர நான்கடியாற் பாடப்படும் பாட்டும்," "தொடர்பு – செய்யுள். அதற்கு எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பனவற்றின் தொடர்புடைமையாற் போந்த பெயர்" என்று கூறுவதால் இவரது கலைச் சொல் விளக்கத்தை அறியமுடிகிறது.[127]

வை. இரத்தினசபாபதி, "தேவன் — அன்பால் பிணிப்பவர் களுக்கு இன்பத்தைப் பொழிபவன்" என்று கூறிக் கலைச்சொல் விளக்கமளித்துள்ளார்.[128]

மேற்கண்ட சான்றுகளின் வழிக் கலைச்சொல் விளக் கத்தை நான்கு உரையாசிரியர்களும் கையாண்டுள்ளதை அறிய முடிகிறது.

உவமை காட்டிப் பொருள் கூறல் : உரைநடையில் இடம்பெறும் உவமைகள் உரைநடை சிறக்கவும், கருத்து எளிதில் விளங்கவும் பயன்படுகின்றன. இம்முறையில் உரை யாசிரியர்கள் உவமைகளைப் பொருள் விளக்கத்திற்குப் பயன் படுத்தியுள்ளனர்.[129]

சுவாமிகள், "உற்சர்ப் பிணியாவது — உலகம், வாழ்நாள் போக முதலியவற்றான் வளர்பிறை போலப் பெருகுங் காலம். அவசர்ப் பிணியாவது — அஃது அவற்றாற் றேய்பிறை போலச்

சுருங்குங் காலம்" என்னும் உவமையை எடுத்துக் காட்டிப் பொருள் விளக்கம் செய்துள்ளதை அறியமுடிகிறது. இது போன்ற உவமைகள் இவர் உரையில் பரவலாகக் காணப் பெறுகின்றன.[130]

புன்னைவனநாதன், "உற்சர்ப் பிணியாவது ...... போலச் சுருங்குங் காலம்" என்று சுவாமிகள் பயன்படுத்திய உவமையைப் பயன்படுத்திப் பொருள் விளக்கமளித்துள்ளார்.[131]

தம்பிரான், "கேடரியன் என்பது, அருங்கேடன் என்றாயாவாறு போல நுதல் நோக்குறுவோன் எனினுமாம்" என்று உவமை கூறிப் பொருள் கூறியுள்ளார்.[132]

வை. இரத்தினசபாபதி,

> சிந்தனைகள் செயல்கள் ஆகியவை ஒருமுகப்பட்டு இயங்குவதற்கு கடவுளை நினைத்தல், ஆனைமுகனை வணங்குதல் மரபு. தேர்வெழுதப் புகும் மாணாக்கர்கள் தேர்வெழுதத் தொடங்கும் ஐந்து மணித்துளிகள் தம் சிந்தனைகளை ஒரு முகப்படுத்துதல் வேண்டும் என்பது போல

என்னும் உவமையைக் கூறிப் பொருள் விளக்கம் அளித்துள்ளார்.[133]

மேற்கூறியவற்றின் வாயிலாக உரையாசிரியர்கள் உவமை காட்டிப் பொருள் கூறும் போக்கினை அறியமுடிகிறது.

**தொகை கூறிப் பொருளுரைத்தல் :** தொகைகளாகத் தொன்று தொட்டுக் கூறப்பட்டு வருவனவற்றை விரித்துக் கூறுதல் இம்முறையில் அடங்கும். இதனை நான்கு உரையாசிரியர்களும் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள், "எண் பெருங்குன்றங்களாவன அஞ்சனம், கவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், காஞ்சி, குஞ்சரசையம், ஏம கூடம், விந்தமென்பன" என்று தொகைக் கூறி அவற்றை விரித்துப் பொருள் கூறுவதை மேற்கண்ட சான்றின் வழி அறிய முடிகிறது.[134]

புன்னைவனநாதன்,

> வாழ்த்து மூவகைத்து. வாழ்த்தல், வணங்கல், பொருள் இயல்புரைத்தல் என்பன. இது பொருள்இயல்ப

> உரைத்தல். நிற்றல், இருத்தல், கிடத்தல். நடத்தல், உண்ணல், உவத்தல் முதலிய காலம் அனைத்தி னுள்ளும் என்பார் எஞ்சாமைப் பொருள்பட எப்போத கத்தும் என்றார்.

என்று கூறிப் பொருள் விளக்கம் அளித்துள்ளார்.[135]

தம்பிரான், "தூது செல்லுதல் — தூது மொழிகளைச் சொல்லச் செல்லுதல். தானே வகுத்துக் கூறுதல், கூறியது கூறுதல் என தூது இருவகைத்து. அவற்றுள் இது முந்தியது" என்று தொகைக் கூறி பொருள் விளக்கம் செய்துள்ளதை அறியமுடிகிறது.[136]

வை. இரத்தினசபாபதி,

> ஞானமாவது பாசஞானம், பசுஞானம், பதிஞானம் என மூன்றாய் நிற்குமாதலால் எத்தகைய ஞானத்தை விரும்பி ஈடுபடும் காலத்தும் ஞானவடிவாம் விநாயகப் பெருமான் திருவடிகளை இன்று வரை என்னைக் காத்த திருவருள் இனியும் காக்கும் என்ற செய்ந்நன்றி யறிவும், துணிபும் கொண்டு துன்பம் நினையும் வல்லமையுள்ளார்க்கு அறியாமையால் வரும் இல்லா மையோடு பெரும் பேரின்பமும் எய்தும் என்பதாம்.

என்று தொகைக் கூறிப் பொருள் விளக்கம் செய்துள்ளதை அறியமுடிகிறது.[137]

காரணங் கூறிப் பொருள் கூறல் : சொல்லின் பொருளைக் காரணத்தோடு விளக்குதல் இம்முறையின் பாற்படும். பொருளைக் காரணத்தோடு விளக்கும் பொழுது தெளிவு ஏற்படும். அம்முறையில் பொருளைக் காரணத்தோடு விளக்குதல் சிறந்த முறையாகிறது.[138] உரையாசிரியர்கள் இதன் அடிப்படையில் சொற்பொருளை விளக்கியுள்ளனர்.

சுவாமிகள், "வேதம், எழுதப் படுதலின்றிக் கேட்கப்பட்டே வழங்கலின் சுருதியெனப் பெயர் பெற்றது" என்று காரணத்தைக் கூறிச் சொற் பொருள் உரைத்துள்ளார்.[139]

புன்னைவனநாதன், "ஒவ்வொன்றும் மாணிக்கம் போலு தலின் 'மாணிக்கவாசகர், எனச் சிவபெருமானால் திருப்பெயர் பெற்றாராகலான்" என்றுக் காரணங் கூறிப் பொருள் விளக்க மளித்துள்ளார்.[140]

தம்பிரான், "ஆருகர் — ஆருகதன் என்பவனால் அமைக்கப் பட்ட மதத்தையுடையவர்; அறிவு குறைந்தவர்" என்று காரணங்காட்டிப் பொருளை விளக்கியுள்ளார்.[141]

வை. இரத்தினசபாபதி, "முறி — தளிர். தளிர் போன்ற கைகள் ஆகையால் வலிமையாக நின்று எழுத முடியாது" என்று காரணங் காட்டி பொருள் விளக்கம் செய்துள்ளார்.[142]

சான்று காட்டிப் பொருள் கூறல்: சொற்கள் உணர்த்தும் கருத்தை அல்லது பொருளைச் சான்று காட்டி நிறுவுதல் சான்று காட்டிப் பொருள் கூறல் எனப்படும். இதனை உரை யாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

சுவாமிகள்,

ஞானம் இருவகையாதலை,

இயம்பிய ஞானமோ திருவ கைப்படும்
பயன்றரு மரபரமும் பரமு மென்னவே
நயந்தரு கலைகளே யபர ஞானமா
முயர்ந்திடு பரஞ்சொலி னுணர்வென் றோதுவார்
(சதமணிமாலை: சாயம்பு, சூத்திரப்பொருள். 4)

என்று சான்றின் வழிப் பொருள் கூறியுள்ளதை அறிய முடிகிறது.[143]

புன்னைவன நாதன்,

மேற்பேறு எய்துதலை,

நிலத்துக்கு மேலாறு நீடுலகத் துச்சித்
தலத்துக்கு மேலேதான் என்பர் — சொலத்தக்க
சுத்தர்கள் சேர்காழிச் சுரன்ஞான சம்பந்தன்
பக்தர்கள் போய் வாழும் பதி.

(திருஞானசம்பந்தர் திருமும்மணிக்கோவை)

என்று சான்று காட்டிப் பொருள் விளக்கியுள்ளதை அறிய முடிகிறது.[144]

தம்பிரான்,

தவம் என்றது சரியை யாதிகளை. இதனை,

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி லின்ப — மிசைத்த
வருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனா ஞானத்தை வந்து

(சிவஞான போதம் : சூத். 8)

என்ற பகுதியை எடுத்துக்காட்டிச் சொற்பொருள் விளக்கி யுள்ளதை அறிய முடிகிறது.[145]

வை. இரத்தினசபாபதி, "பாவெனப்படுவது உன்பாட்டு என்றார். இக்கருத்தை உணர்ந்த, இராமலிங்க சுவாமிகள், 'ஊன்கலந்து, உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பதுவே' என்று கூறியருளினார்" என்று சான்றுகாட்டிப் பொருள் கூறி யுள்ளதை அறியமுடிகிறது.[146]

மேற்கண்டவற்றின் வாயிலாக உரையாசிரியர்கள் சான்று காட்டி விளக்கும் போக்கினைக் கையாண்டுள்ளனர் என்பது தெளிவு.

இலக்கணம் கூறிப்பொருள் கூறல்: சொற்களைச் சில இடங்களில் இலக்கணத்தோடு பொருத்திக் காட்டி விளக்குவது உரையாசிரியர்களின் மரபாக உள்ளது. இதனைச் சில எடுத்து காட்டுகள் வாயிலாக அறியலாம்.

சுவாமிகள், "நல்கினுமென்பதின் உம்மை இழிவு சிறப்பு", "விளங்கிழை — அன்மொழித்தொகை" என்று இலக்கணம் கூறிப் பொருள் உரைத்துள்ளார்.[147]

புன்னைவனநாதன், "வள்ளை — பொருளாகு பெயர்", 'மகிழ் இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகை" என்று இலக்கணங்கூறிப் பொருளை வெளிப்படுத்தியுள்ளார்.[148]

தம்பிரான், "தொடு மணற்கேணி — வினைத்தொகை" என்று இலக்கணம் கூறிப் பொருளை எடுத்துரைத்துள்ளார்.[149]

வை. இரத்தினசபாபதி, "நடை வாய்பிணம் — நடத்தல் வாய்ந்த பிணம் — நடைப்பிணம். இல்பொருளுவமை" என்று இலக்கணம் கூறிப் பொருளை வரையறுத்துள்ளார்.[150]

மேற்கண்ட சான்றுகளின் வழி இலக்கணம் கூறிப் பொருளை விளக்கும் உரையாசிரியர்களின் சொற்பொருள் நெறியை அறியமுடிகிறது.

*பிரித்துப் பொருள் கூறல் :* சொற்களுக்குப் பொருளுரைக்கும் போது அவற்றைப் பிரித்துப் பொருள் கொள்ளுதல் இம்முறை. இம்முறையினைத் தம்பிரான் உரையிலும், வை. இரத்தினசபாபதி உரையிலும் சிறப்பாகக் காணமுடிகிறது.

தம்பிரான் தம் உரையில், "அருகர் + கடல் = அருகக் கடல் என்றாயது" என்று பிரித்துப் பொருள் கூறியுள்ளார்.[151]

வை. இரத்தினசபாபதி தம் உரையில், "அருகர் + கடல் = சமணர்களாகிய கடல்" எனக் குறித்துள்ளார்.[152] இவர் தம்பிரான் போன்று பிரித்துப் பொருள் கொண்டமை அறிய முடிகிறது.

இவ்விரண்டு உரையாசிரியர்கள் கூட்டல் குறியீடுகளையும், சமன்பாட்டுக் குறியீடுகளையும் கொண்டுச் சொற்களின் பொருளை விளக்கியிருப்பது ஏனைய உரையாசிரியர்களிடம் இல்லாத பண்பாக அமைந்துள்ளது. இதுபோன்ற உரைப் பகுதிகள் இவ்விரண்டு உரைகளிலும் பரவலாகக் காணப் பெறுகின்றன.

*திசைச் சொல் கூறல் :* சொல் எளிதில் விளங்காத நிலையில், அந்தச் சொல் வழக்கில் உள்ள இடத்தைச் சுட்டிக் காட்டி அது, இந்த நாட்டுச் சொல் என்று கூறுவது இதில் அடங்கும். இந்த நெறியில் தம்பிரான் தம் உரையில் "அந்தோ — ஐயோ; இது சிங்கள நாட்டுச் சொல்" என்று திசைச் சொல்லைச் சுட்டிக் காட்டுவதால் நூலாசிரியர் சிவப்பிரகாசர் சிங்கள நாட்டுச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறிய முடிகிறது.[153]

மேற்கண்ட நிலைகளில் உரையாசிரியர்களின் சொற்பொருள் நெறி விளக்கமடைகிறது.

**சொற்பொருள் உரைத்தலில் உரையாசிரியர்களின் தன்மைகள் :** சொற்பொருள் உரைக்கப்புகும் உரையாசிரியர்கள் தங்களுடைய பல்துறை அறிவைப் பயன்படுத்தியுள்ளனர்.

சொற்பொருள் நெறியானது அகராதியில் அமைவது போன்று அகராதிப் பொருளையும், சொற்கள் உணர்த்தும் பொருள்களை விடுத்து இடம் நோக்கிய பொருளையும், அரிய

கலைச் சொற்களையும், பொருள்களை நிறுவ உவமைகளைப் பயன்படுத்தியும், தொகைகளை விரித்துப் பொருள் கொண்டும், பொருளின் காரணத்தை எடுத்துக் கூறியும், சான்று காட்டிப் பொருளை நிறுவுதலும், சில சொற்களுக்கு இலக்கணத்தோடு பொருளை வரையறுப்பதும், சொற்களைப் பிரித்துப் பொருள் கொள்வதும், திசைச்சொல்லைச் சுட்டிக் காட்டுவதும் போன்ற நிலைகளில் அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

### நடை நலம்

"நால்வர் நான்மணிமாலை" என்னும் இந்நூலுக்கு எழுந்துள்ள உரைகள் நடையியல் நோக்கில் விளக்கப் படுகின்றன. எனவே நடையியல் பற்றிய அறிமுகம் இன்றியமையாததாகிறது.

### நடை விளக்கம்

"நடை என்பதே அறுதியிட்டு விளக்க முடியாத ஒன்று. அதிலும் தனித்தன்மை சான்ற நடையை விளக்கிக் காட்டுவது அரிய செயல்" என்பார் மா. இராமலிங்கம்.[154] நடை எளிமையான சொற்களால் அமைய வேண்டும் என்பதை, 'நடையின் சிறப்பு, கடினமான சொற்களையோ, அழகான சொற்களையோ கொணர்ந்து சேர்த்துப் பிணைப்பதில் இல்லை; ஆயின், மிக உயர்ந்த கருத்தையும் ஓரளவு தமிழறிவுள்ளவரும் புரிந்து கொள்ளும் வகையிலே தெளிவாக எடுத்துக் கூறுவதில்தான் அமைந்துள்ளது. இவ்வாறு, நடையில் தெளிவு பிறப்பதற்குப் பல காரணங்களை எடுத்துக் கூறலாம். சொற்றொடர்கள் சிறியனவாக அமைக்கப் படும் பொழுது நடையில் தெளிவு கூடுகிறது' என்பர்.[155] நடையில் சொற்கள் ஒழுங்காக அமையும் பொழுது நடை சிறக்கும் என்பதை, "உரிய சொற்கள் உரிய இடங்களில் பொருந்தி நடப்பதே நடை என்பார் இ. சுந்தரமூர்த்தி[156] இதனை, "ஓர் ஓவியர் வண்ணங்களைக் கொண்டு ஓவியத் திற்கு அழகேற்றுவது போலவே படைப்பாளியும் சொற் களைக் கொண்டு தமது படைப்பிற்கு மெருகூட்டுகிறார்[157] என்னும் கூற்று அரண் செய்யும்.

மேலும், "நடத்தல் — நடையாகிறது. கால்கள் நடத்தலால் ஓரிடத்திருந்த ஒருவன் மற்றோரிடத்திற்குச் சென்றடைவதைப் போல படைப்பாளியின் உள்ளத்திலுள்ள கருத்துக்கள் பயில் வோனிடம் சென்றடையப் படைப்பாளி மொழியைப் பயன்

படுத்தும் போக்கே மொழி நடை ஆகிறது. நடந்து நடந்து நடைப்பழக்கம் ஆவது போல எழுத எழுத எழுத்து நடை பண்படும். எழுத்து நடை பண்படப் பண்பட நடை நலம் உடையதாகிறது'' என்னும் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது.[158]

எனவே நடை என்பது ஒவ்வொருவரின் தனிப்பட்ட சிந்தனையின் பயனாய் வேறுபடும் என்பதும், அவர்களின் அறிவுத் திறனுக் கேற்ப அது வெளிப்படும் என்பதும் தெளிவாகிறது.

உரையாசிரியர்களின் நடை :

இனி உரையாசிரியர்களின் நடை அமைப்பு விளக்கப் பெறுகிறது.

பாடம் பகர் நடை: ஆசிரியர் மாணவனுக்குப் பாடம் நடத்துவது போல் செய்திகளை ஒழுங்கு முறைப்படுத்திக் கூறுவது பாடம் பகர் நடை எனப்படும்.[159] இம்முறையினை உரையாசிரியர்கள் நால்வரும் பின்பற்றியுள்ளனர்.

சுவாமிகள்,

> சலசம் தலசமென்னும் இருவகை முத்தினுள் ஈண்டுக் கூறியவை சலசம். சலசமாவன: தாமரை, இப்பி, சங்கு முதலியவற்றிற் சலசம்பந்தத்துதிப்பன. தலச மாவன: கரும்பு, மூங்கில், கமுகு முதலியவற்றில் தலசம்பந்தத்துதிப்பன.

என்று சலம், தலம் இவற்றில் தோன்றும் முத்துக்களை மாண வனுக்கு அறிமுகப்படுத்துவதை அறியமுடிகிறது.[160]

புன்னைவனநாதன், "இப்பி ஆயிரம் சூழ்ந்தது இடம்புரியும், அஃது ஆயிரம் சூழ்ந்தது வலம்புரியும், அஃது ஆயிரம் சூழ்ந்தது சலஞ்சலமும், அஃது ஆயிரம் சூழ்ந்தது பாஞ்சசன்னியமும்'' என்று பாஞ்ச சன்னியத்தை மாணவனுக்கு விளக்கிக் காட்டி யுள்ளதை அறியமுடிகிறது.[161]

தம்பிரான்,

> வரதன் — வரத்தைக் கொடுப்பவன்; சிவன். முறை வேண்டுவாரும் குறைவேண்டுவாருமாகிய திருமால் முதலியோர்க்கும், சனகன் முதலிய முனிவர்க் கும் வேண்டும் வரங்களும் ஞானோபதேசமும் அருளி,

> விநாயகக்கடவுள் முதலியோர் புடைசூழ, அம்பிகை பாகராய்ச் சிவபெருமான் திருக்கயிலையில் திருவோலக் கங்கொண்டு காட்சிக் கெளியராய் வீற்றிருக்கின்றனர் என்பது தோன்ற 'வரதன்' என்றார்

என்று மாணவனுக்குப் புராணக் கதைகளைக் கூறிப் பாடத்தை நடத்திக் காட்டியுள்ளார் என்பதை அறியமுடிகிறது.[162]

வை. இரத்தினசபாபதி,

> தேன், நாட்டு வளத்தைக் குறிக்கும். கற்பு நெறியாகிய அறநெறிச் சிறந்து, அறவாழ்வு சிறந்திருக்கிறது என்பதைக் குறிக்கும்போது தாமரை தேன்பொழிகிறது என்று கூறுவதும், பரத்தமை நெறியில் – தீயவழியில் வாழ்வு சிறந்திருக்கிறது என்பதைக் குறிக்கும் போது குவளை தேன் பொழிகிறது என்று கூறுவதும் கவிமரபு. தாமரை மலர் தெய்வ வாழ்வையும் கற்பு நெறிக்கும், குவளை பரத்தமை நெறிக்கும் கையாளப் பெறும் உவமைகள்

என்று உவமை கூறிப் பாடத்தை எடுத்துக் கூறியுள்ளதை அறியமுடிகிறது.[163]

மேற்கண்ட முறையில் பாடம்பகர் நடையை உரையாசிரியர்கள் கையாண்டுள்ளதை அவர்கள் உரைவழி அறிய முடிகிறது.

வினாவிடை நடை : கருத்துக்கள் அல்லது செய்திகளை விளக்கும் பொழுது தாமே வினாவை எழுப்பி விடை கூறும் போக்கில் அமைவது இந்நடை.[164] ஐயத்தை எழுப்பி விடை கூறும் இம்மரபில் உரையாசிரியர்கள், தங்கள் உரையைப் படிப்பார்க்குத் தெளிவை உண்டாக்குகின்றனர் என்பார் மொ. அ. துரை அரங்கசாமி,[165] இந்நடையினை உரையாசிரியர்கள் அனைவரும் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள், "ஞானம் நான்கென நவில்வதென்னையெனின்: அபரம் கேட்டல் சிந்தித்தல்களாற் பெறப்படுவதூஉம், பரம் தெளிதல் நிட்டை கூடல்களாற் பெறப்படுவதூஉம் ஆகலின் என்க" என்று வினா எழுப்பி விடை கூறியிருப்பதை அறிய முடிகிறது.[166]

புன்னைவனநாதன்,

> இவர்பாலது உழுவலன்பு என்பது எங்ஙனம் பிற எனின், — நன்று கடாயினாய் சமணாதிகளைக் களைந்து சைவத்தை நாட்டுவான் தோன்றிய இவ்வாசிரியர் உலக நிலையாமை கண்டு, அறங்கள் செய்வாராய் ஒழுகுங்கால் சாதனங்களுள் நீறு சிறந் தாங்குத் தவங்களுள் கொல்லாமைச் சிறந்ததாகலின்''

என்று கூறுவதன் வாயிலாக இவரது வினாவிடை நடையை அறியமுடிகிறது.[167]

தம்பிரான்,

> அத்திருக்கோவையார் சிற்றின்பப் பொருளதாய்த் திகழ்வ தென்னையெனின்: அண்ணல் பாலார்ந்த பேரின்பச் சுவையை ஆர்வ மேலீட்டால் நாயக நாயகி முறையின் நயந்து பாராட்டல் ஞானிகளியல்பாகலின், அதற்கோரிலக்கியமாக இறைவர் கட்டளைப்படியே அருளினமை பற்றிக் காமஞ் சான்றமை போலக் காணப்படினும்' பேரின்பப் பொருள் பயப்பதாய், வேதசிவாகமங்களின் சாரமாய்ப் பாடலிற் சிறந்து விளங்கலின், ஞானப் பனுவலேயாமென்க[168]

என்று கூறுவதன் வாயிலாக இவரது வினாவிடை நடையை அறியமுடிகிறது.

வை. இரத்தினசபாபதி,

> வலம்புரியின் கிடக்கையானது பாஞ்சசன்னியத்துக்கு வெட்கத்தை உண்டாக்குவானேன்? இடம்புரி ஆயிரம் சூழ ஒருவலம் புரியும், வலம்புரி ஆயிரம் சூழ ஒரு சலஞ்சலமும் வரும். பாஞ்சசன்னியம் சலஞ்சலத்தினும் உயர்ந்த சங்கு. இது திருப்பாற் கடலிலிருந்து அமுதம் கடைந்த காலத்துத் தோன்றியது.

என்று வினாவிடையாக அமைத்துக் காட்டியுள்ளதை அறிய முடிகிறது.[169]

மேற்கண்ட சான்றுகளின் வழி உரையாசிரியர்கள் வினா விடை நடையைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

விவாத நடை: கருத்தை விவாதித்து நிறுவும் போக்கில் அமைவது இந்நடை. இதனை அளவை உரைநடை என்றும் கூறுவர்.[170] இந்நடையை உரையாசிரியர்கள் தம் உரையில் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள், "அற்றேல், கொடிய சூடர் நோயணுகியவழி இச்சிவோபாசனையிருந்தும், அச்சமணசமய விச்சைகளான் அகற்ற முயன்ற தென்னையெனின், அவற்றிற் பழகித் தேர்ச்சி யுற்றுச் சிவசித்திப் பெற்றமையின் இவ்விச்சையின் இதுவும் அகலுங் கொலெ்ன எண்ணி முயன்றாரென்பது" என்று கூறுவதன் வாயிலாகக் கருத்தை விவாதித்து நிறுவும் போக்கினை அறியமுடிகிறது[171]

புன்னைவனநாதன், "அற்றேல், இவர் பெருமையைத் தெருட்டுதற்குக் கைத்தொண்டு ஏதுவானாற் போல, அவர் பெருமையைத் தெருட்டுதற்கு ஏது என்னையெனின், கதவு திறக்கப் பாடுவீரென அவர் அருளுங்கால் நீரே பாடியருள வேண்டும் என்னாது இவர்தாம் முற்பட்டமையே போலும்" என்று விவாதித்துக் கருத்தை நிறுவியுள்ளார் என்பது புலப் படுகிறது.[172]

தம்பிரான்,

> அற்றேல், கொடிய சூடர்நோயணுகிய வழி இத்தகைய சிவனை மறவாச் சிந்தையிருந்தும் அச்சமணசமய வித்தைகளான் அகற்ற முயன்ற தென்னையெனின், அவற்றிற் பழகித் தேர்ச்சியுற்றுச் சித்தி பெற்றமையின் இவ்வித்தையின் இதுவும் அகலுங்கொலென எண்ணி முயன்றாரென்பது. இன்னோரன்ன ஐயப்பாடுகள் எழாமைப் பொருட்டுப் பெரியபுராணத்தில் ஆங் காங்குக் குறிப்பிட்டிருத்தலின் ஆய்ந்துணர்க.

என்று விவாதித்துத் தம் கருத்தை எடுத்துக் கூறியுள்ளதை அறியமுடிகிறது.[173]

வை. இரத்தினசபாபதி,

> நம்பியாரூரர் வாக்குப் 'பித்தா' எனத் தொடங்கு கின்றது. 'ப்' எழுத்து 'இ' என்ற அருட் சக்தியோடு கூடுகிறது. 'ப்' என்ற எழுத்து தமிழ் நெடுங்கணக் கினுள் ஒன்பதாவது எழுத்து. இவ்வெண்ணிக்கை எத்தனை எண்ணால் பெருக்கிக் கூட்டினாலும் இறுதி

> யில் ஒன்பதுதான் வரும். இந்நிலையில் விதியின் காரணமாகப் பிறப்பதும், பிறந்து விதியை உண்டாக்கிக் கொள்வதும் தொடர் சங்கிலிபோல் அமைய உயிர்கள் அவற்றுள் சிக்கிச் சீரழிகின்றன. இருப்பினும் ஒன்பது என்ற எண் ஒன்றாவது ஸ்தானத்திற்கும் பத்தாவது ஸ்தானத்திற்கும் இடையில் இருப்பது. ஒன்பதாவது எண் எட்டைவிட உயர்வுடையது. ஆனால் பத்தாவது ஸ்தானத்தைத் தன்னிடம் இழுத்துக் கொண்டது. இவ்வாறே தொண்ணூறு என்பதிலும் பத்தாவது ஸ்தானமும் நூறாவது ஸ்தானமும் இணைகின்றன. தொள்ளாயிரத்திலும் இவ்வாறே. எனவே உயிர்கள் எவ்வளவு பிறப்பில் ஈடுபட்டுழன்றாலும் அவ்வளவு பிறப்புகளிலும் உடனின்று விளங்கியவன் இறைவன்.

என்று விவாதித்துத் தம் கருத்தை நிறுவுவதை அறியமுடிகிறது.[174]

மேற்கண்டவற்றின் வாயிலாக விவாத நடையை உரையாசிரியர்கள் அனைவரும் கையாண்டுள்ளனர் என்பது தெளிவாகிறது.

விளக்க நடை : விளக்கம் தருவதை முக்கிய நோக்கமாகக் கொண்டு எழுதப்படும் இந்நடை முன்மொழிதல், தொகுத்துச் சுட்டல், வகுத்துக் காட்டல் முதலிய இலக்கணங்களைக் கொண்டு விளங்குவது[175] விளக்க உரை நடையில் ஒன்றைத் தெளிவுறுத்த விழையும் ஆசிரியர் காரண, காரிய இயைபுடன் எழுதிச் செல்வார்.[176] அவ்வகையில் உரையாசிரியர்கள் விளக்க நடையினைப் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள், "ஞானமாவது பதி பசு பாசங்களை உள்ளவாறு உணரும் உண்மையுணர்ச்சி. அது, அபரம் பரம் என இரு திறப்படும். அபரமாவது : வேதகாமங்களின் ஆராய்ச்சியுணர்வு. பரமாவது அதனாற் பெறப்படும் அனுபவவுணர்வு" என்று கூறுவதன் வாயிலாக விளக்க நடையை அமைத்துள்ளார் எனத் தெரியலாம்.[177]

புன்னைவனநாதன்,

> ஆடுவது — ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களை மாயையாகிய முதற் காரணத்தினின்றும் தோற்றுவிப்பதும், அவற்றை நிலை பெறவிப்பதும் —

அவற்றை முதற்காரணத்தினில் ஒடுக்குவதும், ஆன்மாக்களை இருவினைப் பயன்களாகிய போக்கியப் பொருள்களின் அமிழ்த்துவதும், அவ்வான்மாக்களுக்குப் பாசத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குவதும் ஆகிய ஐந்தொழிற் கூத்துமாம்.

என்று விளக்கம் கூறி உரை எழுதியுள்ளதால் இவரது விளக்க நடையை அறியமுடிகிறது.[178]

தம்பிரான், "திருக்கரங்கள் மூன்றுதொழிற்கிணங்கத் துடியும், அபயமும், அனலமும் கோடலானும், மற்றொன்று ஒருகாற் கும்பிடிற் கதி கூடுமெனக் குஞ்சித பாதத்தைக் குறித்தலானும் வளைவுற்றமர்வன என்பார் 'கைகளோ முறிபடுங் கைகள்' என்றார்" என்று விளக்கநடையை அமைத்துக் காட்டியுள்ளதை அறியமுடிகிறது.[179]

வை. இரத்தினசபாபதி, "சிவனுக்கு மெய்யில் அமைந்த கண்கள் மூன்று. மூன்றும் காரணக்கண்களேயன்றிக் காணும் கண்கள் அல்ல. சூரியன் நிலைபெற வலக்கண்ணும்; சந்திரன் நிலைபெற இடக்கண்ணும், அக்கினி நிலைபெற நெற்றிக் கண்ணும் அமைந்துள்ளன" என்று கூறுவதன் வாயிலாக விளக்க நடையைக் கையாண்டுள்ளார் என்பது தெளிவாகிறது.[180]

மேற்கண்ட சான்றுகளின் வழி உரையாசிரியர்கள் தொகுத்துக் கூறலும், வகுத்துக் காட்டலும் ஆகிய நிலைகளில் விளக்க நடையைத் தம் உரையில் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

**கதை கூறல் (அ) அந்தாதி நடை :** இது கதை கூறுவது போன்று அமையும் நடை. முன் கூறிய சொல்லைப் பின்னும் கூறி கதையை இயைபுபடுத்துவதுபோல் உரைநடையிலும் பயன்படுத்தி உரைநடையைக் கதை கூறுவது போல் உரையாசிரியர்கள் அமைத்துச் சென்றுள்ளனர்.

சுவாமிகள், "அன்பராகாரிலர் என்றும் கூறினார். கூறவே" என்றும் "பகரலாகுங் கொலென்பார் இங்ஙனம் கூறினார். கூறவே" என்று கூறுவதன் வாயிலாக அந்தாதி நடையினை அமைத்துச் சென்றுள்ளதை அறியமுடிகிறது.[181]

புன்னைவனநாதன், "கரியாய் விடாமல் கரியாய் மொழியும் என்றும் கூறினார். கூறவே," "வினாவுவோம் என்றும்

கூறினார். கூறவே" என்பதன் வாயிலாக அந்தாதி நடையை அமைத்துள்ளார் என்பதை அறியமுடிகிறது.[182]

ஏனைய உரையாசிரியர்கள் இந்நடையமைப்பினைக் கையாளவில்லை.

வியங்கோளாட்சி: மாணவனுக்கு ஆணையிடுவதைப் போன்ற சொற்களால் நடப்பது இந்நடையாகும். இவ் வியங் கோள் முடிவு கூறும்போதும், மேற்கோள் காட்டும் போதும் தொடரின் ஈற்றில் அமையும் என்பர்.[183] இதனைச் சுவாமிகள், "இதுவும் அருட்பெருக்கேயாமென்க." "அறிக", "என்பதூஉம் கருத்தாகக் கொள்க" போன்றவற்றின் வாயிலாக வியங் கோளாட்சியினை அமைத்துள்ளார்.[184]

புன்னைவனநாதன், "இவர் நாவில் ஞானவாணி குடி கொண்டமையை நாட்டுதற்கும் என்க," "வருஞ் செய்யுட் களால் அறிக" என்பன போன்ற இடங்களில் வியங்கோள் சொற்களைப் பயன்படுத்தி வியங்கோள் நடையினை அமைத் துள்ளார் என்பது தெளிவாகிறது.[185]

தம்பிரான், "அது முன் வருமன் நான்றாந் தூக்கின் என்பதனானுமறிக," "ஒரு நம்பியப்பூதியடியார்க்கு மடியேன் என்னும் திருத்தொண்டத் தொகையானும் உணர்க" என்பதன் வாயிலாக வியங்கோளாட்சியை உரையில் பயன்படுத்தி யுள்ளதை அறிய முடிகிறது.[186]

வை. இரத்தினசபாபதி, "வானும் புகழ் புகலி மன்னன் என்றார். இக்கருத்தைச் சீகாழித்தல புராணத்தால் உணர்க. ஆற்றில் இட்ட பசும்பொன் குளத்து வரவும் செங்கல் செம் பொன் ஆகவும் பாடும் பரிசு என அமைத்துக் கொள்க" என்று கூறுவதன் வாயிலாக வியங்கோளாட்சியை அறியமுடிகிறது.[187]

மேற்கண்ட இடங்களில் என்க, அறிக, கொள்க, உணர்க போன்ற சொற்களைக் கையாண்டு வியங்கோள் நடையினை உரையாசிரியர்கள் தம் உரையில் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

ஒன்றுபட்ட நடை: ஓர் உரையாசிரியர் தம் உரையில் பிற உரையாசிரியர்களின் நடையமைப்பை முழுவதும் எடுத்தாளுவ தால் தம்முள் ஒன்றுபட்டுச் செல்கின்றனர். உரையாசிரியர்கள் ஒன்றுபடும் உரையின் தன்மையினை மரபு நெறி எனக்

கூறுவர். இதனை, "உரையாசிரியர்கள் ஒருவர் உரையையும் மேற்கோளையும் பிறிதொருவர் அப்படியே பின்பற்றி எழுதுவ தாலும் அதற்கு மேலும் விளக்கந் தருவதாலும் பிறழ்வுணர்வு ஏற்படாமல் இலக்கண மரபு காப்பாற்றப்படுகிறது" எனத் தெரி விக்கிறார் மு. அருணாசலம்.[188] இவர் கூறுவதிலிருந்து உரை மரபினுள் இதுவும் ஒன்றென்பதும், அதனால் இலக்கணமரபு காப்பாற்றப்படுகிறதென்பதும் தெளிவாகும்.

சுவாமிகள், "பிள்ளையினியல்பைக் கேட்புழி முலை சுரத்தல் தலையன்பும், கண்டுழி முலை சுரத்தல் இடையன்பும் அழுதல் கண்டு பிறர் தூண்ட முலை சுரத்தல் கடையன்புமாம்" என்று எழுதிய உரையினைப் புன்னைவனநாதன், தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் உரைகளில் காணமுடிகிறது.[189]

மேற்கண்ட நிலைகளில் உரையாசிரியர்கள் நால்வரும் தம்முள் ஒன்றுபட்டு உரையெழுதும் போக்கினை அறிய முடிகிறது. இவர்களுள் புன்னைவனநாதன் சுவாமிகள் உரையை, ஒன்றுபட்ட நடையமைப்பு வழி பல இடங்களில் பின்பற்றிச் சென்றுள்ளார்.

மேற்கண்டவற்றின் வாயிலாக உரையாசிரியர்கள் கையாண்ட நடையமைப்புத் தெளிவாகிறது.

### நடைப்பயன்

ஆற்றொழுக்கான செய்திகளைப் பாடம்பகர் நடையின் மூலம் அறிய வாய்ப்பு ஏற்படுகிறது. வினா விடையின் வாயிலாக ஐயங்கள் களையப்படுகின்றன. விவாதங்களின் மூலம் கருத்துக்கள் விளக்கமுறுகின்றன. விளக்க நடையின் வழிக் கருத்துக்கள் தொகுத்தும் வகுத்தும் காட்டப்படுகின்றன. அந்தாதி நடையின் மூலம் கதை கூறும் மரபினை அறிய முடிகிறது. வியங்கோளாட்சியின் வாயிலாகக் கருத்துகள் முற்றுப் பெறுகின்றன. ஒன்றுபட்ட நடையின் வழி உரைநெறி பாதுகாக்கப்படுகிறது. மேற்கண்ட நிலைகளில் நடைப்பயன் சிறக்கிறது.

### உவமை

உவமை என்பது பொருள் புலப்பாட்டிற்கு உதவுவது என உரையாசிரியர்கள் விளக்கம் தந்துள்ளனர். அதனால் அவர்களே தம் கருத்தைப் புலப்படுத்துவதற்கு உவமைகளைப் பொருத்தமுறப் பயன்படுத்துகின்றனர்.[190] அவ்வகையில்

நால்வர் நான்மணிமாலை உரையாசிரியர்களின் உவமைகள் இங்கு இடம் பெறுகின்றன.

## உரையாசிரியர்களின் உவமைகள்

உரையாசிரியர்கள் நால்வரும் உவமைகளைப் பயன்படுத்தி உரை எழுதியுள்ளனர்.

சுவாமிகள், "அணுகக் கிடந்த துன்பங்கள் அண்ணலருட் பார்வையான் இடைவிடாத் தியான முதிர்ச்சியுடையாரை அணுக மாட்டாமை யானும் வேறு பற்றுக் கோடின்மையானும் விளக்கின்முன் இருள் போற் கெடுதலும்... மயக்கமென்னும் முக்குற்றங்களும் காட்டுத் தீமுன் பஞ்சுத்துய் போல் அழிதலின்" என்று தத்துவ விளக்கத்திற்கு உவமை காட்டி விளக்கி யுள்ளார்.[191]

புன்னைவனநாதன், "சிவநேச வணிகர் போல யானும் என்னைத் தந்து ஆக்கிக் கொண்டிலன் என்று வருந்தா நிற்பர் என அருத்தாபத்தியில் துணிந்ததாம்" என்று உவமையினை எடுத்துக்காட்டியுள்ளார்.[192]

தம்பிரான், "மிதத்தற்குக் கல்லும் போல ஆதாரமின் றாகவும்" என்று புராண கதையினை விளக்க உவமையினைப் பயன்படுத்தியுள்ளார்.[193]

வை. இரத்தினசபாபதி, "மலிதல் — நிறைதல். 'ஏரி நிறைந் தனைய செல்வன் கண்டாய்" என்று உவமை கூறியுள்ளார்.[194] இதுபோன்ற உவமைகளை உரைகளில் பரவலாக் காண முடிகிறது.

மேற்கண்டவற்றின் வாயிலாக உரையாசிரியர்கள் பயன் படுத்தும் உவமைகளை அறிய முடிகிறது.

## உரைப்புலமை

உரையெழுதப்புகும் உரையாசிரியர்கள் பிற உரையாசிரியர் களின் உரையைச் சான்று காட்டி உரையெழுதுவர். அவ்வகையில் உரைப்புலமையை, 1. பிறருரை எடுத்தாளல், 2. உரை மறுப்பு என இரண்டு வகையாகப் பகுக்கலாம்.

*பிறருரை எடுத்தாளல்:-* பிற உரையாசிரியர்களின் உரை யைத் தம் உரையில் கூறிச் செல்வதை இதில் அடக்கலாம்.

சுவாமிகள், "சாக்கிரத்தே நிருமல துரியாதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிதும் எய்தாமை அறிந்தாராயினும் ஆன்றோரா சாரம் பாதுகாத்தார் பொருட்டும் மாணாக்கர்க்கு அறிவுறுத்தற் பொருட்டும் முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகரை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றார்"[195] என்று சிவஞான முனிவர் உரையினைப் பின்பற்றி உரையெழுதியுள்ளதை அறியமுடிகிறது.[196] மேலும் துமர்த்தம் எனக் கோடலைப் பிரயோக விவேக "உடனிகழ்கின்ற" என்னும் செய்யுளுரையினைக் காண்க என்று உரை எழுதிச் செல்வதால் இவர் எடுத்தாளும் பிறருரையை அறியமுடிகிறது.[197]

புன்னைவனநாதன், பிரயோக விவேக உரையைச் சுவாமிகள் எடுத்தாண்டதைப் போலவே அதே இடத்தில் எடுத்தாண்டுள்ளார்.[198]

தம்பிரான்,

> வெள்ளை மணி — வெண்மையாகிய மணியையுடையது, அது சிவிகையென அன்மொழிப் பெயராகக் கோடலாகாதோ? எனின் அற்றன்று. சேனாவரையர் பொற்றொடியையும், பரிமேலழகர் கனங்குழையையும், வாணன் கோவையுரையாசிரியர் தாழ்குழலையும், சிவஞான சுவாமிகள் அறுபதத்தையும் ஆகுபெயராகக் கொண்டிருத்தல் நியதிப் பெயர் கருதியன்றோ? ஆதலால், ஆகுபெயராகக் கோடலே சால்புடைத்து.

என்று இரண்டு இலக்கண உரையாசிரியர்களையும், இரண்டு இலக்கிய உரையாசிரியர்களையும் தம் உரையில் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.[199]

வை. இரத்தினசபாபதி, "இனி இச் செய்யுளுக்குத் துதிக்கையையுடைய யானைமுகக் கடவுளின் திருவடிகளை எப்போதும் மனத்தில் நினைப்பவர்களுக்குத் துன்பம் இல்லை என்று பொருள் கூறுவாரும் உண்டு" என்று கூறிப் பிறருரையை எடுத்துக்காட்டுவதை அறியமுடிகிறது.[200]

மேற்கண்ட முறையில் பிறருரையைத் தம் உரையில் இவ்வுரையாசிரியர்கள் எடுத்தாண்டுள்ளனர் என்பது புலப்படுகிறது. பிற உரைகளை எடுத்தாளுவதால் முன்னோரைப் போற்றும் பண்பு சிறக்கிறது.

உரை மறுப்பு: உரை மறுப்பினைச் சுவாமிகள் உரையில் காணமுடிகிறது.

சுவாமிகள், "வேட்டால் (யான்) போதுவனென நூலாசிரியர் தம்மைச் சுட்டி நுவன்றதாக உரைப்பாருமுளர்; இதுவும் அப்பொருளிலடங்கலின் இஃதுரையன்மையறிக" என்று கூறுவதன் வழி உரை மறுப்பினை எடுத்து மொழிந்துள்ளார் என்பதை அறியமுடிகிறது.[201]

## புராண வரலாறு

பாடலில் அமைந்துள்ள புராணக் கூறுகளை விளக்கத் தனியே புராண வரலாறுகளை உரையாசிரியர்கள் தம்பிரானும், வை. இரத்தினசபாபதியும் எழுதியுள்ளனர். ஏனைய உரையாசிரியர்கள் சுவாமிகள், புன்னைவனநாதன் ஆகியோர் பயன்படுத்தாத உரை நெறியாக இது அமைந்துள்ளது.

தம்பிரான், தம் உரையில் ஐம்பத்து மூன்று (53) புராண வரலாறுகளை எழுதியுள்ளதை அறியமுடிகிறது.[202]

வை. இரத்தினசபாபதி, நாற்பத்து நான்கு (44) புராண வரலாறுகளைக் கூறியுள்ளதை அறியமுடிகிறது.[203]

மேற்கண்டவற்றின் வாயிலாகப் புராண வரலாறுகள் எழுதுவதை இரண்டு உரையாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர் என்பது தெளிவு. இவர்களுள் தம்பிரான் மிகுதியான புராண வரலாறுகளை எழுதிச் சென்றுள்ளதை அறியமுடிகிறது. (காண்க: பின்னிணைப்பு: 4)

## பாடவேறுபாடு காட்டல்

பாடலின் கருத்தை மாற்றுவதாகவோ, தொடரின் பொருட் போக்கைத் திருப்புவதாகவோ அமைவது பாடவேறுபாடு.[204]

இதனைச் சுவாமிகள், "இவ்வுதாரணத்திருப்பாடலில் ஏழெழு நூறரும் பதிக மென்றிருக்க வேண்டிய பாடம் பிறழ்ந்திருக்கின்றது" என்று கூறுவதின் வழி அறியலாம்.[205]

பாட வேறுபாறு காட்டலை ஏனைய உரையாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

பிற செய்திகள்

மேற்கூறிய உரை இயல்புகளைத் தவிர்த்துப் பிற செய்திகளும் உரைகளில் இடம் பெற்றுள்ளன. அவை. 1. நாடக அறிவு, 2. உலகியலறிவு என்பன.

நாடக அறிவு: சுவாமிகள் ஓர் இடத்தில் தம்முடைய நாடக அறிவை வெளிப்படுத்துகிறார். "பவுரிக் கூத்திலே தலைமை பெற்ற கூத்தன் கரமுயர்த்தி நின்று அரங்கின்கணுள்ள குறுமன்னவர்க்கெல்லாம் முதல்வனாகிய மகா மன்னவனையே புகழ்ந்து சுட்டி நின்றார் போல" என்று கூறித் தம் நாடக அறிவைப் புலப்படுத்துகிறார்.[206]

நாடகம் தொடர்பான இச்செய்தியினைப் புன்னைவன நாதனும் தம் உரையில் அதே இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[207]

மற்றைய உரையாசிரியர்கள் இச்செய்தியைப் பயன்படுத்தவில்லை.

உலகியலறிவு : உலகியல் வழக்கில் இடம்பெறும் சொற்களைத் தம் உரையில் அமைத்துக் காட்டுவர் உரையாசிரியர்கள் அவ்வகையில் சுவாமிகள், "பிடர் பிடித்துத் தள்ளுதலென்பது அணுகாதகற்றலென்னும் பொருட்டாய் உலக வழக்குப் பற்றி வந்தது" என்று கூறுவதால் அறியலாம்.[108]

புன்னைவனநாதன், "நின்னைக் கொண்டவர் நெற்றிக் கண் படைத்தவரோ என ஒருவரையொருவர் கடாவல் உலக வழக்கு" என்று கூறுவதின் வாயிலாக உலகியலறிவை அறிய முடிகிறது.[209]

தம்பிரான் உரையில் இக்கூறு காணப்பெறவில்லை. ஆயின், வை. இரத்தினசபாபதி, "திருமணம் முதலிய நிகழ்ச்சிகளிற் காப்புக் கட்டிக் கொள்ளுதல், இன்னது செய்வேன் எனக் கங்கணம் கட்டிக் கொள்ளுதல் முதலியனவும் கூட இவ்வகையைச் சார்ந்தனவே" என்று உலகியல் செய்தியைக் கூறியுள்ளார்.[210]

மேற்கண்டவற்றின் வாயிலாக உரையாசிரியர்களின் உரை இயல்புகள் சிறக்கின்றன.

தொகுப்புரை

இவ்வியலில் விளக்கப்பட்ட கருத்துகள் இங்குத் தொகுத்துரைக்கப்படுகின்றன.

1. உரையாசிரியர்கள் சங்க இலக்கியம், காப்பியம், நீதி இலக்கியம், போன்றவற்றையும், பக்தி இலக்கியத்தில் திருமுறைகள், புராணங்கள், சிற்றிலக்கியங்கள் ஆகியவற்றையும் எடுத்தாண்டு தங்களுடைய இலக்கியப்புலமையை வெளிப்படுத்தியுள்ளனர்.

2. மேற்கோள்களை எடுத்தாண்ட உரையாசிரியர்கள் 1. நூல் சிறப்புக்கூறல், 2. பெயர் விளக்கமளித்தல், 3. இலக்கண விளக்கம், 4. சொற்பொருள் விளக்கம், 5. தத்துவ விளக்கம், 6. புராணக்கதை கூறல் போன்ற நோக்கத்திற்காகப் பயன் படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

3. உரையாசிரியர்கள் சொற்பொருளுரைத்தலில் தங்களுடைய நூல் அறிவைப் பயன்படுத்தி, சொற்பொருள் பத்து நிலைகளில் உரைத்துள்ளனர். அவை. 1. அகராதிப் பொருள், 2. இடம் நோக்கிய பொருள், 3. கலைச் சொல் விளக்கம், 4. உவமை காட்டிப் பொருள் கூறல், 5. தொகைக் கூறிப் பொருளுரைத்தல், 6. காரணங்கூறிப் பொருள் கூறல், 7. சான்று காட்டிப் பொருள் கூறல், 8. இலக்கணம் கூறிப் பொருள் கூறல், 9. பிரித்துப் பொருள் கூறல், 10. திசைச்சொல் கூறல் என்பன.

4. ஒவ்வொரு உரையாசிரியரின் சிந்தனையும் அவரது நடைவழி வெளிப்படும். அம்முறையில் உரையாசிரியர்கள் கையாண்ட நடையினை 1. பாடம்பகர் நடை, 2. வினாவிடை நடை, 3. விவாத நடை, 4. விளக்க நடை, 5. அந்தாதி நடை, 6. வியங்கோளாட்சி, 7. ஒன்று பட்ட நடை என வகைப்படுத்தலாம்.

5 உரையாசிரியர்கள் பொருள் புலப்பாட்டிற்கு உவமைகளைக் கையாண்டுள்ளனர்.

6. உரையாசிரியர்களின் உரைப்புலமையை ஏற்புரை வாயிலாகவும், மறுப்புரை வாயிலாகவும் அறியமுடிகிறது.

6.1. ஏற்புரையை நான்கு உரையாசிரியர்களும் பயன் படுத்தியுள்ளனர்.

6.2. மறுப்புரையைச் சுவாமிகள் மட்டும் தம் உரையில் பயன்படுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

7. புராண வரலாற்றைத் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் மட்டும் தம் உரையில் எழுதியுள்ளதை அறிய முடிகிறது.

8. உரையாசிரியர்களின் நுண்ணறிவை மிகுதிப்படுத்துவன பாட வேறுபாடுகள். இதனைச் சுவாமிகள் தம் உரையில் பயன்படுத்தியுள்ளதை அவர் உரை வழி அறியமுடிகிறது.

## குறிப்புகள்

1. ஈ — 6:1;8:1.
2. இ — 28:1.
3. அ — காப்பு: 2;4:1;5:1;6:1;10:1;11:1;15:1;24:1;26:2; 34:1;37:1;39:1;40:1.
4. ஆ — 24:1;26:2;37:1.
5. இ — 5:1;22:1;24:1;26:1;28:1;34:1;37:1;39:1;40:1.
6. ஈ — 3:1;5:1;7:2;10:1;13:1;16:2;17:1;24:1;30:3;33:1; 37:4.
7. அ — காப்பு:1;9:1;12:1;25:1.
8. ஆ — 25:1.
9. இ — 9:1:25:1.
10. அ — 4:1;12:1.
11. ஆ — 12:1.
12. இ — 29:1;21:1;17:1;10:1.
13. இ — 21:2;25:1.
14. ஈ — 21:1.
15. அ — 22:3;31:1.
16. இ — 2:1;6:1;22:4.

17. ஈ — காப்பு: 1;22:3.

18. அ — 2:2.

19. ஆ — 2:1.

20. இ — 12:1.

21. ஈ — 18:1.

22. அ — 9:1.

23. ஈ — 8.1.

24. அ — 39:1;31:1;11:1.

25. இ — 3:1;27:1;39:1;27:1.

26. ஈ — 8:1;27:1.

27. அ — 4:1;9:1;12:1;15:1;20:4;28:4;36:2.

28. ஆ — 12:1.

29. இ — 20:3;28:4.

30. ஈ — 32:1;36:2.

31. அ — 40:2.

32. ஆ — 40:2.

33. இ — 12:1;22:1;40:3.

34. ஈ — 23:1.

35. அ — காப்பு:1;16:1;20:1;29:1;30:1;32:1;37:1;39:1;40:1.

36. ஆ — 29:1;32:1;37:1.

37. இ — 30:1;37:1;39:2;40:1.

38. ஈ — காப்பு: 1;14:1;32:1.

39. அ — 40:2;18:1.

40.

40:1. அ — 40:1.
40:2. இ — 40:1.
40:3. ஈ — 40:1.

41. அ — காப்பு: 1;17:1;21:1;33:2.

42. ஆ — 21:1;33:1.

43. இ — 33:2.

44.

44.1. அ — 3:1;7:1;17:1.
44.2. ஆ — 25:1.
44.3. இ — 25:1.

45. அ — 2:1;6:1;10:1;14:1;18:1;26:2;38:1.

46.

46.1. ஆ — 38:1.
46.2. இ — 26:1;38:1.

47.1. அ — 13:1;17:1;37:1.

47.2. ஆ — 17:1.

48.1. அ — 13:2;37:1.

48.2. ஆ — 37:1.

49.1. அ — 25:2;29;1.

49.2. ஆ — 25:1;29:1.

50.1. அ — 40:1.

50.2. இ — 40:1.

51. அ — 4:1.

52. அ — 17:1,

53. அ — 21:2.

54.1. இ — 6:1;38:1.

54.2. ஈ — 6:1;39:1.

55. அ — காப்பு: 2;2:4;5:1;6:2;7:2;8:2;9:2;10:4;11:2;12:1;
15:2;17:2;19:2;20:3;21:2;23:3:24:4;25:1;27:1;29;1;
30:1;31:2;34:6;35:6;36:1;38:1;39:3;40:9.

56. ஆ — 15:1;17:2;19:2;25:1;36:7;39: 2.

57. இ — 3:3;6:1;17:1;20:1;25:1;27:2;29:1;30:1;31:2;34:
35:6;38:1;39:4; 40:8.

58. ஈ — காப்பு: 1;5:1;18:1;30:1;34:1;38:1.

59. அ — காப்பு: 1;9:4;12:5;14:1;16:1;18:2;19:1;
22: 2;24:4;29:1;30:1;31:4;36:2.

60. ஆ — 12:1;14:1;16:1;19:1;36:1

61. இ — 9:1;12:1;22:3;24:4;31:3;36:2.

62. ஈ — 19:1.

63. அ — 12:1;30:1;31:1;37:3.

64.1. ஆ — 12:1;30:1;37:1.

64.2. இ — 30:1.

65.1. அ — 16:1;32:1.

65.2. ஆ — 40:1.

65.3. இ — 32:1.

66. அ — 4:1;5:1;8:3;12:1;13:1;16:1;17:1;18:1;20:1;21:
24:1;25:2;29:3;32:1;33:1;4:2.

67.1. ஆ — 12:1;16:1;25:1.

67.2. இ — 3:1;5:1;8:1;21:1;32:1;33:1;40:1.

68.1. அ — 30:1.

68.2. இ — 30:1.

69.1. இ — 25:4.

69.2. ஈ — 25:1.

70 1. அ — 27:1.

70.2. இ — 16:1;27:1;30:1.

71.1. அ — 40:1.

71.2. இ — 40:1.

72. அ — 32:1;8:2;20:1.

73.1. அ — 40:1.

73.2. ஆ — 40:1.

73.3. இ — 40:1.

74.1. அ — 10:1.

74.2. இ — 35:1.

75.1. அ — 40:1.

75.2. இ — 40:1.

76.1. அ — 5:1;24:1.

76.2. ஆ — 24:1.

77.1. அ — 32:1.

77.2. இ — 32:1.

78.1. இ — 2:1;15:1.

78.2. ஈ — 37:1.

79. ஈ — 20:1.

80. அ — காப்பு:1.

81. அ — 4:1.

82. ஈ — 3:1.

83. ஆ — 2:1.

84. அ — 13:1.

85. இ — 21:1.

86.1. அ — 25:1.

86.2. ஆ — 25:1.

86.3. இ — 25:1.

87. ஈ — 6:1.

88. இ — 23:1.

89.1. அ — காப்பு:2;30:1.

89.2. ஆ — 14:1.

89.3. இ — 15:1;19:1;30:1;37:1.

89.4. ஈ — காப்பு:1;1:1:6:1.

90. அ — பா. 24. உரை.

91. ஆ — பா. 24. உரை.

92. இ — பா. 40. உரை.

93. ஈ — பா. 3. உரை.

94. பவணந்தி, நன்னூல், எழுத்தியல், நூ. 7.

95. இ — பா. 20. உரை.

96. மு. கோவிந்தராசன், நற்றமிழ் பயிற்றலின் நோக்கமும் முறையும், (நான்காம் பதிப்பு, சென்னை திருமலைக்குமரன் பதிப்பகம், 1988), ப. 235.

97. அ — பா. 4. உரை.

98. ஆ — பா. 26. உரை.

99. இ — பா. 5. உரை

100. ஈ — பா. 6. உரை.

101. அ — பா. 5. உரை.

102. ஆ — பா. 26. உரை.

103. இ — பா. 20. உரை.

104. ஈ — பா. 3. உரை.

105. அ — காப்பு. உரை.

106. ஆ — பா. 39. உரை.

107. இ — பா. 30. உரை.

108. ஈ — காப்பு. உரை.

109. அ — பா. 12. உரை.

110. ஆ — பா. 12. உரை.

111. இ — பா. 29. உரை.

112 ஈ — பா. 21. உரை.

113. தமிழண்ணல், உரைவிளக்கு, ப. 111.

114. அ — பா. 8;12;37. உரை.

115. ஆ — பா. 8;12;37. உரை.
116. இ — பா. 27; 15. உரை.
117. ஈ — காப்பு; பா. 12;22. உரை.
118. க. விநாயகம், சிவஞான முனிவர் உரைத்திறன், ப. 69
119. அ — பா. 34. உரை.
120. ஆ — பா. 34. உரை.
121. இ — பா. 29. உரை.
122. ஈ — பா. 25 உரை.
123. தமிழண்ணல், உரைவிளக்கு, ப. 114.
124. மா. இராமலிங்கம், புதிய உரைநடை: பண்பும் பயனும் (சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், மூன்றாம் பதிப்பு, 1984) பக். 19-20.
125. அ — பா. 3:7. உரை
126. ஆ — பா. 32:9. உரை.
127. இ — பா. 6;25. உரை.
128. ஈ — பா. 31. உரை.
129. இ. சுந்தர மூர்த்தி, பரிமேலழகர் திருக்குறள் உரைத் திறன், ப. 139.
130. அ — பா. 32. உரை.
131. ஆ — பா. 32. உரை.
132. இ — பா. 15. உரை.
133. ஈ — காப்பு. உரை.
134. அ — பா, 21. உரை.
135. ஆ — காப்பு. உரை.
136. இ — பா. 3. உரை.
137. ஈ — காப்பு. உரை.
138. க. விநாயகம், சிவஞான முனிவர் உரைத்திறன். பக். 72-73.

139. அ — பா. 12. உரை.

140. ஆ — பா. 8. உரை.

141. இ — பா. 21. உரை.

142. ஈ. — பா. 24. உரை.

143. அ — பா. 1. உரை.

144. ஆ — பா. 37. உரை.

145. இ — பா. 38. உரை.

146. ஈ — பா. 40. உரை.

147. அ — பா. 2;4. உரை.

148. ஆ — பா. 10;35. உரை.

149. இ — பா. 4. உரை.

150. ஈ — பா. 26. உரை.

151. இ — பா. 22. உரை.

152. ஈ — பா. 22. உரை.

153. இ — பா. 20. உரை.

154. மா. இராமலிங்கம், புதிய உரைநடை பண்பும் பயனும், ப. 61.

155. எஸ். விஜயபாரதி, முன்னோர் வளர்த்த தமிழ், "தமிழில் உரைநடை வளர்ச்சி" (சென்னை: பழனியப்பா பிரதர்ஸ், 1969) ப. 103.

156. இ. சுந்தரமூர்த்தி, நடையியல் அறிமுகம், (சென்னை: அன்பு நூலகம், 1978) ப. 17.

157. ஜெ. நீதிவாணன், நடையியல், (சிதம்பரம்: மணி வாசகர் பதிப்பகம், 1983) ப. 20.

158. மா. இராமலிங்கம், புதிய உரைநடை பண்பும் பயனும், ப. 14. அடிக்குறிப்பு திருமணம் செல்வக் கேசவராய முதலியார் மேற்கோள்.

159. தமிழண்ணல், உரை விளக்கு, ப. 203.

160. அ — பா. 1. உரை.

161. ஆ — பா. 12. உரை.

162. இ — பா. 27. உரை.

163. ஈ — பா. 10. உரை.

164. க. விநாயகம், சிவஞான முனிவர் உரைத்திறன், ப. 114.

165. மொ. அ. துரை அரங்கசாமி, தென்றலிலே தேன் மொழி, "தமிழில் உரைநடை" ப. 66.

166. அ — பா. 1. உரை.

167. ஆ — பா. 22. உரை.

168. இ — பா. 40. உரை.

169. ஈ — பா. 4, உரை.

170. மா. இராமலிங்கம், புதிய உரை நடை பண்பும் பயனும், ப. 12.

171. அ — பா. 22. உரை.

172. ஆ — பா. 2. உரை.

173. இ — பா. 22. உரை.

174. ஈ — பா. 3. உரை.

175. மா. இராமலிங்கம், புதிய உரைநடை பண்பும் பயனும், பக். 131–132.

176. மா. இராமலிங்கம், மேற்படிநூல், ப. 143.

177. அ — பா. 1. உரை.

178. ஆ — பா. 2. உரை.

179. இ — பா. 24. உரை.

180. ஈ — பா. 4. உரை.

181. அ — பா. 4;17. உரை.

182. ஆ — பா. 25;29. உரை.

183. இரா. மோகன், பண்டிதமணியின் நடை நயம் (மேலைச் சிவபுரி : சன்மார்க்க சபை, 1982) ப. 28.

184. அ — பா. 2;3;4; உரை.

185. ஆ — பா. 4;22.

186. இ — பா. 24;6. உரை.

187. ஈ — பா. 25;27, உரை.

188. மு. அருணாசலம், இளம்பூரணர், (அண்ணாமலை) நகர்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1981 ப. 129.

189. அ, ஆ, இ, ஈ, — பா, 5. உரை.

190. தமிழண்ணல், உரை விளக்கு, ப. 146.

191. அ — காப்பு. உரை.

192. ஆ — பா. 9, உரை.

193. இ — பா. 19. உரை.

194. ஈ — பா. 1. உரை.

195. அ — காப்பு முகவுரை.

196. சிவஞான முனிவர், 2 ஆ) சிவஞானபோதம், மங்கல வாழ்த்து கடவுள் வணக்கம் — சிற்றுரை.

197. அ — பா. 17. உரை,

198. ஆ — பா. 17. உரை.

199. இ — பா. 29. உரை.

200. ஈ — காப்பு உரை.

201. அ — பா. 18. உரை.

202. இ — பா. 1:1;2:1;3:3;4:2;5:1;6·1;9:1;10:2;12:20!15:1; 17;1;19:1;21:3;22:2;23:2;24:1;25:1;27:3; 28:1;29:2;30:1;31:1; 39:1. உரை.

203. ஈ — பா. 2:1;3:3;4:1;5:1;9:2;10:1;11:1;12:17:14:1;15:1; 17:2;19:1;22:1:23:2;25:1;27:2; 29:3;30:1;31:1; 38.1, உரை.

204. அ. விநாயகமூர்த்தி, மூலபாட ஆய்வியல், (மதுரை: பாலமுருகன் பதிப்பகம், 1978) ப. 32.

205. அ — பா. 26. உரை.

206. அ — பா 9. உரை.

207. ஆ — பா. 9. உரை.

208. அ — பா. 21. உரை.

209. ஆ — பா. 7. உரை.

210. ஈ — காப்பு, உரை.

# 3

# உரைகளில் இலக்கணக்கூறுகள்

ஓர் இலக்கிய அல்லது இலக்கண உரையாசிரியனுக்குத் தான் உரை எழுதப் புகும் நூலில் மட்டும் நன்கு பயிற்சி இருந்தால் போதாது. அதற்கு முன்னர் எழுந்த இலக்கியம், இலக்கணம் ஆகியவற்றிலும் நல்ல பயிற்சி இருத்தல் வேண்டும். இத்தகைய பயிற்சி இன்றேல் மூல நூலை நன்கு உணரவும் மூல நூலாசிரியன் உட்கோளைத் தெளிவுப்படுத்தவும் முடியாது. அவ்வகையில் "நால்வர் நான்மணிமாலை" உரையாசிரியர்களிடம் இலக்கணக் கூறுகளின் வழி இலக்கணப் புலமை சிறப்புறுகிறது. இவர்களின் இலக்கணக் கூறுகளை 1. இலக்கண நூல் மேற்கோளாட்சி, 2. மேற்கோளாட்சியின் நோக்கம், 3. வடமொழியறிவோடு இலக்கணங் கூறல், 4. இலக்கணக் குறிப்பு தருதல் என நான்கு வகையில் அடக்கலாம்.

## இலக்கண நூல் மேற்கோளாட்சி

இலக்கிய உரையெழுதும் இவ்வுரையாசிரியர்களால் இலக்கண நூல்களை மேற்கோளாக ஆள முடிகிறது. இது இவர்களுடைய இலக்கண அறிவை எடுத்துக் காட்டுகிறது. இவர்கள் தொல்காப்பியம், நன்னூல், புறப்பொருள் வெண்பா மாலை, யாப்பருங்கலக் காரிகை ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள்களைக் கையாண்டுள்ளனர்.

**தொல்காப்பியம் :** இலக்கண நூல்களுள் இன்று கிடைக்கும் முதல் நூலான தொல்காப்பியத்தைச் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகிய நான்கு உரையாசிரியர்களும் கையாண்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

சுவாமிகள் தம் உரையில் ஐந்து தொல்காப்பிய நூற்பாக்களை எடுத்தாண்டுள்ளார்.[1] இந்த ஐந்து நூற்பாக்களும் தொல்காப்பியச் சொல்லதிகார நூற்பாக்கள்.

புன்னைவனநாதன் தொல்காப்பிய நூற்பாக்கள் மூன்றினை எடுத்தாண்டுள்ளார்.[2] இந்த மூன்று நூற்பாக்களும் தொல்காப்பியச் சொல்லதிகார நூற்பாக்கள்.

தம்பிரான் ஆறு தொல்காப்பிய நூற்பாக்களை கையாண்டுள்ளார்.[3]

வை. இரத்தினசபாபதி தன் உரையில் நான்கு தொல்காப்பிய நூற்பாக்களைக் கையாண்டுள்ளார்,[4]

மேற்கண்டவற்றின் மூலம் தொல்காப்பிய மேற்கோள்களை நான்கு உரையாசிரியர்களும் பயன்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது. இவர்களுள்ளும் தம்பிரான் மட்டும் மிகுதியும் நூற்பாக்களைப் பயன்படுத்தியுள்ளமையை உணர முடிகிறது.

நன்னூல் : தம்பிரான் தம் உரையில் எழுத்ததிகார நூற்பாக்கள் இரண்டினையும், சொல்லதிகார நூற்பாக்கள் இரண்டினையும் எடுத்தாண்டுள்ளார்.[5]

ஏனைய உரையாசிரியர்கள் இந்நூலினை எடுத்தாளவில்லை.

இவற்றின் வாயிலாகத் தம்பிரானது நன்னூல் பயிற்சியை அறிய முடிகிறது.

புறப்பொருள் வெண்பாமலை : உரையாசிரியர் வை. இரத்தினசபாபதி, புறப்பொருள் வெண்பாமாலையை ஓர் இடத்தில் கையாண்டுள்ளார்.[6]

ஏனைய உரையாசிரியர்கள் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகியோர் பயன்படுத்தாமல் இவர் மட்டும் இந்நூலினைப் பயன்படுத்துவது இவரது பொருள் இலக்கண அறிவைப் புலப்படுத்துகின்றது.

யாப்பருங்கலக்காரிகை : சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகியோர் இந்நூலினை எடுத்தாண்டுள்ளனர்.

சுவாமிகள் இரண்டு இடங்களில் நூற்பாவை உரைநடைப் படுத்திக் கையாண்டுள்ளார்.[7]

புன்னைவனநாதனும், சுவாமிகள் எடுத்தாண்ட அதே உரைநடைப் பகுதியை அதே இடத்தில் அமைத்துள்ளார்.[8]

தம்பிரான் ஒரு நூற்பாவை நூற்பாவின் வடிவத்திலேயே கையாண்டுள்ளார்.[9]

மேற்கண்ட சான்றுகளின் வழி யாப்பருங்கலக்காரிகையைப் பயன்படுத்துவதில் சுவாமிகளை அடியொற்றிச் செல்கிறார் புன்னைவனநாதன் என்பது புலப்படுகிறது

மேற்கண்டவற்றின் மூலம் உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கண மேற்கோளாட்சியை அறிய முடிகிறது. இனி அவற்றின் நோககம் விளக்கப்படுகிறது. (காண்க பின்னிணைப்பு: 5)

**மேற்கோளாட்சியின் நோக்கம்**

உரையாசிரியர்கள் பயன்படுத்திய மேற்கோள்கள் சொற்பொருள் விளக்கம், இலக்கண விளக்கம், தத்துவ விளக்கம் ஆகியவற்றிற்காக எடுத்தாளப்பட்டுள்ளன.

சொற் பொருள் விளக்கம் : சுவாமிகள், தொல்காப்பிய நூற்பா ஒன்றினைச் சொற்பொருள் விளக்கத்திற்கு அமைத்துக் காட்டுவர்.

> நம்பியென்பது சிறப்புப்பெயரும், ஆரூரனென்பது மூதாதைக்குரிய முறைமையிற் போந்த இயற் பெயரு மாதல் பற்றி, நம்பியாரூரனென முறைப்படுத்தார்;
>
> சிறப்பினாகிய பெயர் நிலைக் கிளவிக்கு
> மியற்பெயர்க் கிளவிமுற்படக் கிளவார்
> (தொல் சொல் 41)
>
> என்பதோத்தாகலின்

என நம்பியாருரன் என்ற பெயருக்கு விளக்கமளிக்க இந்நூற்பாவினைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறிய முடிகிறது.[10]

புன்னைவனநாதன் தொல்காப்பிய நூற்பாக்களைச் சொற்பொருள் விளக்கத்திற்காகப் பயன்படுத்தவில்லை.

தம்பிரான் தொல்காப்பிய நூற்பாக்கள் இரண்டினைச் சொற்பொருள் விளக்கத்திற்குப் பயன்படுத்தியுள்ளார்.

> மல்லல்அம் பரவை — பண்புமிக்க அழகையுடைய பரவை நாச்சியார். அம்-அழகு. மல்லல் அழகுக்கு அடையென்க;
>
> மல்லல் வளனே (தொல். உரி. 7)
> என்றாராகலின்

என்றும்

> தடக்கை பெருமை வாய்ந்த கை. தட-பெருமை; அது கொடையாற் பெற்ற மேன்மை மேற்று,
>
> தடவுங் கயவு நளியும் பெருமை (தொல். உரி. 22)
> என்பதனாலுணர்க

என்று சொற்பொருள் விளக்கத்திற்குச் சான்றமைத்துள்ளார்.[11]

வை இரத்தினசபாபதி,

> அன்பு என்பது அனைத்துக் குணங்களுக்கும் மூல மாகிய முதற் பெருங்குணம். அன்பின் முக்கியத் துவத்தை அமைத்துக் காட்டிய திருவள்ளுவர் ஒரு பொருள் மேல் அன்பை உண்டாக்குவது எப்படி? என்ற வினாவுக்கு விடையை நம்மிடமே விட்டு விடு கிறார். தொல்காப்பியர் புணர்க்கும் பால், பிரிக்கும் பால் எனக் கூறுகிறார்

என்றும்

> மல்லல் — வளமை;
> மல்லல் வளனே
> (தொல்காப்பிய நூற்பா)

என்பதாலும் சொற்பொருள் விளக்கத்திற்கு இரண்டு நூற் பாவைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறிய முடிகிறது.[12]

**இலக்கண விளக்கம் :** இலக்கண விளக்கத்திற்குச் சுவாமிகள் தொல்காப்பிய நூற்பாக்கள் நான்கினை எடுத்தாண் டுள்ளார்.

> கழலென்னும் சாதியொருமை இரண்டனுருபு ஈற்றில் தொக்குநின்றது;

ஐயுங்கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதியான
(தொல். சொல். வேற். மயங். 22)

என்பதோத்தாகலின்

என்றும்,

இரட்டைக்கிளவி யிரட்டிற் பிரிந்திசையா
(தொல். சொல். 48)

ஆகலின் விதிர் விதிர்ப் பெனவந்தது

என்றும்,

முற்படக்கிளத்தல் செய்யுளுரித்தே
(தொல். சொல். 39)

என்பதனால் அதுவென்னுஞ்சுட்டு வழுவமைதியாய் முன் வந்தது

என்றும்,

தருசொல் வருசொல் லாயிரு கிளவியுந் தன்மை
முன்னிலையா யீரிடத்த (தொல். கிளவி. 29)
என்னும் சூத்திரத்திற்கு மாறாகப் படர்க்கையிடத்திற்கு வந்தமையின் வரு இரண்டும் இடவழுவமைதி

என்றும் கூறுவதால் சுவாமிகள் இலக்கண விளக்கத்திற்குத் தொல்காப்பிய நூற்பாவை எடுத்தாண்டதை அறிய முடிகிறது.

சுவாமிகள்

திருத்தாண்டகமாவது — ஒவ்வோரடியும் இருபத்தா றெழுத்தின் மிக்குவர நான்கடியாற் பாடப்படும் பாட்டு

என்றும்,

தொடர்பென்பது செய்யுட்கு, எழுத்து அசை சீர் தளை அடி தொடை என்பவற்றின் தொடர்புடைமையிற் போந்த பெயர்

என்றும் கூறுவதால் இலக்கண விளக்கத்திற்கு யாப்பிலக் கணத்தைப் பயன்படுத்தியுள்ளார் என்பது புலப்படும்.[13]

புன்னைவனநாதன் தொல்காப்பிய நூற்பாக்கள் மூன்றினை (தொல். சொல். வேற். மயங். 22; தொல். சொல். கிளவி. 39;

தொல். சொல். கிளவி. 29) இலக்கண விளக்கத்திற்குச் சான்றாக அமைத்துள்ளார். மேலும் சுவாமிகள் பயன்படுத்திய யாப்பிலக்கண அறிவை ஏற்று அப்படியே தம் உரையில் இலக்கண விளக்கம் கொடுத்துள்ளார்.[14]

தம்பிரான், தொல்காப்பிய நூற்பாக்கள் நான்கினை இலக்கண விளக்கத்திற்குப் பயன்படுத்தியுள்ளார்.

> கழல் என்புழி இரண்டாவது தொக்கது, இதனை,
> ஐயுங்கண்ணு மல்லாப் பொருள்வயின்
> மெய்யுருபு தொகாஅ விறுதியான
> (தொல். வேற். மயங். 22)

என்றும்,

> விதிர் விதிர்ப்பு என்பது இரட்டைக் கிளவி. இதனை,
> இரட்டைக் கிளவி யிரட்டிற் பிரிந்திசையா
> (தொல். சொல். கிளவி. 38)

என்றும்,

> போலும் — செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று
> போல்வன் என்பது பொருள். இனி,
> ஒப்பில் போலியும் அப்பொருட்டாகும்
> (தொல்இடை. 30)
> என்பதனால் கட்டுரைக்கண் வந்த இடைச்சொல்
> எனினுமாம்

என்றும்

> வருஞ் சைவ நலம் என்புழியு முள்ள 'வரும்' இரண்டும்
> தருசொல் வருசொல் லாயிரு கிளவியும்,
> தன்மை முன்னிலை யாயீரிடத்த
> (தொல். சொல். கிளவி. 29)
> என்னுஞ் சூத்திரத்திற்கு மாறாகப் படர்க்கை யிடத்திற்கு
> வந்தமையின் இடவழுவமைதி

என்றும் இலக்கண விளக்கத்திற்குத் தொல்காப்பிய நூற்பாவை எடுத்தாண்டுள்ளார்.

தம்பிரான் இலக்கண விளக்கத்திற்கு நன்னூல் நூற்பாக்கள் மூன்றினைக் கையாண்டுள்ளார். இதனை,

அஃதன்றி எனற்பாலது அஃதான்று எனத் திரிந்தது: செய்யுளாதலின்,

அன்றி இன்றியென் வினையெஞ் சிகரம் தொடர்பினுள்
உகர மாய்வரி னியல்பே (நன். உயிர். புணர். 30)

என்பதனானும்

அதுமுன் வருமன் றான்றாந் தூக்கின்
(நன். உயிர். புணர். 230)

என்பதனானுமறிக

என எழுத்ததிகார நூற்பாக்களையும்

அப்பொருட்குத் திரிகுவர் என்பது முற்றெச்சம்
என்பர் அற்றேல்,
வினைமுற்றே வினையெச்சமாகலும் (நன்.வினை. 32)
என்பதனால்

என்னும் சொல்லதிகார நூற்பாவையும் இவ்விளக்கத்திற்குச் சான்றாகக் கையாண்டுள்ளார்.

மேலும் யாப்பருங்கலக் காரிகை நூற்பா ஒன்றினையும் இலக்கண விளக்கத்திற்கு எடுத்துக் காட்டுகிறார்.

மூன்றடியான் முடிவது அகவற்பாவுக்குச் சிற்றெல் லையாகும் என்பதனை யுணர்த்துவான் இங்ஙனம் கூறினார். அகவற்கு மூன்றடிச் சிறுமை என்பதனை,
வெள்ளைக் கிரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றகவற்
கெள்ளப் படாக்கலிக் கீரிரண்டாகு மிழிபு
(யாப். காரி. உறுப். 14)

என்பதனாலறிக

எனவரும் இடத்து இலக்கண விளக்கத்திற்குத் தம்பிரான் யாப்பருங்கலக் காரிகை நூற்பாவைப் பயன்படுத்தியுள்ளார் என்பது தெளிவு.[15]

வை. இரத்தினசபாபதி இலக்கண மேற்கோள்களை இலக்கண விளக்கத்திற்குப் பயன்படுத்தாமை சிந்திக்கத் தக்கது.

மேற்கண்ட சான்றுகளின் வழி சுவாமிகள், புன்னைவன நாதன், தம்பிரான் ஆகியோர் தொல்காப்பியம், நன்னூல், யாப்பிலக்கணம் முதலியவற்றை இலக்கண விளக்கத்திற்குப்

பயன்படுத்த வை. இரத்தினசபாபதி இந்நோக்கத்திற்கு மேற்கோள்களை எடுத்தாளாமல் செல்வதை அறிய முடிகிறது.

தத்துவ விளக்கம் : இலக்கண மேற்கோள்களைத் தத்துவ விளக்கத்திற்குத் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் பயன்படுத்தியுள்ளனர்.

தம்பிரான் தம் உரையில்,

> உம்மைத் தொகையாக ஞானங்களெனப் பன்மை யீறாயிற் றென்க.

இதனை

> உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே
> (நன். பொது. 21)
>
> என்னும் சூத்திரத்தில் பலரீறே என்ற தேற்றேகாரத் தால், அஃறிணையிலும் கொள்ளப்படும். அன்றி ஞானம், பரஞானம், அபரஞானம் என இருதரப்படு தலின் ஞானங்கள் என்றாரெனினும் அமையும்

என நன்னூல் நூற்பாவின் துணைக்கொண்டு தத்துவ விளக்கம் அளித்துள்ளதை அறிய முடிகிறது.[16]

வை. இரத்தினசபாபதி தம் உரையில்,

> மனிதன் தன்னைத் தெய்வ நிலையில் உயர்த்தி நின்ற போது அருளாற்றல் அவனுள்ளத்திற் பலவகை ஒலிகளை எழுப்பும். இவைகளால் அமைவனவே மந்திரங்கள். இதனை
>
> "நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த,
> மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் தத்துவ விளக்கம் அளித் துள்ளார். மேலும் ஒரு தொல்காப்பிய நூற்பாவை இவ்விளக்கத் திற்கு எடுத்தாண்டுள்ளார். மேலும் புறப்பொருள் வெண்பா மாலைக் கருத்தை,

> ஒருவனுடைய வாழ்க்கையில் இயற்கை வெற்றி, செயற்கை வெற்றி என்ற இருவகை வெற்றிகள் உள. இவற்றைப் புறப்பொருள் வெண்பாமாலை வாகைப் படலத்தாலுணர்க. கல்வி கேள்விகளில் வல்லனாதல்,

> தனக்கு வரையறுக்கப்பெற்ற செயல்களில் வல்ல னாதல் ஆகிய எல்லாம் இயற்கை வெற்றிகள்

எனத் தத்துவ விளக்கத்திற்குச் சான்று காட்டியுள்ளதை அறிய முடிகிறது.[17]

மேற்கண்டவற்றின் மூலம் இலக்கண மேற்கோள்களை உரையாசிரியர்கள் சொற்பொருள் விளக்கத்திற்காகவும், இலக்கண விளக்கத்திற்காகவும், தத்துவ விளக்கத்திற்காகவும் பயன்படுத்தியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

### வடமொழியறிவோடு இலக்கணங்கூறல்

ஓர் உரையாசிரியருக்குப் பிறமொழியறிவும் புலமையும் இருந்தால் அவர் அம்மொழியறிவைத் தம் உரையில் அமைத்து எழுதுவர். அம்முறையில் உரையாசிரியர்கள் சுவாமிகள், தம்பிரான் மட்டும் வடமொழியறிவைப் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள்,

> மொழியப்படு வெனற் பாலது செயப்பாட்டு வினைப் பொருளுணர்த்தும் படு விகுதி தொக்கு மொழியென நின்றது. இவ்வாறு வருவனவற்றை வடநூலார் நயக்கு என்பர்

என்றும்

> முந்திய செய்யென்புழி பிறவினைப் பொருணர்த்தும் விவ் விகுதி தொக்கு நின்றது; குடி பொன்றிக் குற்றமு மாங்கே தகும் (குறள்) என்புழிப் போல. இதனை வடநூலார் அந்தர்ப்பாவிதணிச் சென்பர். ணிச்சு : பிறவினை விகுதி

என்றும் வடமொழி அறிவினை விகுதியை உணர்த்தப் பயன் படுத்தியுள்ளார் என்பதை அறியலாம்.[18]

தம்பிரான்,

> உருபிற்கு முன் பயனை வருவித்தலைத்
> துமர்த்தம்
> என்பார் வடநூலார்

என்று கூறி தம்முடைய வடமொழியறிவை வெளிப்படுத்தி உள்ளதை அறிய முடிகிறது.[19]

மேற்கண்ட சான்றுகளின் வழி இவ்விரண்டு உரையாசிரியர்களும் வடமொழியறிவோடு இலக்கணம் உரைத்துள்ளதை அறிய முடிகிறது.

இலக்கணக் குறிப்புத்தருதல்

உரையாசிரியர்கள் தங்கள் உரையில் சில சொற்களுக்கு இலக்கணக் குறிப்பு தந்து விளக்கிச் செல்வர். இவ்விலக்கணக் குறிப்புத் தருவதால் இலக்கண மரபு காப்பாற்றப்படுகிறது. அவ்வகையில் உரையாசிரியர்கள் நால்வரும் தம் உரையில் இலக்கணக் குறிப்பைப் பயன்படுத்தியுள்ளனர்.

சுவாமிகள்,

விளங்கிழை: அன்மொழித்தொகை;
பொய்கையென்பது கரையையும், முலை பாலையு
முணர்த்தலின் ஆகுபெயர்;
மலர்: வினைத் தொகை; பரிமா: இருபெயரொட்டு;
ஆனேறி: வினைக் குறிப்புப் பெயர்;
இல்: எதிர்மறை வினைத்தொகை;

போன்ற இலக்கணக் குறிப்புகளைத் தம் உரையில் அமைத்துக் காட்டியுள்ளார்.[20]

புன்னைவனநாதன்,

வான் — இடவாகுபெயர்;
விதிர் விதிர்ப்பு — இரட்டைக் கிளவி;
விளம்ப — செயவெனெச்சம்;
என்று — எச்சத்திரிபு;
வாய் — வினைத்தொகை

என்ற இலக்கணக் குறிப்புகளை எடுத்துரைத்துள்ளார்.[21]

தம்பிரான்,

ஆரூர — அண்மைவிளி;
தொடு மணற்கேணி — வினைத்தொகை;
கொம்பு — பெண்: உவமையாகு பெயர்;
ஒன்று ஏடு — வினைத்தொகை;
சூடி — வினையெச்சம்;

போன்றவற்றின் வழி இலக்கணக் குறிப்பினைக் கையாண்டுள்ளார்.[22]

வை. இரத்தின சபாபதி,

நாட்டிற்கு இலாத — நாட்டின் கண் இல்லாத;
ஏழாம் வேற்றுமையாகக் கொள்க;
நனி விருப்பன் — உரிச்சொல் தொடர்;
வாசகத்தேன் — உருவகம்;
வேய்த் தோள் என்பது அன்மொழியாய் உவமையை உணர்த்திற்று
நல்ல — குறிப்பு வினைமுற்று

போன்றவற்றின் மூலம் இலக்கணக் குறிப்புகளை வெளிப் படுத்தியுள்ளதை அறிய முடிகிறது.[23]

மேற்கண்ட சான்றுகளின் வழி இலக்கணக் குறிப்புக்களை நான்கு உரையாசிரியர்களும் பயன்படுத்தி இலக்கண மரபைக் காப்பாற்றியுள்ளனர் என்பது தெளிவு.

தொகுப்புரை

இவ்வியலில் கூறப்பட்ட செய்திகள் இங்குத் தொகுத்துச் சுட்டப்படுகின்றன.

1. உரையாசிரியர்களின் இலக்கணக் கூறுகளை நான்கு வகைப்படுத்தலாம். அவை: 1. மேற்கோளாட்சி, 2. நோக்கம், 3. வட மொழியறிவோடு இலக்கணங் கூறல், 4. இலக்கணக் குறிப்பு தருதல்.

2. மேற்கோளாட்சி: மேற்கோளாட்சியின் மூலம் தங்களு டைய நூலறிவை உரையாசிரியர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். உரையாசிரியர்கள் தொல்காப்பியம், நன்னூல், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக் காரிகை முதலிய நூல்களைப் பயன் படுத்தியுள்ளனர்.

3. மேற்கோளாட்சியின் நோக்கம்: மேற்கோள்களைச் சொற்பொருள் விளக்கத்திற்கும், இலக்கண விளக்கத்திற்கும், தத்துவ விளக்கத்திற்கும் உரையாசிரியர்கள் எடுத்தாண் டுள்ளனர்.

3.1. சொற்பொருள் விளக்கத்திற்குப் புன்னைவனநாதன் மேற்கோள்களைப் பயன்படுத்தாமல் செல்கிறார்.

3.2. இலக்கண விளக்கத்திற்கு வை. இரத்தின சபாபதி, மேற்கோள்களைப் பயன்படுத்தாமல் செல்கிறார்.

3.3. தத்துவ விளக்கத்திற்குத் தம்பிரான், வை. இரத்தின சபாபதி ஆகியோர் சான்றுகளைத் தம் உரையில் தந்துள்ளனர். ஏனைய உரையாசிரியர்களான சுவாமிகள், புன்னைவனநாதன் ஆகியோர் கையாளாமல் சென்றுள்ளனர்.

4. வடமொழியறிவை இலக்கணம் கூறுவதற்கு உரையாசிரியர்களான சுவாமிகள், தம்பிரான் ஆகியோர் பயன்படுத்தியுள்ளனர்.

5. இலக்கணக் குறிப்புத் தந்து உரையாசிரியர்கள் நால்வரும் இலக்கண மரபைப் போற்றியுள்ளனர்.

## குறிப்புகள்

1. அ — காப்பு: *1;4:1;6:1;10:1;34:1.*
2. ஆ — காப்பு: *1;10:1;34:1.*
3. இ — காப்பு: *1;4:1;24:1;31:1;34:1;35:1.*
4. ஈ — *6:1;17:1;35:1;21:1.*
5. இ — *24:1;2:1;33:1;37:1.*
6. ஈ — *24:1.*
7. அ — *6:1;25:1.*
8. ஆ — *6:1:25:1.*
9. இ — *36:1.*
10. அ — *6:1.*
11. இ — *35:1;31:1.*
12. ஈ — *6:1;35:1.*
13. அ — காப்பு: *1;4:1;10:1;34:1;6:1;25:1.*
14. ஆ — காப்பு: *1.*
15. இ — காப்பு: *1;4:1;24:1;34:1;24:2;33:1;35:1.*
16. இ — *37:1.*
17. ஈ — *17:1;24:1;21:1.*
18. அ — காப்பு: *1;6:1.*
19. இ — *17:1.*
20. அ — *4:1;5:1;12:1;20:1;29:1;36:1.*
21. ஆ — *3:1;4:1;5:1;23:1;26:1.*
22. இ — *3;1;4:1;9:1;25:1;29:1.*
23. ஈ — *2:1;3:1;4:1;8:1;30:1.*

# 4

# உரைகளில் தத்துவக் கூறுகள்

இந்த ஆய்வின் முதல் இயல் 'நால்வர் நான்மணிமாலை அறிமுகம்' என்னும் தலைப்பில் அமைந்தது; இரண்டாம் இயல் உரைகளின் இயல்புகள் குறித்து விளக்கியது; மூன்றாம் இயல் இலக்கணக் கூறுகளை எடுத்துரைத்தது; இவ்வியல் தத்துவக் கூறுகள் குறித்து விளக்குகின்றது.

## தத்துவம்

தத்துவம் என்பது நிலைத்து வாழக் கூடியது. உண்மைகள் பொதிந்து மற்றோரால் போற்றி ஒழுகத்தக்க கருத்துகள் நிறைந்தது என்பர்.[1] தத்துவம் பல்வேறு உட் கூறுகளைக் கொண்டிருப்பினும் ஆய்வேட்டின் அமைப்புக் கருதி அதனைக் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம். அவையாவன: 1. தத்துவ மேற்கோளாட்சி, 2. மேற்கோளாட்சியின் நோக்கம், 3. தத்துவ நோக்கு என்பன.

## தத்துவ மேற்கோளாட்சி

தத்துவங்களை விளக்கப்புகும் உரையாசிரியர்கள் தம் உரையில் தத்துவ நூல்களை எடுத்துக்காட்டி அரண் செய்துள்ளனர். அவ்வகையில் அவர்கள் எடுத்தாண்ட நூல், மேற்கோளாட்சி என இங்குக் குறிக்கப் பெறுகிறது.

தத்துவ நூல்களை உரையாசிரியர்களான சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகிய நால்வரும் தம் உரையில் எடுத்தாண்டுள்ளனர். இந்த மேற்கோள் நூல்கள் அகர நிரலில் இங்குக் குறிக்கப்பெறுகின்றன.

*இறைவனூற்பயன் :* இந்நூலினைச் சுவாமிகள் மட்டும் மூன்று இடங்களில் குறித்துள்ளார்.[2] ஏனைய உரையாசிரியர்கள் குறிப்பிடவில்லை.

*உண்மை விளக்கம் :* மனவாசங்கடந்தார் இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள், புன்னைவனநாதன் ஆகிய இருவரும் இரண்டு இடங்களிலும்[3], தம்பிரான் ஓர் இடத்திலும் கையாண்டுள்ளனர்.[4] வை இரத்தினசபாபதி இந்நூலினைக் கையாளவில்லை.

*சங்கற்ப நிராகரணத் திருக்குறள் :* இந்நூலினைச் சுவாமிகள் இரண்டு இடங்களிலும்[5] தம்பிரான் ஓர் இடத்திலும் குறித்துள்ளனர்.[6] ஏனைய உரையாசிரியர்களான புன்னைவனநாதன், வை. இரத்தினசபாபதி ஆகியோர் குறிப்பிடவில்லை.

*சங்கற்ப நிராகரணம் :* உமாபதி சிவாசாரியர் இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள், தம்பிரான் ஆகிய இருவரும் அவர்களின் உரையில் ஓர் இடத்தில் கையாண்டுள்ளனர்.[7] ஏனைய உரையாசிரியர்கள் இந்நூலினைக் கையாளவில்லை.

*சிவஞானசித்தி :* அருணந்தி தேவர் இயற்றிய இதனைச் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் மூவர் மட்டும் எடுத்தாண்டுள்ளனர்.

சுவாமிகள் பதினான்கு சூத்திரங்களை எடுத்தாண்டுள்ளார். பாடல் நான்கில் மூன்று சூத்திரங்களையும், பாடல் பதினொன்றில் இரண்டு சூத்திரங்களையும், பாடல் பதினான்கில் இரண்டு சூத்திரங்களையும், பாடல் நாற்பதில் மூன்று சூத்திரங்களையும் எடுத்தாண்டு மற்றைய நான்குச் சூத்திரங்களைக் காப்பு, பாடல்கள் 2, 20, 38 ஆகியவற்றில் குறித்துள்ளார்.[8]

புன்னைவனநாதன் நான்கு சூத்திரங்களை எடுத்தாண்டுள்ளார்.[9]

தம்பிரான் ஐந்து சூத்திரங்களைக் கையாண்டுள்ளார். இவர், பாடல் நாற்பதில் மூன்றினையும், இருபத்து எட்டில் ஒன்றினையும், முப்பத்து எட்டில் ஒன்றினையும் அமைத்துள்ளார்.[10]

சிவஞான சித்தியாரை மிகுதியும் எடுத்தாண்டவர் சுவாமிகள். வை. இரத்தினசபாபதி இந்நூலினை எடுத்தாளவில்லை.

**சிவஞான தீபம் :** சுவாமிகள் இந்நூலினை ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளார்.[11] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாள வில்லை.

**சிவஞானபோதம் :** மெய்கண்ட தேவர் இயற்றிய இந் நூலினைச் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான் ஆகிய மூவர் எடுத்தாண்டுள்ளனர்.

சுவாமிகள் எட்டுச் சூத்திரங்களைக் கையாண்டுள்ளார். பாடல்கள் பதினான்கு, நாற்பது ஆகியவற்றின் உரைகளில் முறையே இரண்டு சூத்திரங்களையும் பாடல்கள் 5, 8, 31, 38 ஆகியவற்றின் உரைகளில் ஒவ்வொரு சூத்திரத்தையும் எடுத் தாண்டுள்ளார்.[12]

புன்னைவனநாதன் மூன்று இடங்களில் எடுத்தாண் டுள்ளார்.[13] தம்பிரான் நான்கு சூத்திரங்களை மூன்று இடங் களில் கையாண்டுள்ளார்[14]

இந்நூலினைச் சுவாமிகள் மிகுதியும் கையாண்டுள்ளார். வை. இரத்தினசபாபதி எடுத்தாளவில்லை.

**சிவதருமோத்திரம் :** சுவாமிகள் இந்நூலிலிருந்து இரண்டு சூத்திரங்களை ஓர் இடத்தில் அமைத்துள்ளார்.[15] ஏனைய உரையாசிரியர்கள் குறிப்பிடவில்லை.

**சிவப்பிரகாசம் :** உமாபதிசிவாசாரியர் இயற்றிய இந்த நூலினைச் சுவாமிகள், புன்னைவனநாதன் ஆகிய இருவரும் ஓர் இடத்தில் குறித்துள்ளனர்.[16] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

**சிவப்பிரகாச விகாசம் :** சுவாமிகள் இதனை ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளார்.[17] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

**சைவ சமயநெறி :** இதனைச் சுவாமிகள், இரண்டு இடங் களிலும்,[18] புன்னைவனநாதன் ஓர் இடத்திலும் கையாண் டுள்ளனர்.[19] ஏனையோர் குறிக்கவில்லை.

**சௌந்தரியலகரி :** இந்நூலிலிருந்து சுவாமிகள் இரண்டு சூத்திரங்களை ஓர் இடத்தில் அமைத்துக்காட்டியுள்ளார்.[20] ஏனைய உரையாசிரியர்கள் குறிக்கவில்லை.

*திருக்களிற்றுப்படியார் :* இதனை இயற்றியவர் திருக் கடவூர் உய்யவந்ததேவர். தத்துவ நூல்களில் உரையாசிரி யர்கள் நால்வரும் எடுத்தாளும் நூல் இது எனக்கூறினாலும் அமையும்.

சுவாமிகள் ஆறு இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.[21] புன்னைவனநாதன்,[22] தம்பிரான்[23] ஆகியோர் மூன்று இடங் களில் கையாண்டுள்ளனர். வை. இரத்தினசபாபதி ஓர் இடத் தில் குறித்துள்ளார்.[24]

*திருவருட்பயன் :* உமாபதி சிவாசாரியர் இயற்றிய இதனைச் சுவாமிகள் தம் உரையில் ஓர் இடத்தில் பயன்படுத்தி யுள்ளார்.[25] ஏனைய உரையாசிரியர்கள் குறிக்கவில்லை.

*திருவுந்தியார் :* திருவியலூர் உய்யவந்ததேவர் இயற்றிய இந்நூலினைச் சுவாமிகள் ஓர் இடத்தில் பயன்படுத்தியுள்ளார்.[26] ஏனைய உரையாசிரியர்கள் பயன்படுத்தவில்லை.

*பிரபுலிங்கலீலை :* சிவப்பிரகாசர் இயற்றிய இதனைச் சுவாமிகள், தம்பிரான் ஆகிய இருவரும் இரண்டு இடங்களில் கையாண்டுள்ளனர்.[27]

இந்நூற் மேற்கோள்களை எடுத்தாளுவதில் சுவாமிகளைப் பின்பற்றிச் சென்றுள்ளார் தம்பிரான் என்பதை அறிய முடிகிறது. ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

*வருத்தமறவுய்யும் வழி :* சுவாமிகள் இந்நூலினை ஓர் இடத்தில் எடுத்தாண்டுள்ளார்.[28] ஏனைய உரையாசிரியர்கள் எடுத்தாளவில்லை.

*வாயு சங்கிதை:* இந்நூலிலிருந்து சுவாமிகள் மூன்று சூத்திரங் களை ஓர் இடத்தில் அமைத்துள்ளார்.[29] ஏனைய உரையாசிரி யர்கள் புன்னைவனநாதன் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் பயன்படுத்தவில்லை.

*வைராக்கியசதகம் :* இந்நூலினைச் சுவாமிகள், புன்னை வனநாதன், தம்பிரான் ஆகிய மூவரும் ஒரே இடத்தில் எடுத் தாண்டு மேற்கோளாளுவதில் தம்முள் ஒன்றுபட்டுள்ளனர்.[30] உரையாசிரியர் வை. இரத்தினசபாபதி இந்நூலினை எடுத்தாள வில்லை.

மேற்கண்டவற்றின் வாயிலாகத் தத்துவ நூல்களிலிருந்து மிகுதியான மேற்கோள்களைக் கையாண்டவர் சுவாமிகள் என்றும், ஒரு நூலினை மட்டும் கையாண்டவர் வை. இரத்தின சபாபதி என்பதையும் அறிய முடிகிறது. மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டதன் நோக்கம் இனி எடுத்துரைக்கப்படும்.

(காண்க: பின்னிணைப்பு: 6)

## மேற்கோளாட்சியின் நோக்கம்

மேற்கோள்களைத் தங்கள் உரைகளில் உரையாசிரியர்கள் குறிப்பிட்ட நோக்கங்களுக்காக எடுத்தாண்டுள்ளனர். நால்வர் நான்மணிமாலை உரையாசிரியர்கள் தத்துவ நூல்களைச் சொற்பொருள் விளக்கம், இலக்கண விளக்கம், தத்துவ விளக்கம் என்னும் மூன்றிற்காகப் பயன்படுத்தியுள்ளனர்.

**சொற்பொருள் விளக்கம்:** சொற்பொருள் விளக்கத்திற்குச் சுவாமிகள், தம்பிரான் ஆகியோர் சிவஞான போதத்திலிருந்து ஒரு சூத்திரத்தைச் சான்றாக அமைத்துள்ளனர். இதனைச் சுவாமிகள்,

> "நொடித்தல் — அழித்தல்
> 'நோக்காது நோக்கி நொடித்தன்றே'
> (சிவஞானபோதம் முதற் சூத்திரம்)
>
> என்பதனானும் உணர்க"

என்று கூறுவதன் வாயிலாக அறியலாம்.[31]

இதன் வாயிலாகச் சொற்பொருள் விளக்கத்திற்குச் சுவாமிகள் தத்துவ மேற்கோள் பயன்படுத்தியமை தெளிவாகிறது.

தம்பிரான் இவ்விளக்கத்திற்கு,

> அன்பினால் முலைப்பாலும் கண்ணீரும் உண்டாதலை, இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழையாளனல்லா யுளவாம். என்பதனாலறிக.[32]

என்று அன்பு என்னும் சொல்லுக்குச் சான்று காட்டி விளக்குவதன் வாயிலாக அறியலாம்.

ஏனைய உரையாசிரியர்கள் இந்நோக்கத்திற்கு மேற்கோள்களைக் கையாளவில்லை.

**இலக்கண விளக்கம்;** இலக்கண விளக்கத்திற்குத் தத்துவ நூல்களை எடுத்துக்காட்டி விளக்கமளித்துள்ளார் சுவாமிகள். இதனை,

தாயிலியென்புழி இன்மை விளங்காமை குறித்து நின்றது;

பாசத்தார்க் கின்றாம்பதி

(சிவஞானபோதம், பன்னிரண்டாம் சூத்திரம் தன்னுரை)

என்புழிப் போல, ...... இலியென்பன
வினைக்குறிப்புப் பெயர்கள்

என்று குறிப்பிடுவதன் வாயிலாக அறியலாம்.[33]

ஏனைய உரையாசிரியர்கள் இலக்கண விளக்கத்திற்கு மேற்கோள்களை எடுத்தாளவில்லை.

**தத்துவ விளக்கம்:** தத்துவ விளக்கத்திற்கு உரையாசிரியர்கள் அனைவரும் தத்துவ நூற் மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளனர்.

சுவாமிகள், இறைவனூற் நூற்பயனில் இருந்து மூன்று சூத்திரங்களை இந்நோக்கத்திற்குப் பயன்படுத்தியுள்ளார்.[34] உண்மை விளக்கத்தை இரண்டு இடங்களில் இந்நோக்கத்திற்கு எடுத்தாண்டுள்ளார்.[35] சங்கற்பநிராகரணத் திருக்குறளை இரண்டு இடங்களில் கையாண்டுள்ளார்.[36] சங்கற்பநிராகரணத்தில் மாயாவதி சங்கற்பநிராகரணத்தை இதற்குப் பயன்படுத்தியுள்ளார்.[37] சிவஞான சித்தியாரிலிருந்து பதினான்கு சூத்திரங்களை எடுத்தாண்ட இவர் அனைத்துச் சூத்திரங்களையும் தத்துவ விளக்கத்திற்குப் பயன்படுத்தியுள்ளார்.[38] சிவஞான தீபத்திலிருந்து ஒரு சூத்திரத்தை இந்நோக்கத்திற்குப் பயன்படுத்தியுள்ளார்.[39] சிவஞான போதத்திலிருந்து ஆறு சூத்திரங்களை இதற்குப் பயன்படுத்தியுள்ளார்.[40] சிவதருமோத்திரம், இரண்டு சூத்திரங்களையும், சிவப்பிரகாசம் ஒரு சூத்திரத்தையும் சிவப்பிரகாச விகாசம் ஒரு சூத்திரத்தையும், சைவசமய நெறியை இரண்டு இடங்களிலும், சௌந்தரியலகரி என்னும் நூலில் இரண்டு சூத்திரங்களையும் கையாண்டுள்ளார்.[41] திருக்களிற்றுப் படியாரில் ஆறு சூத்திரங்களையும் இந்நோக்கத்திற்கு அமைத்துள்ளார். ஒரு சூத்திரத்தைத் திருவருட் பயன், திருவுந்தியார் ஆகியவற்றிலிருந்தும், இரண்டு சூத்திரங்களைப் பிரபுலிங்க லீலையிலிருந்தும் கையாண்டுள்ளார்.[42]

ஒரு சூத்திரத்தை வருத்தமறவுய்யும் வழியிலிருந்தும் வைராக்கிய சதகத்திலிருந்தும், மூன்று சூத்திரங்களை வாயு

சங்கிதையிலிருந்தும் பயன்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது.[43] இதனைச்

சிருட்டியாதி நிகழ்வை,
தோற்றம் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார — மூற்றமா
யூன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு

(உண்மை விளக்கம் 36)

என்பதாலும்

சிவன் தற்சொருபமாக்குதலை,
சிவனெனவே சிந்தித்துச் செய்பூசை கொண்டே
சிவனே பலத்தைச் செய்யும்

(சங்கற்ப நிராகரணத்திருக்குறள்)

என்பதாலும் அறியலாம்.

மேற்கண்டவற்றின் வாயிலாகத் தத்துவ விளக்கத்திற்குச் சுவாமிகள் பயன்படுத்திய மேற்கோள்களை அறியமுடிகிறது.

புன்னைவனநாதன், உண்மை விளக்கத்திலிருந்து இரண்டு சூத்திரங்களையும் மூன்று சூத்திரங்களைச் சிவஞான போதத்திலிருந்தும், நான்கு சூத்திரங்களைச் சிவஞான சித்தியாரிலிருந்தும் இந்நோக்கத்திற்கு எடுத்தாண்டுள்ளார்.[44] இவர் ஒரு சூத்திரத்தைச் சிவப்பிரகாசம், சைவ சமயநெறி, வைராக்கிய சதகம் ஆகியவற்றிலிருந்தும் மூன்று சூத்திரங்களைத் திருக்களிற்றுப் படியாரிலிருந்தும் எடுத்தாண்டுத் தத்துவ விளக்கத்தை எடுத்துரைத்துள்ளார்.[45]

இதனை,

சரித்தார்க்குச் சைவ சமய நெறியின்
உரித்தூங்கு புத்தி முத்தியும்

(சைவ சமய நெறி, பொதுவிலக்கணம். 210)

என்பதனானும்

பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்து வருவினையில் இன்பம் — இசைத்த
இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனாம் ஞானத்தை வந்து

(சிவான போதம். எட்டாஞ் சூத்திரம்)

என்பதனானும் அறியலாம்.

மேற்கண்டவற்றின் வாயிலாகத் தத்துவ விளக்கத்திற்குப் புன்னைவனநாதன் தத்துவ நூல்களைச் சான்றாக அமைத்துள்ளதை அறிய முடிகிறது.

தம்பிரான் உண்மை விளக்கம், சங்கற்ப நிராகரணத் திருக்குறள், சங்கற்ப நிராகரணம், வைராக்கிய சதகம் ஆகியவற்றிலிருந்து ஒரு சூத்திரத்தை எடுத்தாண்டுள்ளார்.[46]

தம்பிரான் பிரபுலிங்க லீலையிலிருந்து இரண்டு சூத்திரங்களை எடுத்துக்காட்டியுள்ளார். அதில் ஒன்று

ஞானமே முத்திக்கேது வாதலை,
உரைசெயிற் பரமஞான மொன்றுமே முத்திக்கேது
சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்னு மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவரன்றே
(பிரபுலிங்க லீலை, சித்தராம அதவர்கதி 69)

என்பதாகும்.[47]

மேலும் தம்பிரான் மூன்று சூத்திரங்களைச் சிவஞான போதம், திருக்களிற்றுப் படியார் ஆகியவற்றிலிருந்து இந் நோக்கத்திற்கு எடுத்தாண்டுள்ளார்.[48] ஐந்து சூத்திரங்களைச் சிவஞான சித்தியாரிலிருந்து இவ்விளக்கத்திற்கு அமைத்துள்ளார்.[49]

மேற்கண்டவற்றின் வாயிலாகத் தத்துவ விளக்கத்திற்கு இவர் எடுத்தாண்ட நூல்களை அறிய முடிகிறது.

வை. இரத்தினசபாபதி திருக்களிற்றுப்படியாரிலிருந்து ஒரு சூத்திரத்தைத் தத்துவ விளக்கத்திற்குக் கையாண்டுள்ளார்.

இதனை,

பாண்டிமாதேவி பால்சுரந்த வரலாறு பெரிய புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடவில்லை. திருக்களிற்றுப் படியார் என்ற சாத்திர நூல் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டது.

சுரந்த திருமுலைக்கே துய்ய திரு ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த

மனமுடையாள் அன்பிருந்த வாறு

(திருக்களிற்றுப் படியார்)

என்று எடுத்துரைப்பதின் வாயிலாக அறியலாம்.[50]

மேற்கண்ட சான்றுகளின் வழி தத்துவ விளக்கத்திற்கு உரையாசியர்கள் நால்வரும் தத்துவ நூல்களைப் பயன்படுத்தி யுள்ளனர் என்பது விளங்கும். இதில் சுவாமிகள் மிகுதியான நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார் எனத் தெளியலாம். இவருடைய உரைச் சிறப்புகளுள் ஒன்றாக இதனைக் கருதலாம்.

## தத்துவ நோக்கு

நால்வர் நான்மணிமாலை உரைகளில் காணலாகும் தத்துவ நோக்கு இங்கு விளக்கப்படுகிறது.

இவ் உரைகளின் தத்துவ நோக்கினை இருவகைப் படுத்த லாம். அவையாவன:

1. சிவப்பிரகாசர் பாடலில் அமைந்துள்ள தத்துவத்தை விளக்கல்

2. பாடற்பொருள் விளக்கத்தினூடே தத்துவத்தை அமைத்துக் காட்டல் என்பன.

நால்வர் நான்மணிமாலை உரைகளில் காணலாகும் தத்துவச் செய்திகளை அளவைகள், உயிர், உலகு, இறை என நான்கு வகையாகப் பாகுபாடு செய்யலாம்.

அளவை விளக்கம்: சைவ சித்தாந்தம் கூறும் மூன்று பொருள்களைப் பதி, பசு, பாசம் என்பனவற்றை உண்மை எனத் துணிதற்கு ஆதாரமான அறிவே அளவை எனப்பெறும். இதனை வட சொல்லால் பிரமாணம் எனக் குறிப்பர்.

அளவை என்பதனுள் மூன்று உட்பிரிவுகள் உள்ளன. அவையாவன அளப்பவன், அளத்தற் கருவி, அளக்கப்படு பொருள் என்பனவாகும். இம்மூன்றும் இருந்தாலன்றி அளத்த லாகிய (ஆராய்ச்சி) தொழில் நடைபெறாது.[51]

சைவ சித்தாந்தம் காட்சி, கருதல், உரை என்னும் மூன்று அளவைகளை இன்றியமையாதனவாகக் கூறும். காட்சி யளவை, கருதலளவை, உரையளவை என்னும் இவற்றை

வடமொழியில் முறையே பிரத்தியட்சப் பிரமாணம், அனுமானப் பிரமாணம், ஆகமப் பிரமாணம் என்பர்.[52]

காட்சியளவையாவது, கண் முதலிய பொறிகளின் வாயிலாகப் பொருள்களைப் பொருந்தி நின்று உணரும் உணர்வாகும்.

கருதல் அளவை என்பது பொறிகள் பொருந்தாது மறைந்து நிற்கும் பொருள்களை, அவற்றோடு நீங்காது உடனாய் நிற்கும் பிறிதொரு பொருளின் வழியாக உணரும் உணர்வாகும்.[53]

பொறிகளாலும், பிறபொருள்களாலும் அறிய முடியாத பொருள்களைச் சான்றோரது உரைகளின் துணையால் உணர்வது உரை அளவை ஆகும்.

நால்வர் நான்மணிமாலையின் உரையாசிரியர்கள் சுவாமிகள், புன்னைவனநாதன், தம்பிரான், வை. இரத்தின சபாபதி ஆகியோர் உரை அளவை, காட்சி அளவை என்னும் இரு அளவைகளையும் மிகச் சுருக்கமாக 32-ஆம் பாடல் உரையில் குறித்துச் சென்றுள்ளனர்.[54]

உயிர் : சைவ சித்தாந்தத்தின் முப்பொருள்களுள் ஒன்றாகக் கருதப் பெறுவது உயிர் என்பதாகும். இச் சொல், உலகில் தோன்றிய அனைத்து உயிர்களையும் குறிக்கும் எனினும் சிறப்பாக மனித உயிர்களே இன்றியமையாதனவாகப் போற்றப் பெறுகின்றன.

உயிரின் இயல்பு தன்னியல்பு, பொதுவியல்பு என்று இரு வகைப்படும். பொதுவியல்பு தடத்தலட்சணம் எனவும் தன்னியல்பு சொரூப லட்சணம் எனவும் வடமொழியில் குறிக்கப்பெறும்.

உயிர் ஆணவம் முதலாய அழுக்குகளோடு கூடிய தன்மை தடத்த லட்சணம் எனவும் அழுக்குகள் நீங்கிய தன்மை சொரூப லட்சணம் எனவும் பெயர் பெறும்.

சிவப்பிரகாசர், நால்வர் நான்மணிமாலையில் சுந்தரரின் அருட் செயலை 11-ஆம் பாடலில் வியந்து போற்றுகிறார். சுந்தரர் முதலை வாயினின்றும் பார்ப்பனச் சிறுவனை உயிர்ப்பிக்கச் செய்த அருட்செயல் இப்பாடலில் விளக்கப்படுகிறது. இங்குப் பார்ப்பனச் சிறுவனைக் குறிக்க "தீங்கிலுயிர் எனும் பனவக் குலமகன்" என்னும் தொடரை ஆளுகிறார். உயிர்,

ஆணவம் முதலாகிய மலங்களால் மறைப்புற்று என்றும் அழியா இயல்யினதாகலின் அவ்வுயிரைப் பார்ப்பனச் சிறுவனாக உருவகப்படுத்தியுள்ளார் சிவப்பிரகாசர்.

பார்ப்பனச் சிறுவன் இயல்புடன் உயிரின் இயல்பை இணைத்து உரையாசிரியர்கள் நால்வரும் தத்துவ விளக்கம் தந்துள்ளனர். பொதுவியல்பு, தன்னியல்பு என்னும் இருவகை உயிரின் இயல்புகளுள் இது பொதுவியல்பின் பாற்படும்.[55]

உலகு : சைவசித்தாந்திகள் உலகு தொடர்பான செய்தி களைப் பாசம் என்னும் பொதுச் சொல்லால் குறிப்பர் பாசம் என்னும் சொல் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் குறிக்கும். இது விரியால் ஐந்தாகும். அவை யாவன ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பனவாம். இவற்றுள் ஆணவத்தின் இயல்பினை உரை யாசிரியர்கள் குறித்துள்ளனர்.

ஆணவம் என்பது உயிருக்கு அறியாமையைச் செய்வது. அறியாமையாவது உயிரின் அறிவாற்றலை மறைப்பதாகும். அறிவாற்றல் மறைக்கப்பெறுவதாகிய இக்குற்றம் உயிர் என்று உண்டோ அன்றே உண்டானது ஆதலின் இதனைச் சகச மலம் என்பர்.[56]

உயிர், அதனைப் பற்றியிருக்கும் ஆணவ மலத்தின் இயல் பினைச் சுவாமிகள் நம்பியாரூரர் அருட் செயலைக் கூறும் போக்கில் "மூலமலமெனுமோர் வெங்கரவு"[57] என்னும் தொடருக்கு விளக்கம் தரும் நிலையில் எடுத்துரைக்கிறார்; மேலும் திருநாவுக்கரசர் திருத்தொண்டினைப் போற்றும் நிலை யில் திருமறைக் காட்டில் திருக்கதவம் திறந்ததைக் குறிப்பிடும் போது,

"வாயிலின் ஆணவம் ஆகும் கபாடமும் மன்திறந்து" என்னும் தொடரை விளக்கும் முறையில் ஆணவத்தின் இயல் பினை எடுத்துரைத்துள்ளார்.[58]

இதனைப் புன்னைவனநாதன்,

> ஆணவமலம் ஆகந்துகம் அன்றிச் சகசமாய் மற்றைக் கன்மமாயை என்னும் இருமலங்கட்கு மூலமாய் அநாதி பந்தமாயுள்ளது என்பார், மூலமலம் என்றும்

என்று கூறுவதன் வாயிலாக அறியலாம்.[59]

தம்பிரான் ஆணவத்தை விளக்க,

> உயிர் எங்குமிருப்பதாகலின் ஆன்மா எனப்பெயர் பெற்றதாக, அவ்வாறு எங்குமிருக்கும் உயிரை அணுத் தன்மை படுமாறு செய்தலின் மலம் 'ஆணவம்' என்னும் பெயர்த்தாயிற்று

என்று உரை வகுத்துள்ளார்.[60]

வை. இரத்தினசபாபதி ஆணவத்தின் இயல்பினை,

> மூலமலம் என்பது ஆணவம். இது உயிர்களைப் பற்றி யிருப்பதும் எந்நாள் தொட்டு? என்று வினவினால் பதில் தெரியாது. காலவரையறையில்லை. உயிரை அநாதி காலந்தொட்டு இது பற்றியிருக்கிறது.

என்று குறிப்பிட்டுள்ளார்.[61]

மேற்கண்டவற்றின் வாயிலாக உரையாசிரியர்கள் அனைவரும் ஆணவமலத்தினை விளக்கிச் செல்வதை அறிய முடிகிறது.

பற்று : ஆணவத்தின் ஒரு கூறு பற்று. இது அகப்பற்று, புறப்பற்று என இருவகைப்படும். அகப்பற்று என்பது 'யான்' என்னும் நிலையில் பிறப்பது. எனவே உணர்வின் அடிப்படையில் அகப்பற்றும், பொருள்களின் இயல்பில் புறப்பற்றும் பிறப்பன என்பதை அறிய முடிகிறது.

நால்வர் நான்மணிமாலை ஏழாம் பாடல் சுந்தரர் புகழ் பாடுகிறது. சுந்தரரைச் சிவப்பிரகாசர்

'துறந்த முனிவர் தொழும் பரவை துணைவா' எனப் போற்றுகிறார். இத்தொடரில் அமைந்துள்ள துறந்த என்னும் சொல்லுக்குச் சுவாமிகள்,

> துறத்தலாவது: தானல்லாத உடம்பை யானென்னும் அகப்பற்றையும், தன்னோடியையபில்லாத பொருளை எனதென்னும் புறப்பற்றையும் ஆசிரியரருளிய வாற்றானும் அரிய யோகப் பயிற்சியானும் யான் என தன்மை தெளிந்து விடுத்தல்

என்று பற்றினைக் குறித்து விளக்கம் அளித்ததுடன் அதனை நீக்கும் வழியினையும் எடுத்துரைத்துள்ளார்.[62]

புன்னைவனநாதன் இதனை,

> யான் என்னும் அகப்பற்றையும் தன்னோடு இயைபு இல்லாத பொருளை எனது என்னும் புறப்பற்றையும் ஆசிரியர் அருளியவாற்றானும் அரிய யோகப் பயிற்சியானும் யான் என தன்மை தெளிந்து விடுத்தல் துறவு ஆகும்.

என்று கூறுவதன் வழி அறியலாம்.[63]

ஏனைய உரையாசிரியர்களான தம்பிரான், வை. இரத்தின சபாபதி ஆகியோர் தம் உரையில் இதனைக் குறிப்பிடவில்லை.

மேற்கண்டவற்றின் வாயிலாகச் சைவசித்தாந்தம் குறிப்பிடும் அகப்பற்று, புறப்பற்று பற்றிய தத்துவச் செய்தியை அறிய முடிகிறது.

**இறை :** சைவசித்தாந்தம், சிவம் சத்தி என்னும் இரண்டு நிலைகளில் இறைக்கோட்பாட்டை எடுத்துரைக்கிறது.

**சிவம் :** சைவசித்தாந்திகள் கூறும் மூன்று பொருள்களுள் இறைவனாகிய சிவன் முதற்பொருள். இம்முதற்பொருள் சிவம் அனைத்து உயிர்களையும் படைத்தல் முதலாகிய தொழில் களைச் செய்து அருள் புரிந்துவருகிறார். இறைவன், படைத்தல் முதலாகிய ஐந்தொழில்களைச் செய்வது உயிரின் மீது கொண்ட பேரருள் என்பது சைவ சித்தாந்தம்.

அனைத்து உயிர்களுக்கும் அருள் புரியும் சிவன் மங்கலக் குணத்தன் என்பதும், மங்கலமாவது நன்மை என்பதும், நன்மையாவது வீடு பேறு என்று பொருள்படுமாகலின் வீடுபேற்றைத் தருபவன் சிவபெருமான் என்பது சைவசித்தாந்தத்தின் முடிபு.[64]

சிவப்பிரகாசர், சுந்தரரின் புகழைப் போற்றும் முறையில் அமைத்த பாடலுக்கு விருத்தியுரை எழுதும் சுவாமிகள் சிவ பெருமானைத் தந்தையாக அமைத்துக் காட்டித் தத்துவக் கொள்கைக்கு விளக்கம் தந்துள்ளார்,[65]

இவ்விளக்கத்தைப் புன்னைவனநாதன்,

> தந்தையார் போலாது சிவம் எல்லா ஆன்மாக்களுக்கும் தனு கரண புவன போகங்களைத் தந்து உண்ணின்று

> ணர்த்தி உதவி நிற்கும் தனித் தந்தையே என்பார், சிவன் எனும் ஓர் தந்தை என்றும்,

என்று கூறுவதால் அறியலாம்.[66]

தம்பிரான்,

> சிவமெனும் ஓர் தந்தை என்றது அவ்வுடற்குக் காரண மாய் வரும் தந்தையார் போலாது, சிவம் எல்லா உயிர் களுக்கும் உடல் மன உலக இன்பங்களைத் தந்து உண்ணின் றுணர்த்தி உபசரித்து நிற்கும் தனித் தந்தை என்றபடி,

என்று கூறி சிவனைத் தந்தையாக விளக்கியுள்ளதை அறிய முடிகிறது.[67]

இதனை வை. இரத்தினசபாபதி,

> அருளாகிய தாய் குழந்தையாகிய சிவத்துடன் சேர்க் கிறாள் நம்பியாரூரராம் அருட் சக்தி (தாய்) பனவக் குலமகனை அவன் தந்தையொடு (சிவன்) சேர்க்கிறார். தந்தை ஒருவரே ஆதலின் ஓர் தந்தை என்றார். ஒப்பற்ற தன்மை உடையவராதலினாலும் உடல் தந்தையர்களைக் காட்டிலும் உயிரின் தந்தையாக இருக்கின்றார். ஆகையினால் சிவம் எனும் ஓர் தந்தை யுடன் என்றார்.

என்று கூறுவதன் மூலம் அறியலாம்.[68]

இதனைப் படைத்தல் முதலாகிய தொழில்களால் புரந்து வீடுபேற்றை அருளும் சிவபெருமானை, உயிர்களின் தந்தை என்று கொள்ளும் சைவ சித்தாந்தக் கொள்கையும் அரண் செய்யும்.[69]

இதன் வாயிலாக இறையாகிய சிவனை உரையாசிரியர்கள் நால்வரும் குறித்துச் சென்றுள்ளதை அறிய முடிகிறது.

**சத்தி :** பரம்பொருளாகிய சிவபெருமானின் பிரிக்க முடியாத ஆற்றலாக விளங்குபவள் உயிர்களின் தாயாகிய சத்தி என்பது சைவ சித்தாந்தம். சைவசித்தாந்திகள் சிவம் என்பது அறிவு மயமாய் இருப்பதும் எனவும், சத்தி என்பது செயல் தன்மையாக

நிற்பது எனவும் கூறுவர். மேலும் சிவனும் சத்தியும் ஆகிய இரு பொருள்கள் ஒன்றேயாய் நிற்கும் ஆதலின் பொருளான் இரண்டாயும் பண்பால் ஒன்றாயும் விளங்கும் என்பர். இத்தகைய இயல்பிற்குக் கதிரவனும் ஒளியும் என உவமையும் கூறுவர்.[70]

சிவம், சத்தி என்னும் இரண்டும் ஒன்றோடொன்று பிரிக்க முடியாது விளங்கும் தன்மையினை, சுவாமிகள் தாதான்மிய சம்பந்தம் எனக்கூறி, தாதான்மியமாவது

> பொருளான் ஒன்றேயாகியும் ஒருவாற்றாற் பேதமாதற் குரிமையுடைமை

என விளக்கம் எழுதுகிறார்.[71]

புன்னைவனநாதன் இதனை,

> புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையில் சத்தி எனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கும் நிலையில் சிவம் எனவும், ஒளியும் ஞாயிறும் போல, முதல்வன் ஒருவனே அது வதுவாய் ஒன்றித்து நிற்குந் தொடர்பால் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும் உரிமை தோன்றத் தோளிடத்தவனே வாச்சியம் என்றார்

என்று அமைத்துள்ளார்.[72]

தம்பிரானும், வை. இரத்தினசபாபதியும் சிவனும் சத்தியும் ஒன்றுபடும் நிலையினை எடுத்துரைத்துள்ளனர்.[73]

மேற்கண்ட நிலைகளில் சத்தியினை உரையாசிரியர்கள் நால்வரும் தம் உரையில் குறித்துள்ளதை அறிய முடிகிறது.

ஞானம் : ஞானம் என்னும் சொல் அறிவு என்று பொருள் படும். இது இறைவனை அடையப் பயன்படுகிறது. இவ் அறிவு நூல்களான் அறியும் அறிவும், அனுபவத்தால் இறைவனை அறியும் அறிவும் என இரு வகைப்படும். இவற்றை முறையே அபரஞானம், பரஞானம் என்பர். இவ் இருவகை ஞானங்கள் பெறும் முறையினைச் சுவாமிகள் "ஞானப்பான்" என்னும் தொடருக்கு எழுதும் விரிவுரையுள் விளக்குகிறார்.

இவ்விளக்கத்தைப் புன்னைவனநாதன், வை. இரத்தின சபாபதி ஆகியோர் தம் உரையில் குறித்துள்ளனர்.[74] மற்றைய உரையாசிரியரான தம்பிரான் இதனைக் குறிக்கவில்லை.

சைவ சித்தாந்தத்தின் முப்பொருள்களின் அடிப்படையில் அமையும் அறிவினைப் பசுஞானம், பாசஞானம், பதிஞானம் என வகைப்படுத்தலாம்.

பசுஞானம், உயிர், தன்னைக் கருவி கரணங்களின் வேறாக உணர்ந்து, அவைகளுக்குத் தானே முதல்வனாக எண்ணி, தன்னையே பதிப்பொருளாக மயங்கி அறியும். இங்ஙனம் அறியும் அறிவு பசுஞானம் அல்லது பசு அறிவு எனப் பெயர் பெறும்.[75]

பாச ஞானமாவது உயிர் புறக் கருவிகளையும், அகக் கருவிகளையும் வாயிலாகக் கொண்டுப் புறப்பொருள்களை அறியுமிடத்துத் தன்னை அறியாது நிற்கும். இந்நிலையில் தனக்கு வேறாய அப்பொருள்களைத் தானாகி மயங்கி அறிவ தாகும். சுருங்கச் சொன்னால் பாசத்தைப் பற்றிநின்று பாசத்தை அறியும் அறிவு பாச அறிவு என்பது பெறப் படுகிறது.[76]

உயிர், தன் அக, புறக் கருவிகளினின்றும் வேறாய் இருப்பதை உணர, தனக்குள் விளங்கும் அறிவு நிலையினைச் சூழ்ந்து நோக்குங்கால் தன்னுள் — அறிவுக்கறிவாய் நிற்கும் பதிப் பொருளின் அறிவு புலனாவதை அறியும். இதுவே பதி ஞானம் எனப்படுவது.[77]

சிவப்பிரகாசர்,

தாயிலியாகும் சிவபெருமான்

என்னும் பாடலில் திருநாவுக்கரசரின் திருத்தொண்டினைப் போற்றிப் பரவுகிறார். திருநாவுக்கரசர் புகழ்பாடும் இப்பாடலில் பதிஞானம் பற்றி எழுதிச் சென்றுள்ளார் சுவாமிகள்.[78]

இவ்விளக்கத்தை ஏனைய உரையாசிரியர்களான புன்னை வனநாதன், தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோரும் குறித்துச் சென்றுள்ளனர்.

முத்தி : சைவ சித்தாந்தத்தில் முத்தி என்பது வீடுபேறு என்று பொருள்படும். வீடுபேற்றைச் சிவப்பேறு எனவும் குறிப்பர். இம் முத்திநிலை பதமுத்தி, பரமுத்தி என இருவகைப் படும்.

உலகில் பிறந்த உயிர், திருவருளால் உருத்திரர் உலகை அடைதல் பத முத்தி எனவும், சிவனது அருட்குணமாகிய சிவானந்தத்தால் திளைத்து அவனது திருவடி நிழலை அடைந்து நீங்காதிருத்தலே பரமுத்தி எனவும் பெயர் பெறும்.[79]

கொள்ளை கொள்ள வீடுதவி

என்னும் பாடலின் வாயிலாகச் சிவப்பிரகாசர் திருஞான சம்பந்தரைப் புகழ்ந்துரைக்கிறார். இப்பாடலின் விருத்தி யுரையில் திருஞானசம்பந்தர் பெற்றது பரமுத்தி என்பதை விளக்கும் முறையில் முத்தியின் இயல்பினைத் தம் உரையுள் அமைத்துத் தத்துவ விளக்கம் தந்துள்ளார் சுவாமிகள்.[80]

இந்த முத்தி விளக்கத்தை ஏனைய உரையாசிரியர்களான புன்னைவனநாதன், தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகி யோரும் பயன்படுத்தியுள்ளதை அவர்களின் உரைவழி அறிய முடிகிறது.

மேற்கண்ட நிலைகளில் தத்துவக் கூறுகளில் ஒன்றாகிய தத்துவ நோக்கு விளக்கப் பெற்றது. தத்துவ நோக்கானது நூலாசிரியர் கூறும் தத்துவம் என்றும் உரையாசிரியர் கூறும் தத்துவம் என்றும் இரு நிலைகளில் உரைக்கப் பெற்றது. நூலாசிரியர் கூறும் தத்துவம் 11, 14-ஆம் பாடல்களில் அமைந் துள்ளன. எஞ்சியன உரையினூடே அமைந்துள்ள தத்துவம் என்றும் கொள்ளலாம். இந்நிலையில் உரையாசிரியர்களின் தத்துவ நோக்கினை அறிய முடிகிறது.

## தொகுப்புரை

இவ்வியலில் கூறப்பட்ட செய்திகள் தொகுத்து உரைக்கப் பெறுகின்றன.

1. உரையாசிரியர்கள் தத்துவ நூல்களிலிருந்து மேற் கோள்களை எடுத்தாண்டு தம்முடையத் தத்துவ நூற் புலமையை வெளிப்படுத்துகின்றனர்.

2. மேற்கோளாட்சிகள் சொற்பொருள் விளக்கத்திற்கும், இலக்கண விளக்கத்திற்கும், தத்துவ விளக்கத்திற்கும் பயன் படுத்தப்பட்டுள்ளன.

2.1. சொற்பொருள் விளக்கத்திற்குச் சுவாமிகள், தம்பிரான் ஆகியோர் மேற்கோள்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

2.2. தத்துவ நூல்களை இலக்கண விளக்கத்திற்குச் சுவாமிகள் மட்டும் கையாண்டுள்ளார்.

2.3. தத்துவ விளக்கத்திற்கு நான்கு உரையாசிரியர்களும் மேற்கோள்களைக் கையாண்டுள்ளனர் எனினும் சுவாமிகள் மிகுதியும் பயன்படுத்தியுள்ளார்.

3. உரையாசிரியர்களின் தத்துவ நோக்கினை இருவகைப் படுத்தலாம். அவை :

3.1. சிவப்பிரகாசர் பாடலில் அமைந்துள்ள தத்துவத்தை விளக்கல்.

3.2. பாடற் பொருள் விளக்கத்தினூடே தத்துவத்தை அமைத்துக் காட்டல் என்பன.

3.3. தத்துவச் செய்திகள் 1. அளவைகள், 2. உயிர், 3. உலகு, 4. இறை என நான்கு நிலைகளில் விளக்கப் பட்டன.

3.3.1. அளவைகளில் ஆகம அளவை, காட்சியளவை இவ்விரண்டும் உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன.

3.3.2. உயிரின் இயல்பைச் சிவப்பிரகாசரின் பாடல் துணைக்கொண்டு உரையாசிரியர்கள் விளக்கமளித்துள்ளனர்.

3.3.3. உலகு, பாசத்துடன் தொடர்புடையது என்பதை உரையாசிரியர்கள் விளக்கியுள்ளனர்.

3.3.4. இறை சிவம், சத்தி என இரண்டு நிலைகளில் அறிவு செயல் ஆகியவற்றை நிகழ்த்துகிறது என்பதை அறிய முடிகிறது.

4. ஞானத்தின் படிநிலைகளை உரையாசிரியர்களின் வாயிலாக அறிய முடிகிறது.

5. சைவ சித்தாந்த முத்திநிலை உரையாசிரியர்களின் விளக்கத்தின் வழித் தெளிவடைகிறது.

## குறிப்புகள்

1. ப. குணசேகர், கண்ணதாசன் கவிநயம், (சென்
வானதி பதிப்பகம், 1975), ப

2. அ — 11:1;24:1;4:1.

3.

 3:1. அ — 24:1;30:1.

 3:2. ஆ — 24:1;30:1.

4. இ — 30:1.

5. அ — 39:1;40:1.

6. இ — 40:1.

7.

 7:1. அ — 40:1.
 7:2. இ — 40:1.

8. அ — காப்பு: 1;2:1;4:3;11:2;14:2;20:1;40:3;38:1.

9. ஆ — 14:1;38:1,40:1;2:1.

10. இ — 38:1;40:3;22:1.

11. அ — காப்பு:1

12. அ — 5:1;8:1;14:2;31:1;38:1;40:2.

13. ஆ — 14:1;38:1;40:1.

14. இ — 5:1;38:1;40:2.

15. அ — 14:2.

16.

 16:1. அ — 2:1.

 16:2. ஆ — 2:1.

17. அ — 11:1.

18. அ — 20:1;34:1.

19. ஆ — 34:1.

20. அ — காப்பு:2.

21. அ — 5:1;12:1;15:1;32:1;39:1;40:1.

22. ஆ — 12:1;39:1;40:1.

23. இ — 5:1;39:1;40:1.

24. ஈ — 5:1.

25. அ — 7:1.

26. அ — 15:1.

27.

 27:1. அ -- 37:1;40:1.
 27:2. இ — 37:1;40:1.

28. அ — காப்பு:1.

29. அ — 23:3.

30.

 30:1. அ — 40:1.
 30:2. ஆ — 40:1.
 30:3. இ — 40:1.

31. அ — 31:1.

32. இ — 5:1.

33. அ — 14:1.

34. அ — 11:1;14:1;24:1.

35. அ — 24:1;30:1.

36. அ — 39:1;40:1.

37. அ — 40:1.

38. அ — பார்க்க குறிப்பு எண். 8.

39. அ — காப்பு:1.

40. அ — 5:1;8:1;14:1;38:1;40:2.

41. அ — பார்க்க குறிப்பு எண்கள் 15;16;17;18;20.

42. அ — பார்க்க குறிப்பு எண்கள் 21;25;26;27:1.

43. அ — பார்க்க குறிப்பு எண்கள் 28;30:1;29.
44. ஆ — பார்க்க குறிப்பு எண்கள் 3.2;13;9.
45. ஆ — பார்க்க குறிப்பு எண்கள் 16.2;19;30.2;22.
46. இ — பார்க்க குறிப்பு எண்கள் 4;6;7.2:30.3.
47. இ — பார்க்க குறிப்பு எண்கள் 27.2.
48. இ — பார்க்க குறிப்பு எண்கள் 14;23.
49. இ — பார்க்க குறிப்பு எண் 10.
50. ஈ — பார்க்க குறிப்பு எண் 24.
51. சி. அருணைவடிவேல், சித்தாந்த வினாவிடை, (தருமபுரம், 1975), ப. 18.
52. சி. அருணைவடிவேல். மேற்படிநூல், ப. 19.
53. சி. அருணைவடிவேல், மேற்படிநூல், ப. 20.
54. அ — ஆ — இ — ஈ — பா.32. உரை.
55. அ — ஆ—இ — ஈ.—பா. 9. உரை.
56. சி. அருணைவடிவேல், சித்தாந்த வினாவிடை, ப.233.
57. சிவப்பிரகாசர், நால்வர் நான்மணிமாலை, பாடல். 11.
58. அ — பா. 14. உரை.
59. ஆ — பா. 11. உரை.
60. இ — பா. 14. உரை.
61. ஈ — பா. 11. உரை.
62. அ — பா. 7. உரை.
63. ஆ — பா. 7. உரை.
64. சி. அருணைவடிவேல், சித்தாந்தத் தெளிவியல், பக். 98–100.
65 அ — பா. 11. உரை.
66. ஆ — பா. 11. உரை.
67. இ — பா. 11. உரை.
68. ஈ — பா. 11. உரை.

69. அருணந்தி சிவாசாரியார், சிவஞான சித்தியார், சூத். 8.
70. க. விநாயகம், சிவஞானமுனிவர் உரைத்திறன், (மயிலம்: ஸ்ரீ அன்னை நூலகம், 1991) பக். 182-183.
71. அ — பா. 8. உரை.
72. ஆ — பா. 8. உரை.
73. இ — ஈ — பா. 8. உரை.
74. அ — ஆ — ஈ — பா. 1. உரை.
75. சி. அருணைவடிவேல், சித்தாந்த வினாவிடை, ப. 164
76. சி. அருணைவடிவேல், மேற்படிநூல், ப. 164.
77. சி. அருணைவடிவேல், மேற்படிநூல், ப. 165.
78. அ — ஆ — இ — ஈ — பா. 14 உரை.
79. சி. அருணைவடிவேல், சித்தாந்த தெளிவியல், ப.238.
80. அ — ஆ — இ — — 21.

# முடிவுரை

"நால்வர் நான்மணிமாலை: உரை ஆய்வு" என்னும் இவ் ஆய்வில் விளக்கப்பட்ட கருத்துகளின் முடிவுகள் இங்குத் தொகுத்துரைக்கப்படுகின்றன.

நால்வர் நான்மணி மாலையின் நூலாசிரியர் சிவப்பிரகாசர். சிவப்பிரகாசர் என்னும் பெயரில் தமிழ்ப் புலவர்கள் பலர் இருந்துள்ளதையும், அவர்களுள் துறை மங்கலம் சிவப் பிரகாசர் இந்நூலினை இயற்றியுள்ளார் என்பதையும் அறிய முடிகிறது. அவரது வரலாற்றின் அடிப்படையில் இவர் 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் எனத் தெளியலாம்.

உரையாசிரியர்கள் இலக்கிய மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளனர். சங்க இலக்கியத்தை வை. இரத்தினசபாபதி மட்டும் எடுத்தாண்டுள்ளார். காப்பியத்தைத் தம்பிரான் மட்டும் கையாண்டுள்ளார். நீதி இலக்கியம், புராணங்கள், சிற்றிலக் கியங்கள் ஆகியவற்றை நான்கு உரையாசிரியர்களும் எடுத் தாண்டுள்ளனர். மேற்கொள்களை நூலின் சிறப்புக் கூறவும், பெயர், இலக்கணம், சொற்பொருள், தத்துவம் ஆகியவற்றின் விளக்கத்திற்காகவும், புராணக் கதை கூறவும் எடுத்தாண் டுள்ளனர் எனத் தெளியலாம்.

உரையாசிரியர்கள் சொற்பொருள் உரைத்துள்ளதை 1. அகராதிப் பொருள், 2. இடம்நோக்கிய பொருள், 3. கலைச் சொல் விளக்கம், 4. உவமை காட்டிப் பொருள் கூறல், 5. தொகை கூறிப் பொருளுரைத்தல், 6. காரணங் கூறிப் பொருள் கூறல், 7. சான்று காட்டிப் பொருள் கூறல், 8. இலக்கணம் கூறிப் பொருள் கூறல், 9. பிரித்துப் பொருள் கூறல், 10. திசைச்சொல் கூறல் என்னும் பத்து நிலைகளில் அறியமுடிகிறது.

உரையாசிரியர்களின் நடை நலனைப் பொதுவாக 1. பாடம் பகர் நடை, 2. வினாவிடை நடை, 3. விவாத நடை,

4. விளக்க நடை, 5. அந்தாதி நடை, 6. வியங்கோளாட்சி, 7. ஒன்று பட்ட நடை என்னும் ஏழு நிலைகளில் பகுக்கலாம். இவற்றில் விளக்க நடையை நான்கு உரையாசிரியர்களும் மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர். வினாவிடை, வியங் கோளாட்சி ஆகிய நடைகளைச் சுவாமிகள் மிகுதியும் கையாண்டுள்ளார். இதனைப் புன்னைவனநாதனும் பின் பற்றியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. உரைகளின் விளக்கத்திற்கு உவமைகளை உரையாசிரியர்கள் கையாண் டுள்ளதை அறியமுடிகிறது.

உரையாசிரியர்களின் உரைப்புலமையை ஏற்புரை, மறுப் புரை என்னும் இரு நிலைகளில் காணமுடிகிறது. ஏற்புரையை நான்கு உரையாசிரியர்களும் கையாண்டு முன்னோரைப் போற்றுகின்றனர். எனினும் தவறுகண்ட இடங்களில் மறுப் புரை கூறத் தவறவில்லை என்பதைச் சுவாமிகள் உரையின் வழி அறியமுடிகிறது.

உரைகளின் இடையில் புராண வரலாறுகள் எழுதுவதைத் தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் உரைகளில் காண முடிகிறது. இவர்களுள் புராண வரலாறுகளைத் தம்பிரான் மிகுதியாக எழுதியுள்ளதை அறியமுடிகிறது.

பாடவேறுபாடு காட்டுவதன் வாயிலாக உரையாசிரியர் களின் நுண்ணறிவு வெளிப்படும். அவ்வகையில் சுவாமிகள் இதனைக் கையாண்டுள்ளதை அறியமுடிகிறது.

இலக்கணக் கூறுகள், உரைகளில் காணக்கிடக்கின்றன. இலக்கண நூல்கள் தொல்காப்பியம், நன்னூல், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக்காரிகை ஆகியவற்றை உரையாசிரியர்கள் எடுத்தாண்டுள்ளனர். இந்நூல்கள் இலக்கணம், சொற்பொருள், தத்துவம் ஆகியவற்றின் விளக்கத்திற்காகப் பயன்படுத்தபட்டுள்ளமை தெளிவு. இலக்கணம் கூறுவதற்கு வடமொழியினைச் சுவாமிகள், தம்பி ரான் ஆகியோர் பயன்படுத்தியுள்ளனர்.

தொல்காப்பியத்தை நான்கு உரையாசிரியர்களும் கையாண்டிருப்பினும் மிகுதியான நூற்பாக்களைத் தம்பிரான் கையாண்டிருப்பது குறிக்கத்தக்கது. யாப்பருங்கலக் காரி கையை இரத்தினசபாபதியைத் தவிர மற்ற மூவரும் பயன் படுத்தியுள்ளனர். இந்நூலினைப் பயன்படுத்துவதில் சுவாமி

களைப் புன்னைவனநாதன் பின்பற்றியுள்ளமை தெளிவாகிறது. நன்னூல், புறப் பொருள் வெண்பாமாலை நூல்களை முறையே தம்பிரான், வை. இரத்தினசபாபதி ஆகியோர் பயன்படுத்தியுள்ளமை ஈண்டுக் குறிக்கத்தக்கது.

தத்துவக் கருத்துகளை நிறுவ, தத்துவ மேற்கோள்களை நான்கு உரையாசிரியர்களும் கையாண்டுள்ளனர். மிகுதியான தத்துவ நூல்களிலிருந்து மிகுதியான மேற்கோள்களைக் கையாண்டவர் சுவாமிகள் என்றும், ஒரு நூலினை எடுத்தாண்டவர் வை. இரத்தினசபாபதி என்றும் அறியமுடிகிறது. ஆய்விற்கு உள்பட்ட நான்கு உரையாசிரியர்களில் முதல் மூன்று உரையாசிரியர்கள் மற்றைய தத்துவ நூல்களைக் காட்டிலும் சிவஞான சித்தியாரை அதிகமாக எடுத்தாண்டுள்ளதை அறியமுடிகிறது. தத்துவ நூல்களை உரையாசிரியர்கள் சொற்பொருள், இலக்கணம், தத்துவம் ஆகியவற்றின் விளக்கத்திற்காகப் பயன்படுத்தியுள்ளனர்.

உரையாசியர்களின் தத்துவ நோக்கம் இருவகையாக அமைகிறது. 1. சிவப்பிரகாசர் பாடலில் அமைந்துள்ள தத்துவத்தை விளக்கல், 2. பாடற் பொருள் விளக்கத்தினூடே தத்துவத்தை அமைத்துக் காட்டல் என்பன. உரையாசிரியர்களின் தத்துவ நோக்கம் அளவைகள், உயிர், உலகு, இறை போன்றவற்றை விளக்கப்பயன்படுகின்றன என்பது தெளிவு.

ஆய்விற்கு எடுத்துக்கொண்ட நான்கு உரையாசிரியர்களின் உரைச் சிறப்பினைத் தனியாகவும், ஒப்பிட்டும் பார்ப்பதன் வாயிலாகவும் பின்வரும் முடிபுகளைப் பெற முடிகிறது. கீழ்க் கண்டவற்றை மதிப்பீட்டு முடிபுகளாகக் கருதலாம்.

உரையாசிரியர்களின் உரைச்சிறப்பினைத் தனிநிலையில் நோக்குகையில் புன்னைவனநாதன் செய்யுட்களைப் பிரித்துப் பதிப்பித்தும், சுவாமிகள் எடுத்தாண்ட வடசொற்களைத் தமிழ்ப் படுத்தியும் உரை வகுத்துள்ளார்.

தம்பிரான், இலக்கிய இலக்கண, தத்துவ நூல்களை ஆள்வதில் சுவாமிகளுக்கு அடுத்த நிலையில் இடம்பெறுகிறார். இவரது உரையை, பதவுரையை முன்னிலைப்படுத்தும் விருத்தியுரை எனலாம். இதனால் எளிமையும் தெளிவும் உரையில் சிறப்புற அமைகின்றன. இவர் உரைவிளக்கத்திற்கு வடமொழியினைப் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகிறது. மேலும்

மூலநூல் பாடல்கள் உணர்த்தும் புராண வரலாறுகளைத் தனியே தலைப்பிட்டு எழுதும் முறையை இவர் உரையில்தான் முதலில் காணமுடிகிறது.

வை. இரத்தினசபாபதி, உரை நூலில் காணப்பெறும் ஆராய்ச்சி முன்னுரை குறிக்கத்தக்க சிறப்புக் கூறாகும். உலகியல் செய்திகளுடன் சார்த்தி உரையெழுதிச் சென்றுள்ள பாங்கும் குறிக்கத்தக்கது. உரையில் தத்துவ கருத்துகள் வலிந்து கூறுவது போன்று இருப்பினும் நூலோடு ஒத்துச் செல்வதை அறியமுடிகிறது. இவர் தம்பிரானைப் போன்றே புராண வரலாறுகளைத் தலைப்பின் கீழ் அமைத்துள்ளார்.

சுவாமிகளின் உரையை நோக்கினால் இலக்கிய, இலக்கண, தத்துவ நூல்களை மிகுதியாக ஆள்வதை உணரமுடிகிறது. இவர் பழைய உரையாசிரியர்களின் நடையினைப் பின்பற்றி உரையினை முழுமைத்தன்மை உடையதாக அமைத்துள்ளார் எனலாம். ஒட்டு மொத்தமாக நோக்குகையில் இவர் உரை, கிடைக்கப்பெறும் உரைகளில் முதல் உரையாக அமைந்திருப்பினும் பிற உரைகள் அமைவதற்கு அடித்தளமாக அமைந்துள்ளது எனலாம். உரைக் கூறுகளில் பலவற்றைக் கொண்டிலங்கும் இவரது உரை விளக்கத்தில் வடமொழிப் பயிற்சியும், ஆய்ந்து அரும்பொருள் உரைக்கும் திறனும் பரவலாகக் காணப் பெறுகின்றன.

உரை ஆய்வுகளில் இதுபோன்ற ஒப்பீட்டு முறையால் உரையாசிரியர்களின் தனித்திறன் வெளிப்படுகின்றது. மேலும் இதுபோன்ற உரையாசிரியர்களின் ஒப்பீட்டு ஆய்வு உரைகள் தமிழ் இலக்கிய, இலக்கண, தத்துவ நூல்கள் அனைத்திற்கும் எழுந்தால் சிறந்த உரைகளை அடையாளம் காண உரிய வழியாக அமையும். இதுபோன்ற உரை ஆய்வுகள் மேலும் தனித் தனியே தனி நூல்களுக்கு நடைபெற வாய்ப்பு மிகுதியும் உண்டு.

# துணைநூற்பட்டியல்


முதன்மைச் சான்றுகள்

சிவப்பிரகாசர், நால்வர் நான்மணிமாலை, சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள் (உ.ஆ.), மறுபதிப்பு சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1967.

————————, நால்வர் நான்மணிமாலை, பு. சி. புன்னைவனநாத முதலியார் (உ. ஆ,). சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1960.

————————, நால்வர் நான்மணிமாலை, சென்னை: கொ. இராமலிங்கத் தம்பிரான் (உ.ஆ.), சென்னை: பழனியப்பா பிரதர்ஸ், 1966.

————————, நால்வர் நான்மணிமாலை, வை. இரத்தினசபாபதி (உ.ஆ.), சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம் 1984.

துணைச்சான்றுகள்

இலக்கிய நூல்கள்

அப்பாவையர், சிவப்பிரகாச சுவாமிகள் பிள்ளைத் தமிழ், சென்னை: மஹாலட்சுமி அச்சுக்கூடம், சோபாகிருது ஆண்டு

சிவஞான முனிவர், காஞ்சிப்புராணம், சி. அருணை வடிவேல் முதலியார் (ப. ஆ.),

காஞ்சிபுரம்: மெய்கண்டார் கழகம் 1937.

சிவப்பிரகாசர், சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, சாமிநாதப் பண்டிதர் (ப.ஆ.), சென்னை: சைவ வித்யா நுபாலன யந்திரசாலை, 1916.

சுந்தரர், தேவாரம், (7ஆம் திருமுறை) மூன்றாம் பதிப்பு, திருப்பனந்தாள்: காசி மடம், 1971.

சேக்கிழார், பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணம், திரு.வி. கலியாண சுந்தர முதலியார் (ப.ஆ.), சென்னை: முருகவேள் புத்தக சாலை, 1934.

திருஞானசம்பந்தர், தேவாரம், திருப்பனந்தாள்: காசி மடம், 1971.

திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி மூலமும் நச்சி னார்க்கினியருரையும், உ. வே. சாமிநாதையர் (ப. ஆ.), சென்னை: உ. வே. சாமிநாதையர் நூல் நிலை யம், 1969.

திருநாவுக்கரசர், தேவாரம், திருப்பனந்தாள்: காசி மடம், 1976.

திருமூலர், திருமந்திரம், ச. தண்டபாணி தேசிகர் (ப. ஆ.), திருவாடுதுறை: திருவாடுதுறை ஆதினம், 1981.

நக்கீரர், திருமுருகாற்றுப்படை, சொல் லடைவு, பொருளடைவு, திருநெல் வேலி: சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம், 1960.

மாணிக்கவாசகர், திருவாசகம், திருவாடுதுறை: ஆதினம், 1982.

————————, அகநானூறு, இரண்டாம் பதிப்பு, சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1981.

இலக்கண நூல்கள்

அமிதசாகரர், யாப்பருங்கலக் காரிகை, மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை (ப.ஆ.), சென்னை: பாரி நிலையம், 1968.

தொல்காப்பியர், தொல்காப்பியம் — எழுத்ததிகாரம், இளம்பூரணார் உரை, கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ.), திருப்பனந்தாள்: 1969.

——————, தொல்காப்பியம் — சொல்லதிகாரம், சேனாவரையர் உரை கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ.), திருப், பனந்தாள்: 1966.

பவணந்தி, நன்னூல், வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் (ப.ஆ. உ.ஆ.), இருபத்தொன்றாம் பதிப்பு சென்னை: குவை பப்ளிகேஷன்ஸ், 1976.

தத்துவ நூல்கள்

அருணந்தி சிவாசாரியார், சிவஞானசித்தியார் சுபக்கம், பொ முத்தையபிள்ளை (ப.ஆ., உ.ஆ.), மதுரை: விவேக பானு அச்சியந்திர சாலை, 1914.

உமாபதி தேவநாயனார், திருவருட்பயன், சி. அருணை வடிவேல் முதலியார் (ப. ஆ.), தருமபுரம்: தருமையாதீனம், 1974.

மெய்கண்ட தேவர், சிவஞானபோதம், சிவஞான முனிவர் சிற்றுரை, (சித்தாந்த சாத்திரம், பதினான்கு), சென்னை: சமாசம், 1934.

ஆய்வு நூல்கள்

அரங்கராஜன், இரா., திருவாய்மொழிப் பேருரையாளர் நம்பிள்ளை உரைத்திறன், சென்னை: அமுத நிலையம் லிமிடெட், 1986.

அரவிந்தன், மு. வை., உரையாசிரியர்கள், இரண்டாம் பதிப்பு, சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், 1977.

அருணாசலம், ப., பக்தி இலக்கியம், இரண்டாம் பதிப்பு, சென்னை: பாரி புத்தகப் பண்ணை, 1983.

அருணாசலம், மு., இளம்பூரணர், அண்ணாமலை நகர்: அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1981.

——————, சைவ சமயம், சென்னை: பாரி நிலையம், 1969.

அருணைவடிவேல், சி., சித்தாந்த தெளிவியல், இரண்டாம் பதிப்பு, தருமபுரம்: தருமையாதீனம், 1974.

——————, சித்தாந்த வினாவிடை, தருமபுரம்: தருமையாதீனம், 1975.

——————, முப்பொருள் இயல்பு, சென்னை: சமாசம், 1976.

இராமசாமிப்புலவர், சு.ஆ., தமிழ்ப்புலவர் வரிசைப் பகுதி 10, சென்னை: சைவ சித்தாந்த நூற் பதிப்பு கழகம், 1973.

இராமலிங்கம், மா., புதிய உரை நடை: பண்பும் பயனும், மூன்றாம் பதிப்பு, சென்னை: தமிழ்ப்புத்தகாலயம், 1984.

கமலையா, க.சி., நமது பண்பாடு, சென்னை: தமிழ்ப் புத்தகாலயம், 1973.

கோவிந்தராசன், மு., நற்றமிழ் பயிற்றலின் நோக்கமும் முறையும், நான்காம் பதிப்பு, சென்னை: திருமலைக்குமரன் பதிப்பகம், 1988.

சாந்தா, மா. சு., சிவப்பிரகாசரின் இலக்கிய நூல்கள் ஒரு திறனாய்வு, சென்னை: வித்யா பதிப்பகம், 1983.

சாமிநாதையர், உ.வே., சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும் ஏழாம் பதிப்பு, சென்னை: உ.வே, சாமிநாதையர் நூல்நிலையம், 1978.

சுந்தரமூர்த்தி, இ., நடையியல் அறிமுகம், சென்னை: அன்பு நூலகம், 1978.

__________, பாரதி நடையியல், சென்னை: ஐந்திணைப் பதிப்பகம், 1985.

__________, திருக்குறள் பரிமேலழகர் உரைத் திறன், கோவை: தேன்மொழி நூலகம், 1985.

__________, திருக்குறள் அணிநலம், சென்னை சென்னைப் பல்கலைக்கழகம், 1971.

சுப்பிரமணியபிள்ளை, கா, இலக்கிய வரலாறு இரண்டாம் பாகம், ஆறாம் பதிப்பு, சென்னை: ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், 1970.

சுப்பிரமணியன், ச. வே., அடியார்க்குநல்லார் உரைத்திறன், சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1976.

செயராமன், ந.வீ., சிற்றிலக்கியத் திறனாய்வு, சென்னை: இலக்கியப் பதிப்பகம், 1980.

ஞானமூர்த்தி, தா. ஏ., இலக்கியத் திறனாய்வியல், கோவை: தமிழின்பம், 1980.

தமிழண்ணல் (பு.பெ.), புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ஐந்தாம் பதிப்பு, மதுரை: அன்பு செல்வி பதிப்பகம், 1985.

__________, உரைவிளக்கு, மதுரை: அன்புச் செல்வி பதிப்பக வெளியீடு, 1985.

துரை அரங்கசாமி, மொ. ஆ., தென்றலிலே தேன்மொழி, சென்னை: பொன்முடி நூலகம், 1958.

நீதிவாணன், ஜெ., நடையியல், சிதம்பரம்: மணி வாசகர் பதிப்பகம், 1983.

பால சுப்பிரமணியன், சி., தமிழ் இலக்கிய வரலாறு, பதின் மூன்றாம் பதிப்பு, சென்னை: நறுமலர்ப் பதிப்பகம், 1978.

பிள்ளை, கே. கே., தமிழக வரலாறு மக்களும் பண் பண்பாடும், சென்னை: தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1981.

மணவாளன், அ.அ., அரிஸ்டாடிலின் கவிதை இயல், சென்னை: திறனாய்வு நூலகம் வெளியீடு, 1976.

முகம்மது உசேன், மு.அ., தமிழ் உரைநூல் உரையாசிரியர் நூலடைவு, கும்பகோணம்: அற்புதாபதிப்பகம், 1988.

முத்துச் சண்முகன்., தமிழ் இலக்கியக் கோட்பாடுகள், புதிய பதிப்பு மதுரை : ஸ்ரீ நாரணம் மாள் பதிப்பகம், 1984.

மோகன், இரா., பண்டித மணியின் நடைநயம் மேலைச் சிவபுரி : சன்மார்க்க சபை, 1982.

——————, பாரதி இயல், சிதம்பரம் : மணி வாசகர் நூலகம், 1982.

வரதராசன், மு., தமிழ் இலக்கிய வரலாறு, ஏழாம் பதிப்பு, புது தில்லி : சாகித்திய அக்காதெமி, 1989.

விநாயகமூர்த்தி, ஆ., மூலபாட ஆய்வியல், மதுரை : பாலமுருகன் பதிப்பகம், 1978.

விமலானந்தம், மது, ச., தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் முதல் தொகுதி, சென்னை : ஐந்திணைப் பதிப் பகம், 1987.

விஜயபாரதி, எஸ்., முன்னோர் வளர்த்த தமிழ், சென்னை : பழனியப்பா பிரதர்ஸ், 1969.

ஜெயதேவன், வ., தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு, சென்னை : ஐந்திணைப் பதிப்பகம், 1985.

இதழ்கள், மலர்கள்

தமிழாய்வு, தொகுதி 3, ந. சஞ்சீவி (ப.ஆ.), (சென்னை : சென்னைப் பல்கலைக் கழகம், 1976)

"இஷ்டலிங்க அபிஷேக மாலை" குருபூஜை மலர், மயிலம் : பொம்மபுர ஆதினம், 1965.

கலைக்களஞ்சியம்

கலைக்களஞ்சியம் தொகுதி இரண்டு, சென்னை : தமிழ் வளர்ச்சிக் கழகம், 1955.

———————— நான்கு சென்னை : தமிழ் வளர்ச்சிக் கழகம், 1956

ஆய்வேடு

விநாயகம், க., "சிவஞான முனிவர் உரைத்திறன்" பி.எச்.டி. பட்ட ஆய்வேடு, சென்னை : சென்னைப்பல்கலைக் கழகம், 1987,

ENGLISH

Arunachalam. M., *An Introduction to the History of Tamil Literature*, Tiruchitrambalam, Gandhividyalayam, 1974.

Govindasamy. M., *A Survey of the Sources for the History of Tamil Literature*, Annamalai Nagar : Annamalai University, 1977.

Puranalingampillai, M.S. *Tamil Literature*, Munnir Pallam : The Bibliotheca, 1929.

2, குறிப்புரை

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிக

இயற்றியருளிய

# பிரபந்தத்திரட்டு.

---

# கருணைப்பிரகாசசுவாமிகள்

இயற்றியருளிய

# இட்டலிங்கவகவல்.

---

இவை

சுவாமிநாதபண்டிதரால்

பரிசோதிக்கப்பட்டு

அரும்பதக்குறிப்புரையுடன்

சென்னபட்டணம்

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

இராக்ஷஸ ௵ மார்கழி ௴

1916.

## 3. கருத்துரை

**வெளியீடு எண் 345**

உ

குருபாதம்

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடியருளிய

(சைவ சமயாசாரியர்களாகிய)

# நால்வர் நான்மணி மாலை

பொருள் விளக்கம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுளப்பாங்கின்வண்ணம்

வெளியிடப்பெற்றது




**தருமபுர ஆதீனம்**

1955

கழக வெளியீடு: ௧௨௦௭

உ

திருச்சிற்றம்பலம்

## சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# நால்வர் நான்மணிமாலை



சிதம்பரம் ஈசானியமடம்

## இராமலிங்க சுவாமிகள்

விருத்தியுரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,
திருநெல்வேலி–6. சென்னை–1.
1967

கழக வெளியீடு: ௧௦௨௧

# நால்வர் நான்மணி மாலை



இயற்றியவர்

**துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்**

உரை

கழகப்புலவர்

**பு. சி. புன்னைவனநாத முதலியார்**



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6 சென்னை-1

1960

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# நால்வர் நான்மணிமாலை

சென்னை

கொ. இராமலிங்கத் தம்பிரான்

விருத்தியுரை

பதிப்பாசிரியர்:

திரு. ஐயன்பெருமாள் கோனூர்



பழனியப்பா பிரதர்ஸ்

சென்னை - 14 :: திருச்சி - 2

# நால்வர் நான்மணி மாலை

பேராசிரியர்

டாக்டர் வை. இரத்தினசபாபதி,

எம்.ஏ., பிஎச்.டி

டாக்டர் இராதாகிருஷ்ணன் தத்துவ ஆராய்ச்சி

உயர் ஆய்வு மையம்,

சென்னைப் பல்கலைக்கழகம்



மணிவாசகர் பதிப்பகம்

சிதம்பரம்

# இயல் இரண்டு

பின்னிணைப்பு : 2 — உரைகளின் இயல்புகள்

இலக்கிய மேற்கோள்கள் விளக்க அட்டவணை

| வ.எண். | உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கிய நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| | 1. சங்க இலக்கியம் | | | | |
| 1. | அகநானூறு | ... | ... | ... | 1 (6:1) இ.வி:1. |
| 2. | திருமுருகாற்றுப்படை | ... | ... | ... | 1 (8:1) சொ.வி:1 |
| | 2. காப்பியம் | | | | |
| 1. | சிந்தாமணி | ... | ... | 1 (23:1) சொ.வி:1 | ... |
| | 3. நீதி இலக்கியம் | | | | |
| 1. | திருக்குறள் | 15 (காப்பு:2;4:1;5:1; 6:1;10:1;11:1 15:1;24:1;26:2; 34:1;37:1;39:1; 40:1) நூ.சி.1;இ.வி:6; சொ.வி:3;த.வி:5 | 4 (24:1; 26:2; 37:1) நூ.சி:1; சொ.வி:2; இ.வி.1 | 9 (5:1;22:1; 24:1;26:1; 28:1;34:1; 37:1;39:1; 40:1) சொ.வி:8; இ.வி:1 | 18 (3:1;5:1; 7:2;10:1; 13:1;16:2; 17:1;24:1; 30:3;33:1; 37:4) சொ.வி:4; பு.க 2;த.வி:12 |

| வ.எண். | உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கிய நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| | 4. பக்தி இலக்கியங்கள் | | | | |
| | 4.1. திருமுறைகள் தேவாரம் | | | | |
| 1. | திருஞான சம்பந்தர் முதல்திருமுறை | 3 (25:1;12,1; காப்பு:1;9:1) இ.வி.1;த.வி:3 | 1 (25:1) இ.வி:1 | 2 (9:1;25:1) இ.வி:1;த.வி:1 | ... |
| 2. | ,, இரண்டாம் திருமுறை | 2 (4:1;12:1) சொ.வி:1; த.வி:1. | 1 (12:1) த.வி:1 | 4 (10:1;17:1; 21:1;29:1) த.வி:3;பு.க 1 | ... |
| 3. | மூன்றாம் திருமுறை | — | — (21:2;25:1) | 3 (21:2;25:1) த.வி:1;பு.க.2 | 1 (21:1) பு.க. 1. |
| 4 | திருநாவுக்கரசர் நாலாந் திருமுறை | 4 (22:3;31:1) சொ.வி.1;த.வி.3 | — | 6 (2:1;6:1; 22:4) த.வி:4;பு.க.2 | 4 (காப்பு:1; 22:3) த.வி.4. |
| 5. | ,, ஐந்தாம் திருமுறை | 2 (2:2) த.வி:2 | 1 (2:1) த.வி | 1 (12:1) பு.க:1 | 1 (18:1) சொ.வி:1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6. | திருநாவுக்கரசர் ஆறாம் திருமுறை | 1<br>(9:1)<br>த.வி:1 | — | — | 1<br>(8:1)<br>த.வி:1 |
| 7. | சுந்தரர் ஏழாம் திருமுறை | 3<br>(11:1;31:1;<br>இ.வி:1;த.வி:2 | — | 4<br>(3:1;27:1;<br>த.வி.4. | 2<br>(8:1;29:1)<br>சொ.வி;1:<br>த.வி:1. |
| 8. | மாணிக்கவாசகர் எட்டாம்<br>திருமுறை திருவாசகம் | 14<br>(4:1;9:1;12:1;<br>15:1;20:4;<br>28:4;36:2)<br>இ.வி;1:த.வி:13 | 1<br>12:1)<br>த.வி:1 | 7<br>(20:3;<br>28:4;)<br>சொ.வி:1;<br>த.வி.6 | 3<br>(32:1;36:2)<br>சொ.வி:1<br>த.வி:2 |
| 9. | ,, திருக்கோவையார் | 2<br>(40:2)<br>நூ:சி:1;<br>த.வி:1 | 2<br>(40:2)<br>நூ.சி:1;<br>த.வி:1 | 5<br>(12:1;22:1;<br>(40:3)<br>த.வி:4;பு.க.1 | — |
| 10. | ஒன்பதாம் திருமுறை<br>சேந்தனாரின் திருப்பல்லாண்டு | — | — | — | —<br>(23:1)<br>த.வி:1 |
| 11. | திருமூலரின் திருமந்திரம் பத்தாம்<br>திருமுறை | 9<br>(காப்பு:1;16:1; | 3 | 5<br>30;1;37:1 | 3<br>(காப்பு:1; |

| வ.எண். | உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கிய நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| | | 20:1;29:1; 30:1;32:1; 34:70:11;)39:1; நூ.சி:1;த.வி:8 | (29:1;32:1;3 37:1 நூ.சி.1;த.வி:2 | 39:2;40:1) த.வி:5 | (14:1; 32:1) நூ.சி.1;த.வி.2 |
| | பதினொன்றாம் திருமுறை | | | | |
| 12. | திரு இடை மருதூர் மும்மணிக் கோவை | 3 (4^:2;18:1) த.வி.3 | 1 (40:1) த.வி.1 | 1 (40:1) சொ.வி:1 | 1 (40:1) சொ.வி:1 |
| 13. | திருஞானசம்பந்தர் திருவந்தாதி | 5 (காப்பு:1;17:1; 33:2) த.வி:5 | 2 (21:1;33:1) த.வி:2 | 2 (33.2) த.வி:2 | — |
| 14. | திருத்தொண்டர் திருவந்தாதி | 3 (3:1;7:1; 17:1) த வி:3 | 1 (25:1) த.வி:1 | 1 (25:1) த.வி:1 | — |
| 15. | திருநாவுக்கரசர் திருவேகாதாசாமாலை | 8 (2:1;6:1; 10:1;14:1; 18:1;26:2; | 1 (38:1) | 2 (26:1:38:1) | — |

| | | | | |
|---|---|---|---|---|
| | | 38:1<br>த.வி:8 | த.வி:1 | த.வி:2 |
| 16. | திருஞானசம்பந்தர் | 3<br>(13:1;17:1;<br>37:1)<br>த.வி: | 1<br>(17:1)<br>த.வி:1 | — |
| 17. | திருஞானசம்பந்தர்<br>திருமும்மணிக்கோவை | 3<br>(13:2;37:1)<br>த.வி:3 | 1<br>(37:1)<br>த.வி:1 | — |
| 18. | திருஞானசம்பந்தர் திருவுலாமாலை | 3<br>(25:2;29:1)<br>பு.க:2;<br>த.வி:1 | 2<br>(25:1;29:1)<br>த.வி:2 | — |
| 19. | கோயிற்றிருப்பண்யற் விருத்தம் | 1<br>(40:1)<br>த.வி:1 | — | 1<br>(40:1)<br>த.வி:1 |
| 20. | கோயினான் மணிமாலை | 1<br>(4:1)<br>இ.வி:1 | — | — |

| வ.எண். | உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கிய நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| 21. | திருஞானசம்பந்தர் திருச்சண்பை விருத்தம் | 1 (17:1) த.வி:1 | — | — | — |
| 22. | நம்பி ஆளுடையப் பிள்ளையார் | 2 (21:2) த.வி:2 | — | — | — |
| 23. | திருத்தொண்டத்தொகை | — | — | 2 (6:1;38:1) த.வி:2 | 2 (6:1;39:1) நூ.சி:1;த.வி:1 |
| 24. | பன்னிரண்டாம் திருமுறை—பெரியபுராணம் | 72 (காப்பு:2:4;5:1;6:1; 7:2;8:2;9:2;10:4; 11:2;12:1;15:2; 17:2;19:2;20:3; 21:2;23:3;24:4; 25:1;27:1;29:1; 30:1;31 2;34:6; 35:6;36:1;38:1; 39:3;40:9 நூ.சி.3;த.வி | 9 (15:1; 17:2; 19:2; 25:1; 36:1; 39:2) இ.பு.1 த.வி.8 | 34 (3:3;6:1; 17:1;20:1; 25:1;27:2; 29:1;30:1; 36·2;34:2; 35.6;80:1; 39:5;40.8) சொ.வி.2;பெ வி:2 பு.க.7.த.வி.23 | 6 (காப்பு:1:5:1; 18:1;30:1; 34:1;38:1) நூ.சி.1:த.வி.1 |

4.2. புராணங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| கந்தபுராணம் | 29<br>(காப்பு:1:9:4; 12:5;14:1; 16:1;18:2; 19:1;22:2; 24:4;29:1; 30:1;13:4; 36:2)<br>த.வி:29 | 5<br>(12:1:14:1: 19:1;36:1)<br>த.வி:5 | 14<br>(9:1;12:1; 22:3;24:4 31:3;36:2<br>இ.வி:2; பு.க.3; த.வி.9. | 1<br>(9:1)<br>பு.க1. |
| காஞ்சிபுராணம் | 6<br>(12:1;30:1; 31:1;37:3)<br>த.வி:5;பு.க.1 | 3<br>(12:1;30:1; 37:1)<br>பு.க.1;த.வி.2 | 1<br>(30:1)<br>த.வி.1 | — |
| கோயிற் புராணம் | 2<br>(16:1;32:1)<br>த.வி:2 | 1<br>(40:1)<br>த.வி:1 | 1<br>(32:1)<br>த.வி:1 | — |
| திருவிளையாடல் புராணம் | 23<br>(4:1;5:1;8:3; 12:1;13:1; 16:1;17:1; 18:1;20:1 21:2;24:1;25:2; 29:3;32:1;33:1; | 3<br>(12:1;16:1; 25:1) | 7<br>(3:1;5:1; 8:1;21:1; 32:1;33:1; 40:1) | — |

| வஎண். | உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கிய நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| | | 40:2) சொவி.2,நூ.சி.1 த.வி.20 | நூ.சி.1;த.வி.1 பு.க.1 | சொ.வி.1; இ.வி.1.த.வி:5 | |
| 5. | இலிங்கபுராணம் | 1 (30:1) | — | 1 (30:1) த.வி:1. | — |
| 6. | சீகாழித்தல புராணம் | — | — | 4 (25:4) த.வி:4 | 1 (25:1) த.வி:1 |
| 7. | திருத்தணிகைப்புராணம் | 1 (27:1) த.வி:1 | — | 3 (16:1; 27:1;30:1) த.வி:3 | — |
| 8. | பேரூர்ப்புராணம் | 1 (40:1) (த.வி:1 | — | 1 (40:1) த.வி:1 | |
| 9. | சேதுபுராணம் | 1 (32:1) த.வி:1 | — | — | — |
| 10. | திருக்கூவப்புராணம் | 2 (8:2) த.வி:2 | — | — | — |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| . | திருவாவடுதுறைப்புராணம் | 1 (20:1) த.வி:1 | — | — | — |
| | **4.3. பக்தி இலக்கியச் சிற்றிலக்கியங்கள்** | | | | |
| 1. | சிவானந்த மாலை | 1 (40:1) த.வி:1 | 1 (40:1) த.வி:1 | 1 (40:1) த.வி:1 | — |
| 2. | இஷ்டலிங்க அபிஷேக மாலை | 1 (10:1) த.வி:1 | — | 1 (35:1) த.வி:1 | — |
| 3. | சதமணிக்கோவை | 1 (40:1) த.வி. | — | 1 (40:1) த.வி. | — |
| 4. | சிதம்பர மும்மணிக்கோவை | 2 (5:1;24:1) தொ.வி.1; த வி.1. | 1 (24:1) த.வி:1 | — | — |
| 5. | திருவள்ளுவமாலை | 1 (32:1) த.வி:1 | — | 1 (32:1) த.வி.1 | — |
| 6. | நால்வர் நான்மணிமாலை | — | — | 2 (2:1;15:1) சொ.வி:1; த.வி:1 | 1 (37:1) த.வி.1 |

| வ.எண். | உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கிய நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| 7. | கோயில் மூத்த திருப்பதிகம் | 1 (20:1) த.வி. | — | — | — |
| 8. | சதமணிமாலை | 1 (காப்பு:1) த.வி:1 | — | — | — |
| 9. | சிதம்பரச் செய்யுட்கோவை | 1 (4:1) த.வி:1 | — | — | — |
| 10. | சிவஞானபாலய தேசிகர் பிள்ளைத்தமிழ் | — | — | — | 1 (3:1) பு.க:1 |
| 11. | தனித்திருக்குறுந்தொகை | — | 1 (2:1) த.வி:1 | — | — |
| 12. | திருவாரூர் நான்மணிமாலை | (13:1) சொ.வி:1 | — | — | — |
| 13. | திருவெங்கைக்கலம்பகம் | — | — | 1 (21:1) த.வி:1 | — |

| வ.எண். | உரையாசிரியர்கள் எடுத்தாண்ட இலக்கிய நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| | பிற இலக்கியங்கள் | | | | |
| 1. | திருத்தாண்டகம் | — | — | — | 1 (6:1) த.வி:1 |
| 2. | தேவாரத்திருவிருத்தம் | — | — | 1 (23;1) த.வி:1 | |

குறிப்பு :

தனி நிலையில் இருக்கும் எண் உரையாசிரியர்கள் மேற்கோள்களை எடுத்தாண்ட மொத்த எண்ணிக்கையையும், அடைப்புக்குறிக்குள் இருக்கும் எண்களில் முதல் எண் நால்வர் நான்மணிமாலையின் பாடல் உரையையும் அதனையடுத்து இடம்பெறும் எண் அப்பாடல்களின் உரையில் எத்தனை மேற்கோள்கள் இடம்பெறுகின்றன என்பதையும் குறிக்கிறது. நூ.சி-நூல் சிறப்புக் கூறல், இ.வி — இலக்கணவிளக்கம். சொ.வி. சொற்பொருள் விளக்கம், த.வி-தத்துவ விளக்கம், பு.க. — புராணக் கதை கூறல்.

பின்னிணைப்பு : 3

## இடம் சுட்டா மேற்கோள்கள்

| வ.எண். | பாடலடி | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தினசபாபதி |
|---|---|---|---|---|---|
| 1. | பனியா லிடியாற் | 4 | | | |
| 2. | தன்னாற் பிறராற் | (காப்பு:3; | | | |
| 3. | கருவிற்றுயர் | 30:1) | | | |
| 4. | நம்மையுடை யவர்கழற்கீர் | த வி:4. | | | |
| 1. | படிறின்றித் தனைத்தொடர்ந்தவர் | | 1<br>(14:1)<br>த.வி:1 | | |
| 1. | அரிவைகாரணத்தி னாலோ | | | 4 | |
| 2. | வறந்திடு பொய்கைமுன் | | | (15:1;19:1; | |
| 3. | நம்மையுடை யவர்கழற்கீழ் | | | 30:1;37:1) | |
| 4. | நிலைத்தொழில் சேரற | | | பு.க.1;த.வி:3 | |
| 1. | என்னை நினைந்து அடிமைகொண்டு | | | | 3 |
| 2. | முருகன் பிறவான் இறவான் | | | | (காப்பு:1;1:1;6:1) |
| 3. | எனக்கன்பு நின்பொருட்டு எய்தாதது என்கொல் | | | | த.வி:2:நூ.சி.1 |

குறிப்பு : முதல் எண் எடுத்தாண்ட மேற்கோள்களையும், அடைப்புக் குறிக்குள் இருக்கும் எண்களில் முதல் எண் நால்வர் நான்மணிமாலை பாடல் எண்ணையும் அதனை அடுத்துவரும் எண் எத்தனை இடம்சுட்டா மேற்கோள்கள் என்பதையும் குறிக்கிறது. த.வி–தத்துவ விளக்கம், பு.க–புராண கதை கூறல் ஆகியவற்றுக்கு இந்த மேற்கோள்கள் பயன்பட்டுள்ளன.

பின்னிணைப்பு : 4.1

## புராண வரலாறுகள்

## தம்பிரான் உரைவழி

| வ.எண். | புராண வரலாறுகள்—அகர நிரல் | எடுத்தாண்ட இடம் (பாடல்) |
|---|---|---|
| 1. | அகப்படுமணி மீன் அரற்கென விடுத்தவர் அதிபத்த நாயனார். | 12 |
| 2. | அப்பூதியடிகள் வரலாறு | 6 |
| 3. | அருமகள் நறும்பூங்கருமயிர் உதவியவர் மானக்கஞ்சாற நாயனார் | 12 |
| 4. | ஆளுடைய பிள்ளையார் ஞானப்பால் உண்ட வரலாறு | 1 |
| 5. | ஆளுடைய பிள்ளையார் முத்துச் சிவிகை பெற்ற வரலாறு | 29 |
| 6. | ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்தில் எடுத்த வரலாறு | 27 |
| 7. | இராவணன் கயிலையை எடுத்தது | 12 |
| 8. | இளமுலை மாதர் வளமை துறந்தவர், திருநீலகண்ட நாயனார் | 12 |
| 9. | உபமன்னியுமுனிவர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலையை அடைந்தமையைத் தரிசித்த வரலாறு | 23 |
| 10. | உபமன்னியுமுனிவர் பாற்கடல் உண்ட வரலாறு | 23 |
| 11. | உமாதேவியார் சிவபெருமானது மெய்யைப் பகிர்ந்து கொண்ட வரலாறு | 4 |
| 12. | குற்றம் செய்த சுற்றங்களைந்தவர், கோட்புலி நாயனார் | 12 |
| 13. | கோக்கிலிக்காம நாயனார் வயிற்றிடைக் குத்திக் கொண்டமை | 15 |

பின்னிணைப்பு 4.2.

## புராண வரலாறுகள்

## வை. இரத்தினசபாபதி உரைவழி

| வ.எண். | புராண வரலாறுகள் - அகர நிரல் | எடுத்தாண்ட இடம் |
|---|---|---|
| 1. | அகப்படு மணி மீன் அரற்கென விடுத்த அதி பத்த நாயனார் வரலாறு | 12 |
| 2. | அப்பூதி அடிகள் வரலாறு | 38 |
| 3. | அருமகள் நறும்பூங் கருமயிர் உதவிய மானக் கஞ்சாற நாயனார் வரலாறு | 12 |
| 4. | ஆண்பனையைப் பெண் பனையாக மாற்றிய வரலாறு | 17 |
| 5. | ஆற்றில் இட்ட பொன்னைக் குளத்தில் பெற்ற வரலாறு | 27 |
| 6. | இராவணன் கயிலையை எடுத்த வரலாறு | 12 |
| 7. | இளமுலை மாதர் வளமை துறந்த திருநீல கண்டர் வரலாறு | 12 |
| 8. | உபமன்யு முனிவர் சுந்தரர் கயிலை செல்வதைக் கண்ட வரலாறு | 23 |
| 9. | உபமன்யு முனிவர் பாற்கடல் உண்ட வரலாறு | 23 |
| 10. | ஏரியில் ஏடிட்ட வரலாறு | 25 |
| 11. | குற்றம் செய்த சுற்றம் களைந்த கோட்புலி நாயனார் வரலாறு | 12 |
| 12. | கோக்கலிக்காமர் வயிற்றிடைக் குத்திக் கொண்ட வரலாறு | 15 |
| 13. | கோவண நேர்தமை நிறுத்திக் கொடுத்த அமர் நீதி நாயனார் வரலாறு | 12 |
| 14. | சிலையிடைத் தலைமோதிய திருக்குறிப்புத் தொண்டர் வரலாறு | 12 |

பின்னிணைப்பு: 5 உரைகளில் இலக்கணக்கூறுகள்

இலக்கண மேற்கோள்கள் விளக்க அட்டவணை

| வஎண். | எடுத்தாண்ட இலக்கண நூல் பெயர் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| 1. | தொல்காப்பியம் | 5 (காப்பு:1; 4:1;6:1; 10:1;34:1) சொ வி:2; இ.வி:4. | 3 (காப்பு:10:1; 34:1) இ:வி:3 | 6 (காப்பு:1;4:1; 24:1;31:1; 34:1;35:1) சொ.வி:2; இ.வி:4 | 4 (6:1;17:1; 35:1;21:1) சொ.வி:2. த.வி.2; |
| 2. | நன்னூல் | — | — | 4 (24:1;2:1; 33;1;37:1) இ.வி:3; த.வி:1 | — |
| 3. | புறப்பொருள் வெண்பாமாலை | — | — | — | 1 (24:1) சொ.வி:1 |
| 4. | யாப்பருங்கலக்காரிகை | 2 (6:1;25:1) இ.வி:2 | 2 (6 1;25:1) இ.வி:2 | 1 (36:1) இ.வி:1 | — |

குறிப்பு : தனி நிலையில் இருக்கும் எண் உரையாசிரியர்கள் மேற்கோள்களை எடுத்தாண்ட மொத்த எண்ணிக்கையும், அடைப்புக்குறிக்குள் இருக்கும் எண்களில் முதல் எண் நால்வர் நான்மணிமாலையின் பாடல் உரையையும் அதனையடுத்து இடம்பெறும் எண் அப்பாடல்களின் உரையில் எத்தனை மேற்கோள்கள் இடம்பெறுகின்றன என்பதையும் குறிக்கிறது இவை சொ.வி— சொற்பொருள் விளக்கம், இ.வி- இலக்கண விளக்கம், த வி— தத்துவ விளக்கம் போன்ற நோக்கத்திற்கு எடுத்தாண்ட மேற்கோள்கள்.

# இயல் நான்கு

பின்னிணைப்பு : 6

உரைகளில் தத்துவக்கூறுகள்

தத்துவ மேற்கோள்கள் விளக்க அட்டவணை

| வ.எண். | எடுத்தாண்ட தத்துவ நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| 1. | இறைவனூற்பயன் | 3 (11:1;24:1; 14:1) த.வி:3. | — | — | — |
| 2. | உண்மை விளக்கம் | 2 (24:1;30:1) த.வி:2. | 2 (24:1;30:1) த.வி:2. | 1 (30·1) த.வி:1 | — |
| 3. | சங்கற்ப நிராகரணத் திருக்குறள் | 2 (39:1;40:1) த.வி:2 | — | 1 (40:1) த.வி.1 | — |
| 4. | சங்கற்ப நிராகரணம் | 1 (40:1) த.வி:1 | — | 1 (40:1) த.வி:1 | — |
| 5. | சிவஞான சித்தியார் | 14 (காப்பு:1:2; 4:3;11:2; 14:2;20:1; 40:3;38:1) த.வி.14 | 4 (14:1;38:1; 40:1;2:1) த வி:4 | 5 (38:1;40:3; 22:1) த.வி.5 | — |
| 6. | சிவஞான தீபம் | 1 (காப்பு:1) | — | — | — |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7. | சிவஞானபோதம் | 8 (5:1;8:1; 14:2;31:1; 38:1;40:2) சொ.வி:1; இ.வி.1; த.வி:6 | 3 (14:1;38:1; 40:1) த.வி:3 | 4 (5:1;38:1; 40:2) சொ.வி:1; த.வி:3 | |
| 8. | சிவதருமோத்திரம் | 2 (14:2) த.வி:2 | — | — | — |
| 9. | சிவப்பிரகாசம் | 1 (2:1) த.வி:1 | 1 (2:1) த.வி:1 | — | — |
| 10. | சிவப்பிரகாசவிகாசம் | 1 (11:1) த.வி:1 | — | — | — |
| 12. | சைவசமய நெறி | 2 (20:1;34:1) த.வி:2 | 1 (34:1) த.வி:1 | — | — |
| 12. | சௌந்தரியலகரி | 2 (காப்பு:2) த.வி:2 | — | — | — |
| 13. | திருக்களிற்றுப்படியார் | 6 (5:1;12:1; 32:1;39:1; 40:1) த.வி:6 | 3 (12:1;39:1; 40:1) த.வி:3 | 3 (5:1;39:1; 40:1) த.வி:3 | 1 (5:1) த.வி:1 |

| வ.எண். | எடுத்தாண்ட தத்துவ நூல்கள் | சுவாமிகள் | புன்னை வனநாதன் | தம்பிரான் | வை. இரத்தின சபாபதி |
|---|---|---|---|---|---|
| 14. | திருவருட்பயன் | 1 (7:1) த.வி:1 | — | — | — |
| 15. | திருவுந்தியார் | 1 (15:1) த.வி.1 | — | — | — |
| 16. | பிரபுலிங்கலீலை | 2 (37:1;40:1) த.வி:2 | — | 2 (37:1;40:1) த.வி:2 | — |
| 17. | வருத்தமறவுய்யும்வழி | 1 (காப்பு:1) த.வி:1 | — | — | — |
| 18. | வாயு சங்கிதை | 3 (23:3) த.வி:3 | — | — | — |
| 19. | வைராக்கிய சதகம் | 1 (40:1) த.வி:1 | 1 (40:1) த.வி:1 | 1 (40:1) த.வி:1 | — |

குறிப்பு : தனி நிலையில் இருக்கும் எண் உரையாசிரியர்கள் மேற்கோள்களை எடுத்தாண்ட மொத்த எண்ணிக்கையையும், அடைப்புக்குறிக்குள் இருக்கும் எண்களில் முதல் எண் நால்வர் நான்மணிமாலையின் பாடல் உரையையும் அதனையடுத்து இடம் பெறும் எண் அப்பாடல்களின் உரையில் எத்தனை மேற்கோள்கள் இடம்பெறுகின்றன என்பதையும் குறிக்கிறது. த.வி–தத்துவ விளக்கம், சொ.வி சொற்பொருள் விளக்கம், இ.வி–இலக்கண விளக்கம் ஆகியன மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ள நோக்கத்தைக் குறிக்கின்றன.

பின்னிணைப்பு : 7

## சிவப்பிரகாசர் துதிப்பாடல்கள்

புனையெழில் வடிவி னாளோர் பொதுமகட் கண்ட மைந்தர்
மனமெனப் புலவர் நெஞ்ச மருளுமின் தமிழ்ப்பா மாலை
சினவிடை யவற்கே சாத்துஞ் சிவப்பிர காச னென்னு
முனைவனெம் மடிகள் பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்.

*— சிவப்பிரகாச சுவாமிகள் துதி சீகாளத்தி புராணம்*

எவர்க்கும் மெய்ஞ்ஞான ஜோதி ஈயும் மாணிக்கமாகி
உவப்போடு வெறுப்புமாகி உற்றிடும் விடயத்து எய்தும்
பவப்பெரும் புணரிநீந்தப் பாரதியாகும் எங்கள்
சிவப்பிர காச தேவன் திருவடி சென்னி சேர்ப்பாம்.

*— இஷ்டலிங்க அபிஷேகமாலை, ''குருபூஜைமலர்''*
*மயிலம்: பொம்மபுர ஆதினம், 1965*

ஓங்கு மாடத் துறுவதா யனத்தோ ரணாங்கு சிரநீட்ட
லூற்ற போதாங் கடையரவ வுடற்கோ ளிரண்டு முவள் கூந்தற்
பாங்கர் வதிபங்கு சங்கண்டு பதுங்கிச் சுருண்டை விதுநம்மைப்
பார்த்தே யெதிர்க்க முயல்வ தென்றப் பாந்தள் கலங்கி
நமக்கிது போல்
வாங்கு மரிய வொரு சிறிய கிரகமேனும் வாய்ந்திலதான்
மற்றேழ் கிரகங்கட்குரிய மாண்புற்றியமென் றேகவளந்
தாங்குந் துறைமங் கலத்தோங்குந் தலைவா தாலோ தாலேலோ
சரண வீரடிவீ டெனும் வீர சைவா தாலோ தாலேலோ

*— அப்பாவையர், சிவப்பிரகாச சுவாமிகள் பிள்ளைத்தமிழ்*

*தாலப்பருவம், பா. 1*

# நால்வர் நான்மணி மாலை

## காப்பு

### குறள் வெண்பா

எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு—நாவான்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான் றண்டை
வெறித்தண் கமலமே வீடு. 1

## திருநாவுக்கரசர்

### கட்டளைக் கலித்துறை

வீட்டிற்கு வாயி லெனுந்தொடை சாத்துசொல்
வேந்தபொது
வாட்டிற்கு வல்ல னொருவற்கு ஞான வமுதுதவி
நாட்டிற்கி லாத குடர்நோய் நினக்குமுன் னல்கினுமென்
பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப் படியினுமே. 2

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

படியிலா நின்பாட்டி லாரூர நனிவிருப்பன் பரம னென்ப
தடியனே னறிந்தனன்வான் றொழுமீச னினைத்
தடுத்தாட் கொண்டு மன்றித்
தொடியுலா மென்கைமட மாதர்பா னினக்காகத்
தூது சென்று
மிடியிலா மனைகடொறு மிரந்திட்டு முழன்றமையால்
விளங்கு மாறே. 3

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
வாதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்

வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேந்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமும் கரைந்துகக் கண்க
டொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த வன்னையோ முன்னின்—னிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா
விங்குயர்ந்தா ளார்சொல் லெனக்கு.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக் கலித்துறை

எனக்கன்பு நின்பொருட் டெய்தாத
தென்கொல்வெள் ளேறுடையான்
றனக்கன்பு செய்திருத் தாண்டக
வேந்தவித் தாரணியி
னினக்கன்பு செய்கின்ற வப்பூதி
யைச்சிவ நேசமுறு
மினர்க்கன்பு செய்நம்பி யாரூர
னேத்து மியல்பறிந்தே.

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அறிந்து செல்வ முடையானா
மளகைப் பதியாற் றோழமைகொண்
டுறழ்ந்த கல்வி யுடையானு
மொருவன் வேண்டு மெனவிருந்து
துறந்த முனிவர் தொழும்பரவை
துணைவா நினைத்தோ ழமைகொண்டான்
சிறந்த வறிவு வடிவமாய்த்
திகழு நுதற்கட் பெருமானே.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள
மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே
வாசக மதற்கு வாச்சியந்
தூசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே. 8

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

இடுகாட்டுண் மாத ரெலும்பிற் புரண்மால்
சுடுகாட்டு ளாடுவாற் சுட்டி—னொடுகாட்டுஞ்
சம்பந்தா வென்புநின்பாற் றந்தாக்கிக் கொண்டிலனென்
கும்பந்தா மென்னுமுலைக் கொம்பு. 9

## திருநாவுக்கரசர்

### கட்டளைக் கலித்துறை

கொள்ளைக் கதிர்முத்தின் பந்தருஞ் சின்னமுங்
கொள்ளுமொரு
பிள்ளைக் கதுதகு நாவர சாய பெருந்தகையோய்
கள்ளைக் குவளை யுமிழ்விழி யிற்படிக் காசொன்றுநீ
வள்ளைக் குழையுமை பங்காளர் கையிலென்
வாங்கினையே 10

## சுந்தரர்

### எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வாங்குசிலை புரையுமுட லெனுங்குளத்தின் மூல
மலமெனுமோர் வெங்கரவின் பகுவாயி னின்றுந்
தீங்கிலுயி ரெனும்பனவக் குலமகனை யாதி
திரோதாயி யென்னுமொரு வெந்திறற்கூற் றுவனா
லோங்குறுநா தாந்தமெனப் பெயரியவக் கரையி
உமிழ்வித்துச் சிவமெனுமோர் தந்தையொடுங்
கூட்டாய்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக்
குண்டையூர் நென்மலைமுற் கொண்டவருட்
கடலே. 11

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

கடனிற வண்ணன் கண்ணொன் றிடந்து
மறைச்சிலம் பரற்று மலரடிக் கணியப்
பரிதி கொடுத்த சுருதிநா யகற்கு
முடிவிளக் கெரித்தும் கடிமலர்க் கோதையைச்
5 சுரிகுழற் கருங்கட் டுணைவியை யளித்து
மருமக ணறும்பூங் கருமயி ருதவியு
நென்முளை வாரி யின்னமு தருத்தியுங்
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்து
மகப்படு மணிமீ னரற்கென விடுத்தும்
10 பூட்டி யரிவா ளூட்டி யரிந்துந்
தலையுடை யொலிக்குஞ் சிலையிடை மோதியு
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்துந்
தந்தையைத் தடிந்து மைந்தனைக் கொன்றுங்
குற்றஞ் செய்த சுற்றங் களைந்தும்
15 பூக்கொளு மாதின் மூக்கினை யரிந்து
மிளமுலை மாதர் வளமை துறந்தும்
பண்டைநா ளொருசிலர் தொண்ட ராயினர்
செங்கண்மா றடக்கையிற் சங்க நாண
முட்டாட் டாமரை முருக்கவிழ் மலர்மேல்
20 வலம்புரி கிடக்கும் வாதவூ ரன்ப
பாடும் பணிநீ கூடும் பொருட்டு
மதுரைமா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியின் மாற்றடி பட்டு
25 நின்னைத் தொண்ட னென்னக் கொண்டன
னிருக்கு மடுக்க லரக்க னெடுப்ப
முலைபொர வரைபொரு மொய்ம்பின்
மலைமக டழுவ மனமகிழ் வோனே. 12

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

மகிழ்ச்சி மிகவுண்டு போலுமெதிர் வந்து
புகழ்ச்சியொடு நீபாடும் போது—நெகிழ்ச்சி மலர்ச்
சந்தையினும் வண்டிரையுந் தண்புகலிச் சம்பந்தா
தந்தையினும் பால்கொடுத்த தாய்க்கு. 1

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

தாயிலி யாகுஞ் சிவபெரு மான்றனைத் தானெனுமோர்
கோயிலி னாரறி வாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலி னாணவ மாகுங் கபாடமு மன்றிறந்து
நோயிலி யாகிய சொல்லிறை காட்டுவ னோக்குதற்கே. 14

## சுந்தரர்

### எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

நோக்குறு நுதலோ னின்னிடை விருப்பா
 னூற்பக வன்னநுண் மருங்குல்
வார்க்குவி முலைமென் மகளிர்தம் புலவி
 மாற்றுவான் சென்றன னென்றால்
கோக்கலிக் காமன் வயிற்றிடைக் குத்திக்
 கொண்டதே துக்குநீ புகலாய்
காக்கரு மதலை விழுங்கிய முதலை
 கான்றிடத் தோன்றுநா வலனே. 15

## மாணிக்க வாசகர்

### நேரிசையாசிரியப்பா

வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கரு ணைக்கடன்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க
வாசக னெனுமொரு மாமழை பொழிந்த
5 திருவா சகமெனும் பெருநீ ரொழுகி
யோதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து
நாவெனு மதகி னடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
வுளமெனு நிலம்புக வூன்றிய வன்பாம்
10 வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் றருமே. 16

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

பயனாகு நல்லாண் பனைக்குவிடத் திற்கு
மயிலாகு நோய்க்கு மருந்தா — முயிராகுஞ்
சிந்துமெலும் பிற்குச் சரபுரத்து நாவலன்சம்
பந்த னியம்புதிருப் பாட்டு. 17

## திருநாவுக்கரசர்

### கட்டளைக் கலித்துறை

பாட்டான் மறைபுக ழும்பிறை சூடியைப் பாடிமகி
ழூட்டா மகிழ்சொல் லிறைவனைப் பாடி யுவப்புறுக்க
வேட்டான் மலிபெருங் கல்லவன் போல மிதப்பனெனப்
பூட்டா மறிதிரை வார்கடற் கேவிழுப் போதுவனே. 18

## சுந்தரர்

### எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

போத முண்ட பிள்ளை யென்பு
பொருகண் மாது செய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மன்னர்
கன்மி தப்ப வுய்த்ததோ
வாய்தி றந்து முதலை கக்க
மகனை நீய ழைத்ததோ
யாது நம்பி யரிது நன்றெ
னக்கி யம்ப வேண்டுமே. 19

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

வேண்டுநின் னடியார் மெய்யன் பெனக்கு
மருள்செய் சிவனே யலந்தே னந்தோ
முறையோ முறையோ விறையோ னேயென்
றழுது செம்பொ னம்பலக் கூத்த
5 னருளாற் பெற்ற வன்பினி லொருசிறி
தடிய னேற்கு மருளல் வேண்டும்
நீயே கோட னின்னருட் பெருக்கிற்
கேற்ற தன்றிள வேறுகந் தேறியைப்
பரிமா மிசைவரப் பண்ணிய வித்தக
10 திருந்திய வேத சிரப்பொருண் முழுதும்
பெருந்துறை யிடத்துப் பெருஞ்சீர்க்
குருந்துறு நீழலிற் கொள்ளைகொள் வோயே 20

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்
தள்ளுந் திருஞான சம்பந்தா—வெள்ளமிடு
மேடேறப் பால்குறைந்த தென்றழுவ ரேகழுவின்
காடேறப் புக்கவரு கர். 21

## திருநாவுக்கரசர்

### கட்டளைக் கலித்துறை

அருகக் கடல்கடந் தேறிய தோசிலை யம்பியெனப்
பெருகக் கடல்கடந் தேறிய தோசொல் பெருமிடறு
கருகக் கடல்விட முண்டோ னடியிற் கசிந்துமன
முருகக் கடலன்பு பெற்றசொல் வேந்த வுனக்கரிதே. 22

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

உனற்க ரும்புகழ் மேவிய சுந்தர னும்பன் மீதிவரா
நினைப்ப ருங்கயி லாயம டைந்தமை நின்று காண்குறவே
எனக்கு வந்துறு மோமக வென்றமு கின்ற நாளலையா
றனித்த ருந்துபு மாலையு மிழ்ந்திடு தம்பி ரானலனே. 23

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ
மனநின் றுருக்கு மதுர வாசக
கலங்குறு புலனெறி விலங்குறு வீர
திங்கள் வார்சடைத் தெய்வ நாயக
5 னொருகலை யேனு முணரா னஃதான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணிற்
கண்களோ வொன்று காலையிற் காணு
மாலையி லொன்று வயங்கித் தோன்றும்
பழிப்பி னொான்று விழிப்பி னெரியு
10 மாயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யு ளெழுதின னதனாற்
புகழ்ச்சி விருப்பன் போலு
மிகழ்ச்சி யறியா வென்பணி வானே. 24

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

வானும் புகழ்புகலி மன்னன் றொடர்பொன்று
தேனுந் திதழியோன் சீரேடு—தானுங்
கரியாய் மொழியுங் கரியாய் விடாம
லெரியா ரழல்வீழ்ந் தெழுந்து. 25

## திருநாவுக்கரசர்

### கட்டளைக் கலித்துறை

துடைவாழை மேன்மட வாரல்குற் பாம்பு தொடமயங்கி
நடைவாய் பிணமெனப் பட்டார் பெறுகிலர் நச்சுகுலை
யுடைவாழை மேலூர கந்தீண்ட மாய்ந்த வொருவனுயிர்
அடைவா னருள்புரி யுந்திரு நாவுக் கரசினையே. 26

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அரசன் பரிமேல் வரநெடுநல்
  யானை யெருத்தத் தமர்ந்துபோய்
வாதன் கயிலை மலையடைந்த
  மணியே மணிநீ ரிடுபசும்பொன்
திரைசங் கெறியும் குளத்துவரச்
  செங்கற் செம்பொ னாப்பாடும்
பரிசின் றெனக்குன் செம்பவளத்
  திருவாய் மலர்ந்து பகர்வாயே. 27

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறாரி னழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெறாது பெற்றார் போலக்
5 களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே
அன்ன மாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூ ரன்ப வாத லாலே
தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்
'நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
10 நெஞ்சத் தவல மில'ரெனும்
செஞ்சொற் பொருளின் தேற்றறிந் தேனே. 28

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

தேனே றலர்சூடிச் சில்பலிக்கென் றூர்திரியு
மானேறி யாண்டுப்பெற் றான்கொனீ—தானேறும்
வெள்ளைமணி யென்று வினவுவோம் வாங்கியவப்
பிள்ளையையாங் காணப் பெறின். 29

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

பெற்றா னினைப்பெற் றவர்போற் பெறலும்
பிறப்பதுண்டே
னற்றா ரணியி னினைப்போற் பிறப்பது நல்லகண்டாய்
செற்றார் புரமெரி செய்தவில் வீரன் திருப்பெயரே
பற்றா மறிவெண் டிரைக்கட னீந்திய பாவலனே 30

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பாவாய்ப் பொழிந்த வானமுதப்
பவளத் திருவாய் நம்பிநீ
சேவாய்ப் பொருதுந் தருமமுடைத்
தேவன் மலைக்குப் போம்பொழுது
காவாய்ப் பயந்த தடக்கைமலர்க்
கழறிற் றறிவார் கடாவிவரு
மாவாய்ப் பிறக்கக் கிடையாதே
மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே. 31

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தி
னீழல்வா யுண்ட நிகரிலா னந்தத்
தேன்றேக் கெறியுஞ் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
5 யாவரு மோது மியற்கைத் தாதலிற்
பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை
மட்கல நிகர்க்கு மதுர வாசக
மோதின் முத்தி யுறுபயன்
வேத மோதின் மெய்ப்பய னறமே. 32

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானொ டூர்ந்தா னிடை'யை—மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து. 33

## திருநாவுக்கரசர்

கட்டளைக்கலித்துறை

ஊர்ந்து வருமிள வேறுடை யான்ற னுளத்தருளாற்
சார்ந்து சமண்விட் டுறுமுனக் கேவருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரு நாவர சேநல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறுஞ் செல்வமுமே.
34

## சுந்தரர்

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

செல்வநல் லொற்றி யூரன்
செய்யசங் கிலியா லார்த்து
மல்லலம் பரவை தன்கண்
மாழ்குற வமிழ்த்து மேனு
மல்லுநன் பகலு நீங்கா
தவன்மகி ழடியி லெய்தி
நல்லவின் படைந்தி ருப்ப
னம்பியா ரூரன் றானே. 35

## மாணிக்கவாசகர்

நேரிசையாசிரியப்பா

தானே முத்தி தருகுவன் சிவனவ
னடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே. 36

## திருஞான சம்பந்தர்

நேரிசை வெண்பா

வல்லார் பிறப்பறுப்பர் வண்மை நலங்கல்வி
நல்லா தரவின்ப ஞானங்க—ளெல்லாந்
திருஞான சம்பந்தன் சேவடியே யென்னு
மொருஞான சம்பந்த முற்று. 37

## திருநாவுக்கரசர்

கட்டளைக்கலித்துறை

உற்றா னலன்றவந் தீயினின் றானல னூண்புனலா
வற்றா னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்றா னெழுதியுங் கூறியு மேயென்றுந் துன்பில்பதம்
பெற்ற னொருநம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே.
38

சுந்தரர்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பெருமிழலைக் குறும்பரெனும் பரம யோகி
பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்றா னென்றால்
விளங்கிழையா ரிருவரொடு முயங்க லாமோ
உரைமதிநின் றனைவெறுப்ப தென்கொ னின்னை
யுடையானுக் கடுத்தசெய லுனக்கு மாயிற்
சுரர்முனிவர் பரவலுறும் பெருஞ்சீர்த் தொண்டத்
தொகைசெய்தோ யறமுதனால் வகைசெய் தோயே
39

மாணிக்கவாசகர்

நேரிசையாசிரியப்பா

செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே 40